## ஸ்ரீ பஞ்சதசப்பிரகரணம்.

சமஸ்கிருதமூலமும், பதார்த்தமும், சம்ஸ்கிரு
தவியாக்கியானத்திற்குச்சரியான தமிழ் உரை
யும், அதற்கு ஹிந்திபாஷைமுதலியவற்றினின்
றும் எடுத்தெழுதப்பட்ட விளக்கவுரையும் சே
ர்த்து அச்சிடப்படும். தமிழில் முக்கியமும் மத்தி
மமும் சிறிதுமாகிய மூன்றுவித பிரசங்கங்கள்
நூலினுள் வைக்கப்படும். இவ்வளவு சிறப்பாக
சம்ஸ்கிருதத்திலாவது தமிழிலாவது இதுவரை
யிலும் ஒரு நூலும் அச்சிடப்பட்டிராது. சம்ஸ
கிருதவாணியையும் அப்படியே வேதாந்த வி
த்தையையும் எளிதாய் அறியும்பொருட்டு அபூ
ருவ மாதிரியாகச் செய்யப்பட்டிருக்கிறது.
பெரிதாய் சுமார் 2,000 பக்கங்களுள்ளதாய்
உ-கட்டடமாய்ச் செய்யப்படும். அட்டையும்
மிக அழகாய்ச் செய்யப்படும். இதன் விலை
ரூ 15 ஆகும். முன்கையொப்ப மனுப்புவோ
ர்களுக்கு ரூ 14 க்குக் கொடுக்கப்படும். இப்பு
ஸ்தகத்தின் மாதிரி பார்க்க விரும்புவோர் எம
க்கு எழுதுவார்களாயின் தபாற்கூலியின்றிச் சி
ல பக்கங்கள் அனுப்பப்படும்.

நா. ஸ்ரீநிவாசய்யர்.

☞ இப்புத்தகம் வேண்டியவர்கள் மதுரை வ
டக்காவணிமூல வீதி மகா-௱-௱-ஸ்ரீ வக்கீல்
பி. சுப்பராய அய்யர் அவர்கள் வீட்டிலிருக்கு
ம் தொண்டி—நா. ஸ்ரீநிவாசய்யருக்கு எழு
துக.

உ

ஸ்ரீ

# விசாரசந்திரோதயம்

இஃது

தொண்டி-நா. ஸ்ரீநிவாசய்யரவர்கள்

வேண்டுகோளின்படி

தஞ்சைமாநகரம்

வெ. குப்புஸாமி ராஜூ

அவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு

திருநெல்வேலி-சிவராமசுப்பிரமணிய

சாஸ்திரியவர்கள் பார்வையில்

———:o:———

ஷை-நா. ஸ்ரீநிவாசய்யரவர்களால்

மதுரை

காசிம் பிரசில் அச்சிடப்பட்டது

விஜயஞு கார்த்திகைமீ



இதன் விலை ரூ. க.

ஓம் கணேசாயநம:.

## முகவுரை.

எல்லாமதங்களினும் முதன்மைபெற்று விளங்கும் ஸ்ரீ வேதாந்த சித்தாந்தத்தை அறிதற் பொருட்டு கனிஷ்ட மத்திம அதிகாரிகளுக்காக அநேக சம்ஸ்கிருத பிராகிருத நூல்கள் இருக்கின்றன. ஆனால் உள்ளத்தில் விசேஷ சங்கைகளெழும்பாத மந்தமதியுள்ள பரம ஆஸ்திகர்களாகிய சித்தசுத்தியுடைய வுத்தம அதிகாரிகளின் பொருட்டுச் சிறிதும், மேன்மையுடையதும், கடினமில்லாததும், விரிந்த வேதாந்தப் பிரக்கிரியைகளுள்ளதுமாகிய ஓர் நூல், தமிழில் இதுகாறும் வெளிப்படவில்லையென் றுணர்ந்து அவ்வியல்பினதாய் ஹிந்திபாஷையில் மகாத்துமா பிரமநிஷ்ட பண்டித ஸ்ரீ பீதாம்பரஜீயவர்களாற் செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீ விசார சந்திரோதயமென்னு மிந்நூலானது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. வினாவிடையாகிய இந்நூலிற் கலையெனப் பெயரிய பதினாறு பிரகரணங்க ளிருக்கின்றன. அவற்றிற்கு ஆங்

காங்கு டிப்பணியென்னும் விளக்கவுரையும்
செய்யப்பட்டிருக்கின்றது. இதில் முமுட்சு
க்களுக்குப் பிரமசாட்சாத்காரத்தில் மிகவு மு
பயோகமுள்ளவை யாவும் சுருக்கமாய் எழுத
ப்பட்டிருக்கின்றன. கடைசியாகிய பதினாறா
வது கலையில் அநேக வேதாந்த பதார்த்தங்க
ளின் பெயர்களும் அவற்றின் சுருக்கமாகிய
இலட்சணங்களும் வைக்கப்பட்டிருக்கிறன
இந்நூலிற் பழகுவோர்களுக்கு மற்றப் பெரிய
நூல்களை விசாரிப்பதில் மிக்க திறமையுண்டா
கும். வேதாந்தத்தை அப்பியசிக்க ஆரம்பிப்பவ
ர்களுக்கு இந்நூலைப்போ லுபகாரமுடையது
வேறில்லை. பெரும்பாலும் அப்பியாசிகளை மு
ன்னிட்டும், இதனால் ஹிந்திபாஷையின் ந
டையும் பழகத்தக்கதா யிருக்கவேண்டுமென்று
சிலர் கேட்டுக்கொண்டமையாலும், இது நே
ரான மொழிபெயர்ப்பாய் மிகவும் எளிதான ந
டையிற் செய்யப்பட்டது. இந்நூலைப் பிரமநி
ஷ்டராகிய குருமுகமாகப் படிக்கும் அல்லது
அதன் பொருளை யுள்ளத்தி லமைக்கும் முமுட்
சுக்களின் உள்ளமென்னும் ஆகாயத்தில் ஞா

னமென்னும் யௌவனுவஸ்தையைப் பூண்ட விசாரமென்னுஞ் சந்திரனுதயமாய்ச், சந்தேக விபரீதங்களோடு அஞ்ஞானமென்னு மிருளைத் துறக்கும். இக்காரணத்தாற்றான் இதற்கு விசாரசந்திரோதய மென்னும் பெயரிடப்பட்டது. இதன் விஷயம் பின்வரு மட்டவணையிற் காண்க. இதிலேதேனும் எழுத்துப்பிழை சொற்பிழைக ளிருக்குமாயின் அவற்றைப் பெரியோர்கள், "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா--லின்மை யரிதே வெளிறு" "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண் மிகைநாடி மிக்க கொளல்" என்னும் செய்யுட்களின் கருத்தை யுட்கொண்டவர்களாய்ச் சேர்த்துப் படித்துக் கொள்வார்களென நம்புகிறேன்.

த. வெ. குப்புஸாமிராஜு.

# அட்டவணை.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 24 | 2-3 | பரிசின்னம் | பரிச்சின்னம் |
| 37 | 3 | பூதத்திற்ம்கும் | பூதத்திற்கும் |
| 45 | 5 | மிருக்கின்றது | மிருக்கின்றது |
| 51 | 16 | உண்டாகா | உண்டாகாத |
| 64 | 13 | இந்ததேக | இந்தத்தேக |
| 80 | 8 | இந்தபதினேழு | இந்தப் பதினேழு |
| 80 | 17 | பிரகாசிக்கிறது | பிரகாசிப்பிக்கிறது |
| 82 | 16 | பிரகாசிப்பதாய் | பிரகாசிப்பிப்பதாய் |
| 93 | 12 | கிரியைக்குகர்த்தா | கிரியைக்குக்கர்த்தா |
| 94 | 4 | இலிகேதங் | இலிங்கதேக |
| ,, | 18 | அதனின்றும் | அதினின்றும் |
| 95 | 15 | ஷை | ஷை |
| 96 | 15 | என்னுடைவு | என்னுடையவ |
| 105 | 8 | சொப்பனடர்வ தாதிகளைக் ... | சொப்பனம் இழுப்பு முதலிய வற்றைக் ... |
| 106 | 1 | கிரம்பி சரீர | கிரம்பிச் சரீர |
| 122 | 3 | இபதிறென்கு | இப்பதிறென்கு |
| 148 | 4 | கடகாச | கடாகாச |
| 155 | 4 | பார்க்கும | பார்க்கும் |
| 159 | 7 | ஜகத்திற்கு | ஜகத்திற்குப் |
| 160 | 9 | சம்பந்தியத்திய | சம்பந்தியத்தியா |
| 178 | 12 | வினா:— | வினா:— க. |
| 179 | 2 | ஆனமாவிற்கு | ஆன்மாவிற்குத் |
| 211 | 4 | இலக்ஷனை | இலக்ஷணை |

| | | | |
|---|---|---|---|
| 224 | 6 | திருஷ்டாம் | திருஷ்டாந்தம் |
| 225 | 5 | அந்த | அந்தச் |
| 233 | 5 | ஆநுரூத | ஆநுகூதமாயிருக்கும் ... |
| 252 | 5 | இம்மூவ்வரும் | இம்மூவரும் |
| 270 | 15 | விதிபூர்வமாக | விதிபூர்வகமாகச் |
| 274 | 16 | மிருகும் | மிருக்கும் |
| 279 | 9 | ஸ்தானத்தினுலுள்ள | ஸ்தானத்திலுள்ள |
| ,, | ,, | பிராப்த | பிராரப்த |
| 289 | 10 | பரமார்த்ததிசை | பரமார்த்தசை |
| 294 | 7 | யோகாங்களால் | யோகாங்கங்களால் |
| 301 | 12 | புண்ணிபம்:— | புண்ணியம். |
| 303 | 9 | உபாசர்களது | உபாசகர்களது |
| 304 | 2 | அஷ்டான | அதிஷ்டான |
| 310 | 5 | பரைவாகாக்கிய | பரைவாக்காகிய |
| 313 | 10 | பிரமாணந்த | பரமாநந்த |
| 325 | 13 | அக்கியின் | அக்கினியின் |
| 331 | 2 | விவகாரம். | விவகாரம், |
| 333 | 4 | விசமவாத | விசம்வாத |
| 334 | 18 | பிராணிதானம் | பிரணிதானம் |
| 335 | 12 | பதனென்கு | பதினென்கு |
| 338 | 12 | நபுஸ்கத்துவம் | நபும்ஸகத்துவம் |
| 352 | 1 | மணம் | கமணம் |
| 177 | 0 | சு. பிரபஞ்சமித்தியாவர்ணநம் | எ. ஆன்மாவின் விசேஷணம் |

வினா:—இந்த விசாரம் எதனால் உண்டாகும்? இவ்வினாவை 12-வது பக்கம் 4-வது வரிக்குப் பின் கூட்டிப் படிக்க.

ஓம் கணேசாயநம:.

# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## முதற்கலை.

### * உபோற்காதவர்ணநம்.

விஞ :—புருஷார்த்தமென்பது யாது?

---

* சொல்லத்தக்க அர்த்தத்தை மனதில் வைத்துக்கொண்டு, அதன் பொருட்டு அன்னிய அர்த்தத்தைப் பிரதிபாதித் (சொல்லு) தல் **உபோற்காதமாம்.** ஒருவனுக்கு அன்னியன் வீட்டிலிருந்து மோர் வாங்க வேண்டியிருக்குமானுல், அப்போது அவன் அந்த வார்த்தையை மனதில் வைத்துக்கொண்டு, அதன் பொருட்டு "உங்கள் பசு பால் கறக்கிறதா? இல்லையா?" என்னு மிவைமுதலிய அன்னிய வார்த்தைகளைச் சொல்லுதல் **உபோற்காதமாம்.** அதுபோல இங்கே சொல்லத்தக்கவிசாரத்தை மனதில் வைத்துக்கொண்டு, அதன்

விடை :—சகல புருஷர்களின் இச்சைக்கு எது விஷயமோ அது * புருஷார்த்தமாம்.

வினா :—சகல புருஷர்களுக்கும் எதில் இச்சையுண்டாகிறது?

விடை :—சகல புருஷர்களுக்கும் சருவதுக்கநிவர்த்தி பரமாநந்தப்பிராப்தியில் இச்சை யுண்டாகிறது.

வினா :—சருவதுக்கநிவர்த்தி பரமாநந்தப்பிராப்தி யென்பது யாது?

---

ஆரம்பத்தின் பொருட்டு அன்னியமாகிய மோட்சமுதலிய பதார்த்தங்களைக் கூறுதல் உபோற்காதமாம்.

* அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இந்நான்கிற்கும் புருஷார்த்த மென்றுபெயராம். இவற்றுள் முதல்மூன்றும்கௌணமாகையால், அவைகளைவிட்டு இங்கே கடைசியாகிய முக்கிய புருஷார்த்தம் கொள்ளப்பட்டது.

விடை :—சருவ * துக்க † நிவர்த்தி ‡ பரமாநந்தப் § பிராப்தி யென்பது $ மோட்சத்தின் சொரூபமாம்.

---

* அஞ்ஞானத்தோடு ஜனனமரணாதிகளை துக்கமெனப்படும்.

† மித்தியாத்துவநிச்சயமாகிய பாதம், நிவர்த்தி யெனப்படும்.

‡ பரமப்பிரேமைக் (மிகுந்த பிரியத்திற்) கு விஷயம், பரமாநந்தமாம்.

§ இங்கே கழுத்திலுள்ள ஆபரணத்தைப் போன்ற நித்தியப்பிராப்தத்தின் பிராப்தி ஒப்பப்பட்டிருக்கிறது.

$ கர்த்திருத்துவ போக்திருத்துவாதி வேறாத்தன்மையை விட்டு சுவ(தனது)சொரூபமாக நிலைத்திருத்தல் மோட்சமாம். சில ஜனங்கள் சொர்க்கம் வைகுந்தம் கோவுலகம் பிரமலோகமுதலியவற்றின் பிராப்தியை மோட்சமென அறிகின்றார்கள் ; அது வேதவிரோ

வினு :—மோட்சம் எதனுலுண்டாம் ?

விடை :—மோட்சம் * பிரமஞானத்தாலுண்டாம்.

வினு :—† பிரமஞானமென்பது யாது?

விடை :—பிரமஞானமென்பது பிரமசொரூபத்தை யதார்த்தமாக அறிதல்.

வினு :—பிரமஞானம் எத்தனை வகையாம் ?

விடை :—பிரமஞானம், பரோட்சம் அபரோட்சம் என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

---

தமாம். மேற்சொல்லப்பட்ட மோட்சத்தின் சொரூபம் வேதத்தை அனுசரித்ததாம்.

* கன்ம உபாசனைகளினுல், சித்தசுத்தியும் ஏகாக்கிரத்தன்மையுமாகிய ஞானசாதனங்கள் உண்டாம் ; மோட்சமுண்டாகாது.

† பிரமத்துக்கு அபின்னமாகிய ஆன்மாவின் ஞானம் மோட்சத்திற்கு ஏதுவாம்.

வினு :—பரோட்சப்பிரமஞான மென்பது யாது?

விடை :— (சொரூபம்) "சச்சிதாநந்தமாகிய பிரமம் இருக்கிறது" என்று அறிதல் * பரோட்சப்பிரமஞானமாம்.

வினு :—பரோட்சப்பிரமஞானம் எதனு லுண்டாம்?

விடை :— (எது) சற்குரு சற்சாத்திர வசனங்களில் விசுவாசம் வைத்தலால் பரோட்சப்பிரமஞான முண்டாம்.

வினு :— பரோட்சப்பிரமஞானத்தால் உண்டாவது யாது?

விடை :—(பலம்) † அசத்துவாபாதக

---

* பரோட்சஞானம், "தத்துவமசி" மகாவாக்கியத்திலுள்ள "தத்" என்னும் பதத்தின் அர்த்தத்தை அறிவிக்கிறது; ஆகையால் அது அபரோட்ச அத்துவைத ஞானத்தில் உபயோகமுள்ளதாம்.

† "பிரமமில்லை" என்பதாகப் பிரமத்தின்

ஆவரணத்தின் நிவர்த்தி யுண்டாம்.

வினு :—பரோட்சப்பிரமஞானம் எப்போது பூரணமாம் ?

விடை :—(அவதி) பரோட்சப்பிரமஞானம், (பிரமநிஷ்ட) குரு (வேதாந்த) சாத்திரானுசாரமாகப் பிரமசொரூபத்தை நிச்சயஞ்செய்யப் பூரணமாகும்.

வினு:—அபரோட்சப்பிரமஞானமென்பது யாது ?

விடை :—(சொரூபம்) "சச்சிதாநந்தமாகிய பிரமம் நான்" என்று அறிதல், அபரோட்சப்பிரமஞானமாம்.

வினு :—அபரோட்சப்பிரமஞானம் எதனு லுண்டாம் ?

விடை :—(எது) குருமுகமாக "தத்து

---

அசத்துத் தன்மையை ஆபாதகம் செய்யும் (சம்பாதிக்கும்) ஆவரணம், அசத்துவாபாதக ஆவரணமாம்.

வமசி" முதலிய மகாவாக்கியத்தின் சிரவணத்தால் அபரோட்சப்பிரமஞானம் உண்டாம்.

வினா :—அபரோட்சப்பிரமஞானம் எத்தனை வகையாம்?

விடை :— அபரோட்சப்பிரமஞானம் அதிடம் திடம் (உறுதி) என்னும்பேதத்தால் இரண்டுவகையாம்.

வினா :—அதிட அபரோட்சப்பிரமஞானமென்பது யாது?

விடை :— (சொரூபம்) * அசம்பாவ

---

* "வேதாந்தத்தில் ஜீவப்பிரமங்களின் பேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதா? அல்லது அபேதம் பிரதிபாதிக்கப் பட்டிருக்கின்றதா? என்பது பிரமாணக்[illegible] மாம். "ஜீவப்பிரமங்களின் பேதம் சத்[illegible] அல்லது அபேதம் சத்தியமா?" என்பது பி[illegible] மேயகதசமுசயமாம். இவ்விருவகை[illegible]

ஊை * விபரீதபாவனைகளோடு உண்டா
கும் பிரமான்மஐக்கியநிச்சயம், அதிட
அபரோட்சப்பிரமஞானமாம்.

வி௵ :—அதிட அபரோட்சப்பிரமஞா
னம் எதனு லுண்டாகும்?

விடை :—(எது) சிறிது மலவிட்சேப
தோஷமும், சுருதிநாநாத்துவத்தின் ஞா
னமும், பிரமத்தின் அத்துவைதத்தன்
மையின் அசம்பவஞானமும், பேதவாதி
பாமரபுருஷர்களது சங்கத்தின் சம்ஸ்கார
மும் ஆகிய இவற்றோடுகூடிய புருஷனு
க்குக் குருமுகமாக மகாவாக்கிய சிரவண
த்தால் அதிட அபரோட்சஞானம் உண்
டாம்.

---

சமுசயமும் அசம்பாவனையெனப்படும்.

* "ஜீவப்பிரமங்களின் பேதமும் சத்தியம் தேகாதிப்பிரபஞ்சமும் சத்தியம்" என்னும் விபரீதநிச்சயம், விபரீதபாவனையாம்.

வினு :—அதிட அபரோட்சஞானத்தால் உண்டாவது யாது?

விடை :— (பலம்) அதிட அபரோட்சஞானத்தால் உத்தமலோகப் பிராப்தியும், புனிதமாகிய ஸ்ரீமான் குலத்திலேனும் அல்லது (நிஷ்காமத்தன்மையால்) ஞானவான்களது குலத்திலேனும் ஜன்மமுமுண்டாம்.

வினு :—அதிட அபரோட்சஞானம் எப்போது பூரணமாம்?

விடை :—(அவதி) சத்நுசித்நு ஆநந்த முதலிய பிரமவிசேஷணங்களின் அபரோட்சஞானம் உண்டாகியும் *சமுசய †விபரீதபாவனைகளிருக்குமாயின், அப்போது அதிட அபரோட்சஞானம் பூரணமாகும்.

* சமுசயம் (இரண்டு கோடிகளையுடைய ஞானம்).

† விபரீதபாவனை விபரீதநிச்சயம்.

வினா :—திட அபரோட்சஞான மென்பதுயாது ?

விடை :—(சொரூபம்) அசம்பாவனை விபரீதபாவனைக ளில்லாமல் உண்டாகும் பிரமான்மஐக்கியநிச்சயம், திட அபரோட்சப்பிரமஞானமாம்.

வினா :—திட அபரோட்சப்பிரமஞானம் எதனு லுண்டாம் ?

விடை :— (எது) குருமுகமாக *மகாவாக்கிய அர்த்தத்தின் சிரவணமனனநிதித்தியாசனமாகிய விசாரம் செய்வதால் திட அபரோட்சப்பிரமஞான முண்டாம்.

வினா :—திட அபரோட்சஞானத்தால் உண்டாவது யாது ?

விடை ;—(பலம்) †அபானுபாதகஆவ

* ஜீவப்பிரமங்களின் ஐக்கியத்தை அறிவிக்கும் வாக்கியம், மகாவாக்கியம்.

† "பிரமம் தோற்றவில்லை" என்பதாக அ

ரணமும் * விட்சேபமுமாகிய காரியத்தோடு அவித்தையி (அஞ்ஞானத்தி) ன் நிவர்த்தி யுண்டாய்ப் பிரமப்பிராப்தியாகிய மோட்சம் உண்டாம்.

வி௲ :—திட அபரோட்சஞானம் எப்போது பூரணமாகும்?

விடை :—(அவதி) தேகத்திலுள்ள நானென்னும் ஞானத்தைப் பாதித்து இதைப்போல, பிரமாபின்னமாகிய ஆத்துமாவில் எப்போது ஞான முண்டாகுமோ, அப்போது திட அபரோட்சஞானம் பூரணமாகும்.

---

பானமாகிய பிரமத்தின் அப்பிரதீதியை ஆபாதகம்செய்யும் (சம்பாதிக்கும்) ஆவரணம் அபானுபாதகஆவரணமாம்.

* தூலசூட்சும சரீரத்தோடு கூடியசிதாபாசனும் அவனது தருமமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவ ஜனனமரணாதிகளும் விட்சேபமாம்.

வினா :—விசாரமென்பது யாது ?

விடை :—(சொரூபம) ஆத்துமானாத்துமாக்களை வேறுபிரித்தறிதல், விசாரமாம் ?

வினா :—இந்த விசாரம் எதனால் உண்டாகும்?

விடை :—(எது) இந்த விசாரம் ஈசுரன், வேதம், குரு, தனது அந்தக்கரணம் என்னும் * இந்நான்கின் கிருபையா லுண்டாம்

வினா :— இந்த விசாரத்தா லுண்டாவது யாது ?

---

* சற்குருமுதலிய ஞானசாமக்கிரியை(சாதனங்)களின் பிராப்தி ஈசுரகிருபை. சாஸ்திரார்த்தத்தின் தாரண (ஞாபக) சக்தி வேதகிருபை. சாஸ்திரானுசாரமாகவும் தனது அநுபவானுசாரமகாவும் எதார்த்த உபதேசத்தைச்செய்தல் குருகிருபை. சாஸ்திரானுசாரமாகவும் குருவாக்கியானுசாரமாகவும் சாதனங்களைச் சம்பாதித்தல், தனது அந்தக்கரணத்தின் கிருபை.

விடை :— (பலம்) இந்த விசாரத்தால் திட அபரோட்சஞானம் உண்டாம்.

வினா :— இந்த விசாரம் எப்போது பூரணமாகும் ?

விடை :— இந்த விசாரம் திட அபரோட்சஞானமுண்டாகுமாயின் பூரணமாகும்.

வினா :— எதை விசாரிக்க வேண்டும் ?

விடை :— (விஷயம்) நான் யார் ? பிரமமென்பது யாது ? பிரபஞ்சமென்பது யாது ? என்று இம்மூன்று வஸ்துக்களையும் விசாரிக்கவேண்டும்.

வினா :— இம்மூன்று வஸ்துக்களின் சாதாரண வடிவம் யாது ?

விடை :— "நானும் பிரமமும்" சைதன்னியம் ; * பிரபஞ்சம் ஜடம்.

---

* சமஷ்டி வியஷ்டி ஸ்தூல சூட்சும காரணதேகங்களும், அவற்றின் அவஸ்தைகளும், தர்மங்களும் பிரபஞ்ச மெனப்படும்.

வினு :—சைதன்னியமென்பது யாது?

விடை :— எது ஞானவடிவமாய்ச் சகல கடாதிப்பிரபஞ்சங்களையும் அறிகிறதோ, எதை அன்னியமாகிய மனஇந்திரியாதிகளொன்றும் அறியமாட்டாவோ, அது சைதன்னியமாம்.

வினு :— ஜடமென்பது யாது?

விடை :— தன்னையும் மற்றவைகளையும் அறியாமலிருக்கும் * அஞ்ஞானமும் அதனது காரியமாகிய † பூத ‡ பௌதிக பதார்த்தங்களும் ஜடமாம்.

வினு :—மேற்கூறப்பட்ட மூன்று வஸ்

* "யான் அறியேன்" என்னும் விவகாரத்திற்கு ஏதுவாகிய ஆவரணவிட்சேபசக்திகளையுடைய அனுதிபாவரூபம், அஞ்ஞானம்

† ஆகாசமுதலிய ஐந்தும் பூதம்.

‡ பூதங்களின் காரியமாகிய பிண்ட பிரமாண்டாதிகள் பௌதிகம்.

துக்களின் விசாரம் எந்தவிதமாக உபயோகப்படும்?

விடை :—"தத்துவமசி" மகாவாக்கியத்திலுள்ள "துவம்" பத "தத்" பதங்களின் வாச்சியார்த்தமாகிய *சீவ † ஈசுரர்களது உபாதியாகிய‡ பிரபஞ்சத்தைப் பழுதையில் பாம்புபோலும், கட்டையில் புருடன்போலும், மருபூமியில் கானற்சலம்போலும் விசாரத்தால் மித்தையெனவறிந்துநீக்குதல், பிரபஞ்சவிசாரத்தின் உபயோகமாம்.

---

* சிதாபாசனோடுகூடிய அந்தக்கரணத்தோடு கூடஸ்தனைதன்னியம், சீவனாம்.

† சிதாபாசனோடுகூடிய மாயையோடு பிரமசைதன்னியம், ஈசுரனாம்.

‡ சமஷ்டிவியஷ்டியாகிய மூன்றுசரீரம், பஞ்சகோசம், மூன்றவஸ்தைமுதலிய நாமரூபங்கள், பிரபஞ்சமென்னப்படும்.

" யானாகிய ("துவம்" பத இலட்சியார்த்த) ஆன்மா, அந்த (" தத்" பத இலட்சியார்த்தப்) பிரமமாயிருக்கிறேன்" என்று பிரமான்ம ஐக்கியத்தை விசாரத்தினால் சத்தியமென்றறிந்து மிஞ்சவைத்தல், " நான் யார் ? " " பிரமமென்பது யாது ?" என்னும் விசாரத்திற்கு உபயோக (பல) மாம்.

வினா :—இந்த விசாரத்திற்கு அதிகாரி யாவன் ? அவன் என்ன செய்யவேண்டும் ?

விடை :—இந்த விசாரத்திற்கு அதிகாரி * உத்தம ஜிஞ்ஞாசு ஆவன். அவன்

* விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமூட்சுத்துவம் என்னுமிந்நான்கு சாதனங்களோடுகூடினவனாயும், பிரமநிஷ்டராகிய குருவினது வாக்கியத்திலும் வேதாந்த சாஸ்திரத்திலும் பரமவிசுவாசமுடையவனாயும், ஒருக்காலு

சற்குரு கிருபையினால் உபோற்காதமுதலி
ய * பிரக்கிரியைகளை விசாரித்து "நான்
தானே பிரமமாயிருக்கிறேன்" என்றுபிர
மத்தை அபரோட்சமாக அறியவேண்டும்.

வினா :—அந்தப் பிரக்கிரியைகளின் பெ
யர்க ளெவை ?

விடை :—

க. உபோற்காதம்.

உ. பிரபஞ்சத்தின் ஆரோபஅபவாதங்
கள்.

ந. தேகமூன்றிற்கும் நான் திருஷ்டா
(பார்க்கிறவன்).

---

ம் குதர்க்கம்செய்யாதவனையும், சொரூபத்தை
அறியவேண்டுமென்னும் தீவிர இச்சையுள்ள
வனையுமிருக்கும் அதிகாரி, உத்தமஜிஞ்
ஞாசு (ஞானவிருப்பமுள்ளவன்) ஆவன்.

* அத்துவிதத்தைப் போதிக்கும் ஏதேனும்
ஓர் பிரகாரம், பிரக்கிரியையாம்.

ச. நான் பஞ்சகோசாதீதன்.

ரு. அவஸ்தைமூன்றிற்கும் நான்சாட்சி.

சு. பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை.

எ. ஆன்மாவின் விசேஷணம்.

அ. சச்சிதாநந்த விசேஷவர்ணநம்.

கூ. அவாச்சிய சித்தாந்தவர்ணநம்.

ய. சாமானியசைதன்னியம் ; விசேஷசைதன்னியம்.

யக. "தத்" பத "துவம்" பதார்த்தங்களின்வாச்சியார்த்த இலட்சியார்த்தங்களும் ; அவ்விரண்டு இலட்சியார்த்தங்களின் ஐக்கியமும்.

யஉ. ஞானியின் கன்மநிவர்த்தி.

யந. ஞானபூமி எழு.

யச. ஜீவன்முக்தி விதேகமுக்தி.

யரு. வேதாந்தப்பிரமேயம்.

யசு. திருஷ்டாந்தசித்தாந்த (தாஷ்டாந்த) ம.

இவைகள் * அப்பிரக்கிரியைகளின்பெ யர்களாம்.

விசாரசந்திரோதயம் முதற்கலை
முற்றிற்று.

———:o:———

* பிரபஞ்சத்தின் விசாரம் க-வது, உ-வது, ௯-வது, ௰உ-வது, ௰௩-வது, ௰௯-வது, பிரக்கிரியை (கலை) களிலும், "பிரபஞ்சத்தோடு நான் யார்?" என்னும்விசாரம் ௩-வது, ௪-வது, ௫-வது, பிரக்கிரியைகளிலும், பரமாத்துமாயார்? என்னும் விசாரம் ௰-வது பிரக்கிரியையிலும், பிரமாத்துமாக்க ளிருவர்களது சொரூபத்தின் விசாரம் எ-வது, அ-வது, ௯-வது, ௰க-வது, ௰௪-வது பிரக்கிரியைகளிலும், பிரபஞ்ச பிரமாத்துமாக்களது சொரூபவிசாரம் ௰௫-வது பிரக்கிரியையிலும் செய்யப்பட்டிருக்கின்றது. சகலப் பிரக்கிரியைகளுக்கும் "தத்" பத "துவம்" பதார்த்தங்களின் சோதனமும் அவற்றின் ஐக்கிய நிச்சயமும் பிரயோசனமாம்.

## இரண்டாம் கலை.

---

### பிரபஞ்சாரோபாபவாதம்.

—:o:—

வின :—சுத்தப்பிரமத்தில் பிரபஞ்சத்தின் * ஆரோபம் எப்படி உண்டாயிருக்கிறது?

விடை :—அநாதிசுத்தப்பிரமத்தில் †

---

* வஸ்துவி (பிரமத்தி) ல் அவஸ்துவைக் (அஞ்ஞானத்தையும் அதன் காரியத்தையும்) கூறுதல், ஆரோபமாம்; இதனையே **அத்தியாரோப** மென்றும் கூறுவர்.

† உற்பத்தியில்லாத வஸ்து, சொரூபமாக அநாதியாம். அப்படிப்பட்டவை சுத்தப்பிரமம், பிரகிருதி, அவற்றின் சம்பந்தம், ஈசுரன், ஜீவன், அவற்றின் பேதம் என்னும் ஆறுமாம். பிரவாகரூபமாகப் பிரபஞ்சமும் அநாதியாம்.

அநாதி * கற்பிதமாகிய பிரகிருதி உண்டு. அந்தப்பிரகிருதிக்குப் பிரமத்தோடு அநாதிகற்பிததாதான்மிய (கற்பிதபேதத்தோடு வாஸ்தவ அபேதமாகிய) சம்பந்தமுண்டு. அந்தப்பிரகிருதி, மாயை அவித்தை தமப்பிரதானப்பிரகிருதியெனப் பிரிவை அடைகின்றது. அவற்றுள் † சுத்த சத்துவகுணத்தோடுகூடியது மாயையும், ‡ மலின சத்துவகுணத்தோடு

* எது இல்லாததாய்ச் சொப்பனபதார்த்தங்களைப்போல பிராந்தியினால் விளங்குகின்றதோ, அது **கற்பிதமாம்.**

† க்ஷத்திரிய சூத்திரர்களாகிய மந்திரிகளால் அமிழ்த்தப்படாத பிராமணனாகிய இராஜாவைப்போல இரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படாது, இரஜோதமோகுணங்களைத் தான் அமிழ்த்தியிருப்பதாகியசத்துவகுணம், **சுத்தசத்துவகுணமாம்.**

‡ இரஜோதமோகுணங்களை அமிழ்த்தாமல்

கூடியது அவித்தையும், தமோகுணத்தின் முக்கியத்தன்மையோடுகூடியது தமப்பிரதானப்பிரகிருதியுமாம்.

மாயையிலுள்ள பிரமத்தின் பிரதிபிம்பம், அதிஷ்டான (பிரம) த்துடனும் * மாயையுடனும் கூடி ஜகத்கர்த்தாவா

சூத்திரர்களாகிய இரண்டு இராஜகுமாரர்களால் அமிழ்த்தப்படும் பிராமணனாகிய ஒரு மந்திரியைப்போல, இரஜோதமோகுணங்களால் தான் அமிழ்த்தப்பட்டிருப்பதாகியசத்துவ குணம், மலின சத்துவகுணமாம்.

* இங்கே மாயையெனும் சத்தத்தால் மாயையும் தமப்பிரதானப் பிரகிருதியுமாகிய இவ்விரண்டு ஈசுரனது உபாதிகளும் கொள்ளப்படும். அவைகளுள் மாயையாகிய உபாதியைக்கொண்டு ஈசுரன், குலாலனைப்போல ஜகத்திற்கு நிமித்தகாரணமும் தமப்பிரதானப்பிரகிருதியைக்கொண்டு மண்போல ஜகத்திற்கு உபாதானகாரணமுமாகின்றார்

கிய சருவஞ்ஞ ஈசுரனெனப்படும்.

அவித்தையிலுள்ள பிரமத்தின் பிரதிபிம்பம், அதிஷ்டானத்து (கூடஸ்தரு)டனும் அவித்தையுடனும் கூடி போக்தாவாகிய அற்பஞ்ஞஜீவனெனப்படும்.

அந்த ஈசுர ஜீவர்களும் அநாதிகற்பிதராவர். அவர்களுள் ஈசுரனது உபாதியாகிய மாயை ஏகமா (ஒன்று) யும்* ஆபேட்சிக வியாபகமாயுமிருத்தலால் ஈசுரனும் ஏகமாயும் வியாபகமாயுமிருக்கின்றனர்.

---

* ஒன்றின் அபேட்சையால் வியாபகமாயும் மற்றொன்றின் அபேட்சையால் பரிச்சின்னமாயுமிருப்பது, **ஆபேட்சிக வியாபக**மெனப்படும். வீடானது கடாதிகளின் அபேட்சையால் **வியாபக**மாயும் கிராமத்தின் அபேட்சையால் **பரிச்சின்ன**மாயுமிருக்கின்றது. ஆகையால் ஆபேட்சிக வியாபக

ஜீவனது உபாதியாகிய அவித்தை நாநாவாயும் பரிச்சின்னமாயுமிருத்தலால் ஜீவனும் நாநாவும் பரிச்சின்னமுமாம். அந்த ஜீவேசுரர்களுக்கு அநாதிகற்பிதபேதமுண்டு. சிருஷ்டிக்குமுன்னே, அந்த ஜீவர்களது உபாதியாகிய அவித்தை ஜீவர்களது கன்மத்துடனே மாயையில் ஒடுங்கியிருக்கிறது. அந்த மாயை சுழுத்தியில் அவித்தையைப்போலப் பிரமத்துக்கு வேறாய்த் தோற்று (சித்திக்) கிறதில்லை. ஆகையால் சிருஷ்டிக்குமுன்னே சஜாதீய விஜாதீய சுகதபேதமில்லாத ஒரோ அத்துவிதிய சச்சிதாநந்தப்பிரமமிருந்தது.

---

மாம். அதுபோல மாயையும் பிருதிவி முதலியவற்றின் அபேட்சையால் வியாபகமாயும் பிரமத்தின் அபேட்சையால் பரிச்சின்னமாயுமிருக்கின்றது. ஆகையால் ஆபேட்சிக வியாபகமாம்.

அந்தப்பிரமத்திற்குச் சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஜீவர்களது பரிபக்குவப்பட்ட கன்மமாகிய நிமித்தத்தால் "ஒன்றாகிய யான் அநேகரூபமாவேன்" என்னும் இச்சை யுண்டாயிற்று. அந்த இச்சையினால் பிரமத்தின் உபாதியாகிய மாயையில் க்ஷோப (கலக்க) முண்டாய்க் கிரமமாக ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவியென்னும் பஞ்சமகாபூதங்களும் உண்டாயின. அவற்றிற்குப் பஞ்சீகரணமுண்டாகாதிருந்தது; அப்போது அவை அபஞ்சீகிருதமாயிருந்தன. அவைகளிலிருந்தும் சமஷ்டி வியஷ்டியாகிய சூட்சுமசிருஷ்டியுண்டாய்ப், பின்னர் ஈசுரனது இச்சையால் அவற்றிற்குப் பஞ்சீகரணமுண்டானகாலத்து அவை பஞ்சீகிருதமாயின, அவைகளினின்றும் சமஷ்டி வியஷ்டியாகிய ஸ்தூலசிருஷ்டி உண்டாயிற்று.

அவைகளில் சமஷ்டி ஸ்தூல சூட்சும காரணப் பிரபஞ்சத்திற்கு அபிமானி, ஜீவனது பார்வையால் ஈசுரனும் ; வியஷ்டி ஸ்தூல சூட்சும காரணப் பிரபஞ்சத்திற்கு அபிமானி ஜீவனுமாவர் அவர்களுள் ஈசுரன் சர்வஞ்ஞனாயிருத்தலால் நித்தியமுக்தனும்ஜீவன் அற்பஞ்ஞனாயிருத்தலால் பெத்தனுமாவர்.

இவ்வாறு சுத்தப்பிரமத்தில் பிரபஞ்சத்தின் ஆரோபமுண்டாயிருக்கிறது.

வினா :—இவ்வாரோபம் சத்தியமா? மித்தையா?

விடை :—இவ்வாரோபம் பழுதையில் பாம்புபோலவும், சாக்ஷியில் சொப்பனம் போலவும், கண்ணாடியில் நகரப்பிரதிபிம்பம்போலவுமாம்.

வினா :—இவ்வாரோபம்எதனாலுண்டாகிறது?

விடை :—இவ்வாரோப மஞ்ஞானத்தினுலுண்டாகிறது.

வினு :—இவ்வாரோபம் எந்தக்காலத்தது, ஏனுண்டாயிருக்கும் என்னும் விசாரம் எப்படியுண்டாகும்?

விடை :—ஓர் புருஷனது வஸ்திரத்தில் எண்ணெக்கறை பட்டிருக்குமாயின், அதை அறிந்து நீக்குதற்கு உபாயந்தேடவேண்டும்; அப்படிக்கில்லாமலிந்தக்கறையெந்தக்காலத்தது, எப்படிப்பட்டிருக்கும் என்றுவிசாரித்தலால் ஒரு பிரயோசனமுமில்லாததுபோல, இந்தப்பிரபஞ்சத்தின் ஆரோபம் எந்தக்காலத்தது, என் உண்டாயிருக்கும் என்று விசாரித்தலானும் ஒரு பிரயோசனமுமில்லை. ஆனல் இதை நிவர்த்திக்க உபாயஞ்செய்தல் தகுதியாம்.

வினு :—இவ்வெல்லா ஆரோபங்களும்

எப்படி நிவர்த்தியாகும் ?

விடை :— பிரமஞானத்தால் மாயை அவித்தைகளின் நிவர்த்தி உண்டாகின்றது ; அதனால் காரியத்தோடு பிரகிருதியின் நிவர்த்தி உண்டாகின்றது ; அதனால் பிரகிருதி பிரமங்களின் சம்பந்த நிவர்த்தி உண்டாகின்றது ; அதனால் ஜீவத்தன்மை ஈசுரத்தன்மைகளின் நிவர்த்தி உண்டாகின்றது ; அதனால் ஜீவேசுரர்களின் பேத நிவர்த்தி உண்டாகின்றது ; அதனால் பந்தநிவர்த்தி உண்டாய் மோக்ஷம் சித்தமாகின்றது. இவ்வாறு ஒரேகாலத்தில் சகல ஆரோபங்களின் நிவர்த்தியாகிய * அபவாதமுண்டாகின்றது.

---

* சர்ப்பத்தையும் அதனது ஞானத்தையும் பாதித்தலால், இரச்சுவாகிய அதிஷ்டானம் அவசேஷமா (மிஞ்சு) வது போலப், பிரபஞ்சத்தையும் அதனது ஞானத்தையும் பாதித்த

வினு :—இந்தப் பிரமஞானம் எதனு ல் உண்டாகும் ?

விடை:—இந்தப் பிரமஞானம் மேற் சொல்லப்படும் விசாரத்தால் உண்டாம்.

இரண்டாம் கலை முற்றிற்று.

——:o:——

## மூன்றும் கலை.

——

### தேகமூன்றிற்கும்நான்திருஷ்டா.

——:o:——

வினு :—முதற்பிரக்கிரியை, "மூன்று தேகங்களுக்கும் நான்திருஷ்டா" அம்மூன்று தேகங்கள் எவை ?

விடை :—ஸ்தூலதேகம் சூட்சுமதேகம் காரணதேகம் என்னுமிவை, மூன்று தேகங்களாம்.

---

லால் அதிஷ்டானமாகிய சுத்தப்பிரமம் மிஞ்சுதல், **அபவாதமாம்.** பாதித்தல் - மித்தை (பொய்) யென நிச்சயித்தல்.

## க. ஸ்தூலதேகத்திற்கு நான் திருஷ்டா.

விஞ :—ஸ்தூலதேகமென்பது யாது?

விடை :—பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் இருபத்தைந்து தத்துவங்களினது, ஸ்தூலதேகமாம்.

விஞ :—பஞ்சமகாபூதங்கள் எவை?

விடை :—ஆகாயம், வாயு, தேயு, ஜலம், பிருதிவி என்னும் இவை பஞ்சமகாபூதங்களாம்.

விஞ :—பஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவ (பதார்த்த) ங்கள் எவை?

விடை:—

க. ஆகாயத்தின் ஐந்து தத்துவங்கள் :—* காமம், குரோதம், சோகம்,

---

* யாதேனும் ஓர்போகத்தின் இச்சை, காமமெனப்படும்.

* மோகம், பயம் என்பனவாம்

௨. வாயுவின் ஐந்து தத்துவங்கள்:—நடத்தல், இருத்தல், ஓடல், விரிதல் (நிமிர்தல்), சுருங்குதல் (வளைதல்) என்பனவாம்.

௩. தேயுவின் ஐந்து தத்துவங்கள்:—பசி, தாகம், சோம்பல், நித்திரை, காந்தி (ஒளி) என்பனவாம்.

௪. ஜலத்தின் ஐந்து தத்துவங்கள்:—சுக்கிலம் (வீரியம்), சோணிதம் (உதிரம்), உமிழ்நீர் (வாய்நீர்), மூத்திரம், சுவேதம் (வியர்வை), என்பனவாம்.

௫. பிருதிவியின் ஐந்து தத்துவங்கள் :—எலும்பு, மாமிசம், நாடி, (நரம்பு) தோல், உரோமம் என்பனவாம்.

இவை பஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவங்களின் பெயர்களாம்.

---

* அகந்தை மமதை வடிவமாகிய புத்தி,

வினா:—பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்கள் எவை?

விடை:—எந்தப்பூதங்களுக்குப் *பஞ்சீகரண முண்டாயிருக்கிறதோ, அவைபஞ்சிகிருத பஞ்சமகா பூதங்களெனப்படும்.

வினா:—பஞ்சீகரணமென்பது யாது?

விடை:—ஐந்துபூதங்களினின்றும் ஒவ்வொன்றை இரண்டிரண்டுபாகஞ் செய்ய, அதுபத்தாயிற்று. அவற்றினின்றும் முதல் ஐந்துபாகங்களையும் நிறுத்திவிட்டு மற்ற ஐந்து பாகங்களினின்றும்

---

மோகமாம். அகந்தை - யானெனல். மமதை-எனதெனல்.

* முதலில்அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களிருந்தன. அவற்றிற்கு ஈசுர இச்சையால் ஸ்தூலசிருஷ்டிவாயிலாக சீவர்களது மோகத்தின்பொருட்டு ஒன்றற்கொன்று கலத்தலாகிய பஞ்சீகரணமுண்டாயிருக்கின்றது.

ஒவ்வொரு பாகத்தை நந்நான்கு பாகமாக்கி அந்த நந்நான்கு பாகங்களையும், ஆகாயாதி பூதங்களின் யாதொரு தத்தம் அரை அரை முக்கியபாகம் நிறுத்தப்பட்டிருக்கிறதோ, அவைகளில் சேர்க்காமல் தத்தம்மின் வேருகிய நான்கு பூதங்களின் அரை அரைப்பாகத்தில் சேர்த்தல், பஞ்சீகரணமெனப்படும்.

வின:—பஞ்சபூதங்களுக்கும் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) எப்படிக்கலப்புண்டாகின்றது ?

விடை :—திருஷ்டாந்தம்:—ஓர் ஐந்து சிநேகிதர்கள் மா, வாழை முதலிய ஒவ்வொரு பழத்தை ஒன்ருய்ச் சேர்ந்து தின்னத்தொடங்கி சகலரும் தங்கள் தங்கள் பழத்தை இரண்டிரண்டாகச்செய்து அரை அரைப்பாகத்தைத் தங்கள் பொருட்டுவைத்துக்கொண்டு மிஞ்சிய அரை

அரைப்பங்கை நந்நான்காக்கி, நான்கு சிநேகிதர்களுக்கும் பிரித்துக்கொடுப்பார்களாயின், அப்போது ஐந்து பழங்களுக்கும் ஒன்றற்கொன்று கலப்புண்டாகிறது. அதுபோல

சித்தாந்தம்:—

க. ஆகாயத்தை இரண்டுபங்குசெய்து, அவற்றுள் ஒருபாகத்தைவைத்து மற்றப்பாகத்தை நான்குபாகஞ்செய்து, அவற்றினின்றும் ஆகாயத்திற்சேர்க்காமல் ஒன்றைவாயுவிலும், ஒன்றைத்தேயுவிலும், ஒன்றை அப்புவிலும், ஒன்றைப் பிருதிவியிலுமாகச் சேர்த்தல்வேண்டும். இப்படியே

உ. வாயுவை இரண்டுபங்குசெய்து, அவற்றுள் ஒருபாகத்தைவைத்து மற்றப்பாகத்தை நான்குபாகஞ் செய்து, அவற்றினின்றும் வாயுவிற் சேர்க்காமல் ஒன்

றை ஆகாயத்திலும், ஒன்றை அக்கினியி
லும், ஒன்றை அப்புவிலும், ஒன்றைப்
பிருதிவியிலுமாகச் சேர்த்தல்வேண்டும்.
இப்படியே

ந. தேயுவை இரண்டு பங்குசெய்து,
அவற்றுள் ஒருபாகத்தைவைத்து மற்றப்
பாகத்தை நான்கு பாகஞ்செய்து, அவ
ற்றினின்றும் தேயுவிற்சேர்க்காமல் ஒரு
பாகத்தை ஆகாயத்திலும், ஒரு பாகத்
தை வாயுவிலும், ஒருபாகத்தை அப்புவி
லும், ஒரு பாகத்தைப் பிருதிவியிலுமாக
ச்சேர்த்தல்வேண்டும். இப்படியே

ச. அப்புவை இரண்டு பங்குசெய்து,
அவற்றுள் ஒருபாகத்தைவைத்து மற்றப்
பாகத்தை நான்கு பாகஞ்செய்து, அவ
ற்றினின்றும் அப்புவில் சேர்க்காமல் ஒ
ருபாகத்தை ஆகாயத்திலும், ஒருபாகத்
தை வாயுவிலும், ஒரு பாகத்தை அக்கி

ணியிலும், ஒருபாகத்தைப் பிருதிவியிலு மாகச்சேர்த்தல்வேண்டும். இப்படியே

ரு. பிருதிவியை இரண்டுபெங்குசெய்து, அவற்றுள் ஒருபாகத்தைவைத்து மற்றப்பாகத்தை நான்கு பாகஞ்செய்து, அவற்றினின்றும் பிருதிவியிற் சேர்க்காமல் ஒரு பாகத்தை ஆகாயத்திலும், ஒரு பாகத்தை வாயுவிலும், ஒருபாகத்தை அக்கினியிலும், ஒரு பாகத்தை அப்புவிலுமாகச்சேர்த்தல்வேண்டும்.

இவ்வாறு இருபத்தைந்து தத்துவங்கள் உண்டாவதனுல் பஞ்சபூதங்களுக்கு ஒன்றற்கொன்று கலப்புண்டாகிறது.

வினு :—பஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவங்கள் எப்படியுண்டாயின ?

விடை :—சகலபூதங்களுக்கும் தங்கள் முக்கியபாகம் ஒன்றும், மற்றப்பூதங்களி

னது அமுக்கிய பாகங்கள் நான்கும் சே ர்ந்திருக்கின்றன. அதனால் ஒவ்வொருபூ தத்திற்கும் ஐந்து ஐந்து தத்துவங்களா யின. அவைகளெல்லாஞ்சேர்ந்து இரு பத்தைந்து தத்துவங்களாயின.

வினா :—ஸ்தூலதேகத்தில் இந்த இரு பத்தைந்து தத்துவங்களும் எப்படியிரு க்கின்றன?

விடை :—

க. * ஆகாயத்தின் ஐந்துதத்துவங்க ள் :— காமம், குரோதம், சோகம், மோகம், பயம் என் பனவாம். அவற்றுள்

---

* சிலகிரந்தங்களில் சிரம், கண்டம், இதய ம், உதரம், இடை என்னும் இடங்களிலுள்ள ஆகாயங்கள், ஆகாயத்தின் ஐந்து தத்துவங்க ளெனப்படும். அவற்றுள் சிரத்திலுள்ள ஆகா யம், ஆகாயத்தின் முக்கியபாகமாம்; அநா கத (அறிவிற்கதீதமான) சப்தத்திற்கு ஆசிர

க. * காமம் :—ஆகாயத்தில் வாயுவி

---

யமாயிருத்தலால். கண்டதேசத்திலுள்ள ஆகாயம் வாயுவின்பாகமாம்; சுவாசப் பிரசுவாசங்களுக்கு ஆசிரயமாயிருத்தலால். இதயதேசத்திலுள்ள ஆகாயம் தேயுவின்பாகமாம்; பித்தத்திற்கு ஆசிரயமாயிருத்தலால். உதரதேசத்திலுள்ள ஆகாயம் ஜலத்தின்பாகமாம்; குடிக்கப்பட்ட ஜலத்திற்கு ஆசிரயமாயிருத்தலால். இடையிலுள்ள ஆகாயம் பிருதிவியின் பாகமாம்; கந்தத்திற்கு ஆசிரயமாயிருத்தலால். இவ்வாற்ருல் காமக்குரோதாதிகள் ஸ்தூலதேகத்தின் தத்துவங்களன்று; ஆனல் இலிங்கதேகத்தின் தர்மங்களாம். அன்னிய கிரந்தத்தின் கிரமமாகவோ காமாதிகள் இலிங்கதேகத்தின் முக்கிய தர்மங்களாம்; குடத்தில் நீரினது குளிர்ச்சியின் ஆவேசம்போல இவற்றின் ஆவேசம் ஸ்தூலதேகத்தில் உண்டாகிறது. ஆதலால் ஸ்தூலதேகத்திற்கும் கௌணதர்மங்களெனப்படும்.

* பிதாவிற்குச் சமானமாகப் புத்திரன் இ

ன்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனில், காமமாகிய விருத்தி சஞ்சலமாம்; வாயுவும் சஞ்சலமாம். ஆகையால் இது வாயுவின் பாகமாம்.

௨. குரோதம்:—ஆகாயத்தில் தேயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், கோபம்வரும்போது சரீரம் கொதிப்புடையதாகின்றது; தேயுவும் கொதிப்புடையதாயிருக்கிறது. ஆகையால் இது தேயுவின்பாகமாம்.

௩. * சோகம்:—ஆகாயத்தின் மு

---

ருத்தல்போல, காமம் வாயுவிற்குச்சமானமாயிருக்கிறது. ஆகையால் அது **வாயுவின் பாகமாம்.** இப்படியே மற்றத்தத்துவங்களிலும் அறிந்துகொள்ளுக.

* வாயுமுதலிய பூதங்களின் பாகங்களிலும் ஆகாயத்தின் அன்னிய நான்குபாகங்களினின்றும் ஒவ்வொருபாகஞ் சேர்ந்திருக்கிறது; அவை ஆகாயத்தின் முக்கியபாகமாகச் சொ

க்கியபாகமாம். ஏனெனின், சோகமுண்டாகும்போது சரீரம் சூனியம்போலாகின்றது; ஆகாயமும் சூனியம்போன்றிருக்கிறது. ஆகையால் இது ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

ச. மோகம்:—ஆகாயத்தில் ஜலத்தின்பாகம்சேர்ந்திருக்கிறது. ஏனெனின், மோகம் புத்திராதிகளிடத்தில் பரவுகின்றது; ஜலபிந்துவு (நீர்த்துளியு) ம் பரவுகின்றது. ஆகையால் இது ஜலத்தின்பாகமாம்.

---

ல்லப்படாவிடினும் சோகத்திற்கும் ஆகாயத்திற்கும் சமானத்தன்மை இருத்தலால், சோகம் ஆகாயத்தின்முக்கியபாகமாம். சிலவிடத்தில் உலோபமும் ஆகாயத்தைப்போல பதார்த்தங்களின் பிராப்தியால் நிறைவில்லாததாயிருத்தலால், ஆகாயத்தின் முக்கியபாகமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. இப்படியேமற்றப்பூதங்களிலும் அறிந்துகொள்ளுக.

௫. பயம் :—ஆகாயத்தில் பிருதிவியின் பாகஞ்சேர்ந்திருக்கிறது. ஏனெனின், பயம் உண்டாகும்போது சரீரம் ஜடமா (செயலற்றதா) கின்றது; பிருதிவியும் ஜடத்தன்மையாகிய சுபாவமுடையது. ஆகையால் இது பிருதிவியின்பாகமாம்.

௨. வாயுவின் ஐந்து தத்துவங்கள் :—நடத்தல், இருத்தல், ஓடுதல், பரவுதல், சுருங்குதல் என்பனவாம். அவற்றுள்

௧. நடத்தல் :— வாயுவில் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், நடத்தலென்பது போகுதற்காம்; ஜலமும்போகின்றது. ஆகையால் இது ஜலத்தின்பாகமாம்.

௭. இருத்தல் :—வாயுவில் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், இருத்தலென்பது சரீரத்தின் நிமிர்ச்சிக்

காம் ; தேயுவின் பிரகாசமும் நிமிர்கின்ற
து. ஆகையால் இது தேயுவின்பாகமாம்.

அ. ஓடுதல் :—வாயுவின் முக்கியபா
கமாம். ஏனெனின், ஓடுதலென்பது வி
ரைவாய்ச்செல்லுதற்காம் ; வாயுவும் வி
ரைவாய்ச்செல்லுகின்றது. ஆகையால்
இது வாயுவின் முக்கியபாகமாம்.

கூ. விரிதல் :—வாயுவில் ஆகாயத்தி
ன்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின்,
விரிதலென்பது பரவுதற்காம் ; ஆகாயமு
ம் பரவியிருக்கிறது ; ஆகையால் இதுஆ
காயத்தின்பாகமாம்.

ய. சுருங்குதல் :—வாயுவில் பிருதிவி
யின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனி
ன், சுருங்குதலென்பது சங்கோசம்செய்
தற்காம் ; பிருதிவியும் சங்கோசத்தை
(குவிதலை) அடைந்திருக்கிறது. ஆகை
யால் இது பிருதிவியின்பாகமாம்.

௩. தேயுவின் ஐந்துதத்துவங்கள் :—பசி, தாகம், சோம்பல், நித்திரை, காந்தி என்பனவாம். அவற்றுள்

௰௧. பசி :—தேயுவின்முக்கியபாகமாம். ஏனெனின், பசிஉண்டாகும்போது எதைச் சாப்பிடுகிறோமோ அது பஸ்பமாகிறது; அக்கினியிலும் எதைப்போடுகிறோமோ அது பஸ்பமாகிறது. ஆகையால் இது தேயுவின் முக்கியபாகமாம்.

௰௨. தாகம் :—தேயுவில் வாயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், தாகம் கண்டத்தை உலர்த்துகின்றது ; வாயுவும் ஈரவஸ்திரமுதலியவற்றை உலர்த்துகின்றது. ஆகையால் இது வாயுவின்பாகமாம்.

௰௩. சோம்பல் :—தேயுவில் பிருதிவியின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெ

னின், சோம்பல்வரும்போது சரீரம் ஜட மாய்ப்போகின்றது; பிருதிவியும் ஜடசுபாவமுடையது. ஆகையால் இது பிருதிவியின்பாகமாம்.

௰௪. நித்திரை :—தேயுவில் ஆகாயத்தின்பாகமாம். ஏனெனின், நித்திரைவரும்போது சரீரம் சூனியமாகின்றது; ஆகாயமும் சூனியத்தன்மையுடையதாயிருக்கின்றது. ஆகையால் இது ஆகாயத்தின்பாகமாம்.

௰௫. காந்தி :—தேயுவில் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், காந்தி வெயிலால் குறைகின்றது; ஜலமும் வெயிலால் குறைகின்றது. ஆகையால் இது ஜலத்தின்பாகமாம்.

௪. ஜலத்தின் ஐந்து தத்துவங்கள் :—சுக்கிலம், சோணிதம், உமிழ்நீர், மூத்திரம், வியர்வை

என்பனவாம். அவற்றுள்

௰௬. சுக்கிலம் :—ஜலத்தின் முக்கிய பாகமாம். ஏனெனின், சுக்கிலம் வெண்ணிறமாயும் கருப்பத்திற்கு ஏதுவாயுமிருக்கின்றது; ஜலமும் வெண்ணிறமாயும் விருட்சத்திற்கு ஏதுவாயும் இருக்கிறது. ஆகையால் இது ஜலத்தின் முக்கியபாகமாம்.

௰௭. சோணிதம் :—ஜலத்தில் பிருதிவியின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், சோணிதம் சிவப்புவருணமாம்; பிருதிவியும் ஒவ்வோரிடத்து சிவப்பாயிருக்கிறது. ஆகையால் இது பிருதிவியின்பாகமாம்.

௰௮. உமிழ்நீர்:—ஜலத்தில் ஆகாயத்தின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், உமிழ்நீர் மேலுங்கீழுமாயிருக்கின்றது; ஆகாயமும் மேலுங்கீழுமாயிருக்கின்றது.

ஆகையால் இது ஜலத்தின்பாகமாம்.

௰௯. மூத்திரம் :—ஜலத்தில் தேயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், மூத்திரம் சூடாயிருக்கிறது ; தேயுவும் சூடாயிருக்கிறது. ஆகையால் இது தேயுவின்பாகமாம்.

௨௰. வியர்வை :—ஜலத்தில் வாயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், வியர்வை உழைப்பதனால் உண்டாகின்றது ; வாயுவும் விசிரிமுதலியவற்றால் உழைப்பதனால் உண்டாகின்றது. ஆகையால் இது வாயுவின்பாகமாம்.

ரு. பிருதிவியின் ஐந்துதத்துவங்கள்:—எலும்பு, மாமிசம், நாடி, தோல், உரோமம் என்பனவாம். அவற்றுள்

௨௰௧. * எலும்பு :—பிருதிவியின் மு

* நகமும் பல்லும் எலும்பிலடங்கும்.

க்கியபாகமாம். ஏனெனின், கடினமாயு
ம் மஞ்சள்நிறமாயுமிருக்கின்றது; பிருதி
வியும் கடினமாயும் சிலவிடத்தில் மஞ்சள்
நிறமாயுமிருக்கின்றது. ஆகையால் இது
பிருதிவியின் முக்கியபாகமாம்.

உ௰உ. மாமிசம் :—பிருதிவியில் ஜல
த்தின்பாகம்சேர்ந்திருக்கிறது. ஏனெனி
ன், மாமிசம் ஈரமாயிருக்கிறது; ஜலமும்
ஈரமாயிருக்கிறது. ஆகையால் இது ஜல
த்தின்பாகமாம்.

உ௰ங. நாடி :—பிருதிவியில் தேயுவி
ன் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனி
ன், நாடியால் தாபத்தின் பரீட்சை உண்
டாகின்றது; தேயுவும் தாபரூபமாயிரு
க்கின்றது. ஆகையால் இது தேயுவின்
பாகமாம்.

உ௰ச. தோல்:—பிருதிவியில்வாயு வி
ன்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின்,

தோலால் சீதம், உஷ்ணம், வன்மை, மென்மையெனும் பரிசங்கள் அறியப்படுகின்றன ; வாயுவும் பரிசகுணமுடையதாயிருக்கின்றது. ஆகையால் இது வாயுவின்பாகமாம்.

உ௫. * உரோமம் :— பிருதிவியில் ஆகாயத்தின்பாகம்சேர்ந்திருக்கிறது. எனெனின், உரோமம் சூனியமாயிருக்கிறது. அதைவெட்டுவதால் துக்கமுண்டாகிறதில்லை ; ஆகாசமும் சூனியமாயிருக்கிறது. ஆகையால் இது ஆகாயத்தின்பாகமாம்.

இவ்வாறு ஸ்தூலதேகத்தில் இருபத்தைந்து தத்துவங்களிருக்கின்றன.

வினா :—இருபத்தைந்து தத்துவங்களையும் அறிதற்குப்பிரயோசனமென்ன ?

---

* கேசம் (தலைமயிர்) உரோமத்தி (சரீரத்தின் மயிரி) லடங்கும்.

விடை :—இருபத்தைந்து தத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்ல. இவை பஞ்சீகிருத பஞ்ச மகாபூதங்களுடையனவாம். இவற்றையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன் என்று நிச்சயஞ்செய்தல், இருபத்தைந்து தத்துவங்களையும் அறிதற்குப் பிரயோசனமாம்.

வினு :—"இருபத்தைந்து தத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்ல" என்று அறிவதெப்படி ?

விடை :—

க. ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களில் :—

க. காமம் :—உண்டாகும் போதும் நான் அறிகிறேன். காமம் உண்டாகாத போது அதன் இன்மையை *(அபாவத்

* காரியத்தின் உற்பத்திக்குமுன் உள்ள

தை) யும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தக் காமம் நானல்ல; என்னுடையது மல்ல; இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ. குரோதம்:—உண்டாகும்போதும் நான் அறிகிறேன். குரோதம் உண்டாகாதபோது அதன் இன்மையையும்

---

அபாவம், **பிராகபாவம்** (முன்னின்மை). நாசத்தின் பின்னுள்ள அபாவம், **பிரத்துவம்சாபாவம்** (அழிவுபாட்டின்மை). மூன்றுகாலத்திலுமுள்ள அபாவம், **அத்தியந்தாபாவம்** (முழுதுமின்மை). ஒருவஸ்துவினின்றும் மற்றொரு வஸ்துவிற்குள்ள பேதம், **அன்னியோன்னியாபாவம்** (ஒன்றிலொன்றின்மை). இவ்வாறு அபாவம் நான்குவிதமாம்.

நான் அறிகிறேன். ஆகையால் இந்தக் குரோதம் நானல்ல; என்னுடையதும ல்ல ; இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் க டதிருஷ்டாவைப்போல இதனினும் வே ருயிருக்கிறேன்.

௩. சோகம் :—உண்டாகும்போதும் நான் அறிகிறேன். சோகம் உண்டாகா தபோது அதன் அபாவத்தையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தச் சோக ம் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

௪. மோகம் :—உண்டாகும்போதும் நான் அறிகிறேன். மோகம் உண்டாகா தகாலத்து அதன் அபாவத்தையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த மோகம்

நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது ஆ காயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ரு. பயம் :— உண்டாகும் போதும் நான் அறிகிறேன். பயம் உண்டாகாத காலத்து அதன் இன்மையையும் நான் அ றிகிறேன். ஆகையால் இந்தப் பயம் நா னல்ல ; என்னுடையதுமல்ல ; இது ஆ காயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ. வாயுவின் ஐந்து தத்துவங் களில் :—

சு. நடத்தல் :—சரீரம் நடக்கும்போ தும் நான் அறிகிறேன். சரீரம் நடவா தகாலத்து அந்நடையின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த ந

டை நானல்ல. என்னுடையது மல்ல. இது வாயுவினுடையதாம். இதைஅறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

எ. இருத்தல் :—சரீரம் இருக்கும்போதும் நானறிகிறேன். அது இராதகாலத்து அவ்விருத்தலின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இவ்விருத்தல் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இதுவாயுவினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

அ. ஓடுதல் :—சரீரம் ஓடும்போதும் நானறிகிறேன் ஓடாதகாலத்து அவ்வோடுதலின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இவ்வோடுதல் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது வாயுவினுடையதாம். இதையறியும்திரு

ஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

கூ. விரிதல் :—சரீரம் விரியும்காலத்தும் நான் அறிகிறேன். சரீரம் விரியாதகாலத்து அவ்விரிதலின்இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இவ்விரிதல் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது வாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ய. சுருங்குதல் :—சரீரம் சுருக்கத்தை அடையும்போதும் நானறிகிறேன். சரீரம் சுருக்கத்தை அடையாதகாலத்து அதன் இன்மையையும் நான்அறிகிறேன். ஆகையால் இச்சுருங்குதல் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது வாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகி

ய நான் கடதிருஷ்டாவைப்போல இத
னினும் வேருயிருக்கிறேன்.

௩. தேயுவின் ஐந்து தத்துவங்க
ளில் :—

௰க. பசி :—உண்டானுல் அதையும்
நானறிகிறேன். பசி உண்டாகாத கால
த்து அதன் இன்மையையும் நான் அறிகி
றேன். ஆகையால் இந்தப் பசி நானல்
ல ; என்னுடையதுமல்ல ; இது தேயுவி
னுடையதாம். இதை அறியும் திருஷ்
டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல
இதனினும் வேருயிருக்கிறேன்.

௰உ. தாகம் :—உண்டானுல் அதையு
ம் நான் அறிகிறேன். தாகம் உண்டாகா
தகாலத்து அதன் இன்மையையும் நான்
அறிகிறேன். ஆகையால் இந்தத் தாகம்
நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது
தேயுவினுடையதாம். இதை அறியும்

திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

மரு. சோம்பல் :—உண்டானுல் அதையும் நானறிகிறேன். சோம்பலுண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தச் சோம்பல் நானல்ல; என்னுடையதுமல்ல; இது தேயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

மசு. நித்திரை :— உண்டானுல் அதையும் நானறிகிறேன். நித்திரை உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த நித்திரை நானல்ல; என்னுடையதுமல்ல; இது தேயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டா

வைப்போல இதனினும் வேறாயிருக்கி றேன்.

௰௫. காந்தி :—உண்டானால் அதையு ம் நானறிகிறேன். காந்தி உண்டாகாத காலத்து அதனின்மையையும் நான் அ றிகிறேன், ஆகையால் இந்தக் காந்தி நானல்ல ; என்னுடையதுமல்ல; இது தேயுவினுடையதாம். இதை அறியும திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இதனினும் வேறாயிருக்கிறே ன்.

## ௪. ஜலத்தின் ஐந்து தத்துவங்களில் :—

௰௬. சுக்கிலம் :—சரீரத்தில் அதிகரி த்தால் அதையும் நான் அறிகிறேன் . சு க்கிலம் குறைந்தகாலத்து அதன் இன் மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தச் சுக்கிலம் நானல்ல ; என்னுடை

யதுமல்ல ; இது ஜலத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கட திருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

௫எ. சோணிதம் :—சரீரத்தில் அதிக ரித்தால் அதையும் நானறிகிறேன். சோ ணிதம் குறைந்தகாலத்து அதன் இன்மை யையும் நானறிகிறேன். ஆகையால் இ ந்தச் சோணிதம் நானல்ல; என்னுடைய துமல்ல ; இது ஜலத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வே றாயிருக்கிறேன்.

௫அ. உமிழ்நீர் :—ஒழுகினால் அதை யும் நானறிகிறேன். உமிழ்நீர் ஒழுகாத காலத்து அதன் இன்மையையும் நானறி கிறேன். ஆகையால் இந்த உமிழ்நீர் நா னல்ல என்னுடையதுமல்ல ; இது ஜல

த்தினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

௰௯. மூத்திரம் :—வந்தால் அதையும் நானறிகிறேன். மூத்திரம் வராதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இது நானல்ல; என்னுடையதுமல்ல; இது ஜலத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ௰. வியர்வை :— உண்டானால் அதையும் நானறிகிறேன். வியர்வை உண்டாகாதகாலத்து அதன்இன்மையும் நானறிகிறேன். ஆகையால் இந்த வியர்வை நானல்ல; என்னுடையதுமல்ல; இது ஜலத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை

ப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ரு. பிருதிவியின் ஐந்து தத்துவங்களில் :—

உ௰க. எலும்பு :— ஒழுங்காயிருக்குமாயின் அதையும் நானறிகிறேன். ஒழுங்காயிராதகாலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த எலும்பு நானல்ல; என்னுடையதுமல்ல; இது பிருதிவியினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ௰உ. மாமிசம் :—அதிகரிக்குமாயின் அதையும் நானறிகிறேன். அது குறையுங்காலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த மாமிசம் நானல்ல; என்னுடையதுமல்ல; இது பிருதிவியினுடையதாம். இதையறியும் தி

ருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ௰௩. நாடி :—நடக்குமாயின் அதையும் நானறிகிறேன். நடவாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்த நாடி நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது பிருதிவியினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ௰௪. தோல் :—பரிசத்தைக் கிரகிக்குமாயின் அதையும் நானறிகிறேன். பரிசத்தைக் கிரகியாதகாலத்து அக்கிரகணம்செய்தலின் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தத் தோல் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இதுபிருதிவியினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை

ப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ௰௫. உரோமம் :— அதிகமாயிருந் தால் அதையும் நானறிகிறேன். உரோ மம் குறைந்தகாலத்து அதன் குறைவை யும் நானறிகிறேன். ஆகையால் இந்த உரோமம் நானல்ல; என்னுடையதுமல் ல; இது பிருதிவியினுடையதாம். இ தை அறியும் திருஷ்டாவாகிய நான் க டதிருஷ்டாவைப்போல இதனினும் வே றாயிருக்கிறேன்.

இவ்வாறு இருபத்தைந்து தத்துவங்க ளும் நானல்ல; என்னுடையவுமல்லவெ ன்றறிக.

வினா :—"இருபத்தைந்து தத்துவங்க ளும் நானல்ல; என்னுடையவுமல்ல" எ ன்று அறிதலால் என்ன நிச்சயமுண்டா யிற்று?

விடை :—ஸ்தூலதேகமும், அதன் த

ர்மங்களாகிய க. பெயர். உ. ஜாதி. ௩. ஆசிரமம். ச. வருணம் (நிறம்). ரு. சம்பந்தம். சூ. பரிமாணம் (வடிவம்). எ. ஜனனமரணம் என்பவைகளும் நானல்ல ; என்னுடையவுமல்ல என்னும் நிச்சயமுண்டாயிற்று.

வினு :—க. பெயர் நானல்ல ; என்னுடையதுமல்ல வென்றறிவதெப்படி ?

விடை :—பிறப்பதற்குமுன் பெயரில்லை ; பிறந்தபிறகு கற்பிக்கப்பட்டிருக்கிறது. அன்றியும் சரீரத்தின்வேறுவேறாகிய அவயவங்களிலும் விசாரிக்குமிடத்துப் பெயர் அகப்படுகிறதில்லை. ஆகையால் இந்தப் பெயர் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது ஸ்தூலதேகத்தில் கற்பிக்கப்பட்டிருக்கிறது. இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறே

ன். இப்படிப் பெயர் நானல்ல; என்னு டையதுமல்லவென்றறிக.

வினா :—உ. ஜாதி (வருணம்) நான ல்ல; என்னுடையது மல்லவென்றறிவ தெப்படி?

விடை :—பிராமணன்முதலிய ஜாதி ஸ்தூலதேகத்தின் தர்மமாம்; சூட்சும தேக ஆன்மாக்களின் தர்மமாகாது. ஏ னெனின், முன்தேகத்திலிருந்த இலிங்க தேகமும் ஆன்மாவுமே இந்த வர்த்த மான தேகத்திலும் இனிவரும் தேகத்தி லுமிருக்கின்றன. ஜாதியோ முன்தேகத் திலிருந்தது இந்தத் தேகத்திலில்லை; இ ந்த தேகத்திலிருப்பது இனிவரும் தேக த்திலிராது. ஆகையால் ஜாதி ஸ்தூல தேகத்தின் தர்மமாமன்றி; சூட்சுமதேக ஆன்மாக்களின் தர்மமாகாது. சரீரத்தி ன் அவயவங்களில் விசாரித்துப்பார்க்

குமிடத்து, ஜாதியென்பது ஸ்தூலதேகத்திலும் அகப்படுகிறதில்லை. ஆகையால் இந்த ஜாதி நானல்ல; என்னுடையதுமல்ல; இது ஸ்தூலதேகத்தில் ஆரோபிதமாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன். இப்படி ஜாதி நானல்ல; என்னுடையதுமல்லவென்றறிக.

வினா :— ௩. ஆசிரமம் நானல்ல; என்னுடையதுமல்லவென்றறிவதெப்படி?

விடை :—பிரமசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சன்னியாசி என்னும் நான்கு ஆசிரமங்களை வேறுவேறு கன்மத்தைச்செய்விக்கும்பொருட்டாரோபித்து, ஸ்தூலதேகத்தில் ஒப்பியிருக்கிறார்கள். அவைகளும் மனிதர்மாத்திரத்தில் சம்பவி

க்கிறதில்லை. ஆகையால் இந்த ஆசிரமங்கள் நானல்ல; என்னுடையவுமல்ல; இவை ஸ்தூலதேகத்தில் ஆரோபிதமாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன். இப்படி ஆசிரமம் நானல்ல; என்னுடையதுமல்லவென்றறிக.

வின:—ச. வருணம் (நிறம்) நானல்ல; என்னுடையதுமல்லவென்றறிவதெப்படி?

விடை:—வெண்மை, கருமை, செம்மை, பொன்மை முதலிய நிறங்கள் ஸ்தூலதேகத்தில் பிரத்தியட்சமாகக் காணப்படுகின்றன. நான் ஸ்தூலதேகமல்லாமையால், இந்த நிறங்கள் நானல்ல; என்னுடையவுமல்ல; இவை ஸ்தூலதேகத்தினுடையவாம். இவைகளை அறியும்

திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன். இப்படி வர்ணம் நானல்ல ; என்னுடையது மல்லவென்றறிக.

வினா :—ரு. சம்பந்தம் நானல்ல, என்னுடையதுமல்லவென்றறிவதெப்படி?

விடை :—பிதா புத்திரன், குரு சீஷன், ஸ்திரீ புருஷன், எஜமானன் சேவகன் என்னும் இவைமுதலிய ஸ்தூலதேகத்தின் சம்பந்தத்தை ஒருவருக்கொருவர் பிரசித்தமாய் மித்தையாகக் கொண்டிருக்கிறார்கள். அவற்றை விசாரித்துப்பார்க்குமிடத்து அகப்படுகிறதில்லை. நான் ஸ்தூலதேகத்திற்கு வேறாய் அசங்கனாயிருத்தலால், இந்தச் சம்பந்தங்கள் நானல்ல; என்னுடையவுமல்ல. இவை ஸ்தூலதேகத்தில் ஆரோபிதமாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ

டாவைப்போல இற்றினும் வேறாயிருக்கிறேன். இவ்வாறு சம்பந்தம் நானல்ல; என்னுடையதுமல்லவென்றறிக.

வினு :—பரிமாணம் (வடிவம்) நானல்ல ; என்னுடையது மல்லவென்றறிவதெப்படி ?

விடை:—நெட்டை, குட்டை, பருமன், மெலிவு, கோணல், ஒழுங்கு இவைமுதலிய வடிவங்களும் பிரசித்தமாக ஸ்தூலதேகத்தில் காணப்படுகின்றன. நான் ஸ்தூலதேகத்திற்கு வேறாய் நிராகாரனாயிருத்தலால், இந்த ஆகார (வடிவ) ங்கள் நானல்ல; என்னுடையவுமல்ல ; இவை ஸ்தூலதேகத்தினுடையனவாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன். இப்படிப் பரிமாணம் நானல்ல ; என்னுடையதுமல்லவென்றறிக.

வினா :—எ. நான் ஜனன மரணமு டையவனல்ல ; எனக்கு ஜனனமரணமு ண்டாகாதென்றறிவதெப்படி ? .

விடை :—ஆன்மாவிற்கு ஜன்மம் ஒ ப்புவோமாயின், ஆன்மா அநித்தியமாகு ம். இந்த வார்த்தை மீமாம்சகன் முத லாயுள்ள பரலோகவாதிகளாகிய ஆஸ்தி கர்களுக்கும் உடன்பாடல்ல. ஏனெனி ன், ஆன்மா உற்பத்தி யுடையதாகுமா யின் நாசமுடையதுமாகும் ; அதனால் பூர்வ ஜன்மத்தில் செய்யப்படாத கன்ம த்தால் சுகதுக்கங்களின் அநுபவமும், இ ந்த ஜன்மத்தில் செய்யப்பட்ட கன்மத்தி ற்கு அநுபவமின்றி நாசமும் ஆகிய இவ் விரண்டுதோஷங்களும் உண்டாகும். ஆ கையால் கன்மவாதிகளின் மதப்படி ஆ ன்மாவைக் கர்த்தாபோக்தாவென வொ ப்பினும் ஜனனமரணமில்லாததாகவே

ஒப்பவேண்டியதாகும்.

அன்றியும் ஆன்மாவின் ஜன்மத்திற்கு யாதொரு காரணமும் சம்பவிக்கவில்லை. ஏனெனின், ஆன்மாவிற்குக் காரணமிருக்குமாயின், அது ஆன்மாவைவிட வேறாகவே யிருக்கவேண்டும்; ஆன்மாவிற்கு வேறாகவோ அனன்மாவாகிய நாமரூபங்களிருக்கின்றன; அவைகள் ஆன்மாவில் இரஜ்ஜுசர்ப்பம்போலக் கற்பிதமாயிருத்தலால் காரணமாகா. பிரமமோ கடாகாயத்தின் சொரூபமாகிய மகாகாயம் போல ஆன்மாவைவிட வேறாகாமல் அதன் சொரூபமாகவேயிருத்தலால் காரணமாகாது. அதனால் ஆன்மாவிற்கு ஜன்மமில்லை.

ஜன்மமில்லாமையால் மரணமுமில்லை; ஆன்மாவினிடத்தில் ஜனன மரணமில்லாமையால், அது க. பிறப்பு. உ. இ

ருப்பு. ௩. வளர்ச்சி. ௪. விகாரம். ௫. குறைவு. ௬. மரணம் என்னும் ஆறுவிகாரங்களும் இல்லாததாயிருக்கின்றது. ஆகையால் நான் ஜனனமரணமுடையவனல்லன். இவைகள் ஸ்தூலதேகத்திற்குக் கன்மத்தினாலுண்டாகின்றன. இவற்றையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இவற்றினும் வேறாயிருக்கிறேன். இப்படி நான் ஜனனமரணமுடையவனல்ல ; எனக்கு ஜனனமரணமுண்டாகாதெனவறிக.

வினா :—பஞ்சமகா பூதங்களின் நிவர்த்தியில் திருஷ்டாந்தம் யாது ?

விடை :—திருஷ்டாந்தம் :—ஒருவனுக்குப் பூதம் பிடித்திருக்குமாயின், அவன் பூசாரியை அழைத்து உடுக்கடிப்பித்து உப்புமுதலிய ஐந்துபதார்த்தங்களைச் சேர்த்து அதற்குப் பலிகொடுத்துப் பூதத்தை

நிவர்த்திக்கிறுன். சிந்தாந்தம் :— அது போல ஆகாயமுதலிய பஞ்சபூதங்கள் சரீரரூபமாய் ஜீவனைப் பிடித்திருக்கின்றன. அவைகளின் நிவர்த்தியின் பொருட்டு பிரமநிஷ்டகுருவாகிய பூசாரியை *

* விவேகமுதலிய நற்குணங்களோடு மோட்ச இச்சையுள்ள அதிகாரியானவன், கையில் சந்திப்புக்குரிய பதார்த்தங் (பத்திர புஷ்ப பலாதி) களைக்கொண்டு குருவைச் சரணம்புகுந்து, சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து "ஐயனே, எனக்குப் பிரமவித்தையை உபதேசம்செய்வீராக" என்று சொல்லி "பந்தமென்பது யாது? மோட்சமென்பது யாது? அவித்தையென்பது யாது? வித்தையென்பது யாது" என்னுமிவைமுதலிய பிரசினைகளைச்செய்து, குருவினது சந்தோஷத்தின்பொருட்டு சரீரம், மனம், தனம், வாக்கு என்பவைகளை அர்ப்பணம்செய்து சேவைசெய்யவேண்டும். இது பிரமவித்தையைக் கைக்கொள்ளும் விதியாம்.

விதியோடு சரணம்புகுந்து வேதசாஸ்திரமாகிய உடுக்கடிப்பித்து மேற்கூறப்பட்ட இருபத்தைந்து தத்துவங்களிலிருந்து ஐந்து ஐந்து தத்துவங்களாகிய பலியை ஒவ்வொரு பூதத்திற்கும் தன்தன் பாகத்தைக்கொடுத்து, நானிந்த இருபத்தைந்து தத்துவங்களுக்கும் திருஷ்டாவாயிருக்கிறேன் என்று இப்படி நிச்சயம் செய்வதால் இந்தப் பஞ்சமகாபூதங்களுக்கும்* அத்தியந்த நிவர்த்தி உண்டாகின்றது.

இவ்வாறு ஸ்தூலதேகத்திற்கு நான் திருஷ்டாவாயிருக்கிறேன்.

## ௨. சூட்சுமதேகத்திற்கு நான் திருஷ்டா.

வினா :—சூட்சுமதேகமென்பது யாது?

---

*மறுபடியும் தொடராதிருத்தல் அத்தியந்தநிவர்த்தி.

விடை :—அபஞ்சிகிருத பஞ்சமகாபூதங்களின் பதினேழு தத்துவங்களினது சூட்சும்தேகமாம்.

வினா :—சூட்சுமதேகத்தின் பதினேழு தத்துவங்களெவை ?

விடை :—க—ரு. ஐந்து ஞானேந்திரியம். சா—ய. ஐந்து கன்மேந்திரியம். யக—யரு. ஐந்து பிராணன். யசா. மனம். யஎ. புத்தி என்னுமிவை பதினேழுதத்துவங்களாம்.

வினா :—க—ரு. ஐந்து * ஞானேந்திரியங்கள் எவை ?

விடை :—சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, கிராணம் என்னுமிவ்வைந்தும் ஞானேந்திரியங்களாம்.

---

* ஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியம், ஞானேந்திரியம்.

வினா :—௬—ம. ஐந்து * கன்மேந்திரியங்களெவை ?

விடை :—வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், குதம் என்னும் இவ்வைந்தும் கன்மேந்திரியங்களாம்.

வினா :—மக—மரு. ஐந்து பிராணன் (பஞ்சவாயு) எவை ?

விடை :—பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், என்னுமிவை பஞ்சவாயுக்களாம்.

வினா :—ம௬. மனமென்பதெது ?

விடை :—சங்கற்ப விகற்பமாகிய விருத்தி மனமெனப்படும்.

வினா :—மஎ. புத்தியென்பதெது ?

விடை :—நிச்சயரூபமாகிய விருத்தி புத்தியெனப்படும்.

---

* கன்மத்திற்குச் சாதனமாகிய இந்திரியம், **கன்மேந்திரியம்.**

வின :—அபஞ்சீகிருத பஞ்சமகாபூத மென்பதெது?

விடை :—எந்தப் பூதங்களுக்கு முன் சொன்னபடி பஞ்சீகரணமுண்டாகவில் லையோ அந்தப் பூதங்கள் அபஞ்சீகிருதப ஞ்சமகாபூதங்களெனப்படும். அவற்றை யே சூட்சுமபூதங்களென்றும், தன்மாத்தி ரைகளென்றும் கூறுவர்.

வின :—அபஞ்சீகிருத பஞ்சமகா பூ தங்களின் பதினேழுதத்துவங்களை அ றிவதெப்படி?

விடை :—

ஞானேந்திரிய கன்மேந்திரிய பஞ்ச

கங்களில் :—

க—உ. ஆகாயத்தின் * சத்துவகுண

---

* சருவபதார்த்தங்களிலும் சாத்துவீகம், இரா சதம், தாமதமென மூன்றுகுணங்களிருக்கின்றன.

பாகம் சுரோத்திரம். இரஜோகுணபாக
ம் வாக்கிந்திரியம். சுரோத்திரேந்திரியம்
சப்தத்தைக் கேட்கின்றது. வாக்கிந்திரி
யம் சப்திக்கின்றது. சுரோத்திரம் ஞா
னேந்திரியம் ; வாக்கு கன்மேந்திரிய
ம் ; இவ்விரண்டிற்கும் சிநேகமுண்டு.

ந—ச. வாயுவின் சத்துவகுணபாக
ம். துவக்கு. இரசோகுணபாகம் பாணி.
துவக்கிந்திரியம் பரிசத்தைக் கிரகிக்கின்ற
து. பாணீந்திரியம் அதை நிருவாகம்
செய்கின்றது. துவக்கு ஞானேந்திரிய
ம் ; பாணி கன்மேந்திரியம் ; இவ்விரண்டி
ற்கும் சிநேகமுண்டு.

ரு—சு. தேயுவின் சத்துவகுணபாக
ம் சட்சு. இரசோகுணபாகம் பாதம்.
சட்சுவிந்திரியம் உருவத்தைக்கிரகிக்கின்
றது ; பாதேந்திரியம் நடக்கின்றது. ச
ட்சு ஞானேந்திரியம் ; பாதம் கன்மே

ந்திரியம் ; இவ்விரண்டிற்கும் சிநேக முண்டு.

எ—அ. ஜலத்தின் சத்துவகுண் பாகம் சிங்ஙுவை. இரசோகுணபாகம் உபஸ் தம். சிங்ஙுவேந்திரியம் இரசத்தைக் கிர கிக்கின்றது. உபஸ்தேந்திரியம் இர்சத் தை விடுகின்றது. சிங்ஙுவை ஞானேந்திரி யம் ; உபஸ்தம் கன்மேந்திரியம் ; இவ்விர ண்டிற்கும் சிநேகமுண்டு.

௯—௰. பிருதிவியின் சத்துவகுணபா கம் கிராணம். இரசோகுணபாகம் குத ம். கிராணேந்திரியம் கந்தத்தைக் கிரகிக் கின்றது. குதேந்திரியம் கந்தத்தை விடுகி ன்றது. கிராணம் ஞானேந்திரியம் ; கு தம் கன்மேந்திரியம் ; இவ்விரண்டிற்கும் சிநேகமுண்டு.

பஞ்சப்பிராண மனோபுத்திகளில் :—

௰க—௰ரு. இந்தப் பஞ்சபூதங்களின்

இரசோகுணபாகங்கள் சேர்ந்து பஞ்சவா யுக்களாயின.

௰௬—௰௭. இந்தப் பஞ்சபூதங்களின் சத்துவகுண.பாகங்கள்சேர்ந்து அந்தக்க ரணமாயின. இவ்வந்தக் கரணமே மன ரூபமாயும் புத்திரூபமாயுமிருக்கின்றது. இங்கே சித்தமும் அகங்காரமும், மனதி லும் புத்தியிலுமடங்கும்.

இப்படி அபஞ்சீகிருத பஞ்சமகாபூத ங்களின் காரியமாகிய பதினேழுதத்துவ ங்களையுமறிக.

வினா :—பதினேழு தத்துவங்களையும் அறிதற்குப் பிரயோசனமென்ன ?

விடை :—இந்தப் பதினேழுதத்துவங்க ளும் நானல்ல ; என்னுடையவுமல்ல ; இ வைகள் அபஞ்சீகிருத பஞ்சபூதங்களு டையவாம் என்பது இப்பதினேழுதத்து வங்களையும் அறிதற்குப்பிரயோசனமாம்.

வினு :—இந்தப்பதினேழு தத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்லவென்றறிவதெப்படி?

விடை :—இந்தப்பதினேழுதத்துவங்களையும் நான் அறிகிறவனுயிருக்கிறேன். எவன் எதை அறிகிறானோ, அவன் அதனினும்வேறுவன் என்பதுநியமமாகையால், இந்தப்பதினேழு தத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்லவென் றறியவேண்டும்.

வினு :—இதில் அறியத்தக்க திருஷ்டாந்தம் யாது?

விடை :—திருஷ்டாந்தம் :—நாடகசாலையிலுள்ள தீபம், இராஜா மந்திரிமுதலியோர்களும் நாயகியும் வாத்தியக்காரர்களும் மற்றச்சபையிலுள்ள ஜனங்களும் உட்கார்ந்திருந்தால், அப்போதும் பிரகாசிக்கிறது. எல்லோரும்எழுந்துபோனகாலத்து

சூன்யமாகிய வீட்டையும் பிரகாசிப்பிக்கிறது.

சித்தாந்தம் :—அதுபோல ஸ்தூலதேகமாகிய நாடகசாலையில் சாட்சியாகிய நான் தீபமாயிருக்கிறேன் ; அந்த நான் சிதாபாசனாகிய இராஜா, மனமாகிய மந்திரி, பஞ்சப்பிராணனாகிய சேவகர்கள், புத்தியாகிய நாயகி (கூத்தாடிச்சி), தசேந்திரியங்களாகிய வாத்தியக்காரர், சப்தமுதலிய பஞ்சவிஷயமாகிய சபையின் ஜனங்களென்னு மிவர்கள் ஜாக்கிர சொப்பன சமயங்களில் இருந்தால், அப்போது இவர்களை அறிகிறேன். சுஷூத்தி சமயத்தில் இவர்களில்லாதபோது அவர்களில்லாமையையும் நான் அறிகிறேன் என்றிப்படி இதில் சொல்லப்பட்ட திருஷ்டாந்தத்தை அறிக.

வினு :—அதை எப்படி அறியலாம்?

விடை :—ஜாக்கிராவஸ்தையில் இந்திரிய அந்தக்கரணங்க ளிரண்டினது உதவியால் நான் அறிகிறேன். சொப்பனாவஸ்தையில் இந்திரியமின்றி அந்தக்கரணமாத்திரத்தின் சகாயத்தால் நான் அறிகிறேன். சுழுத்தி அவஸ்தையில் இந்திரியம் அந்தக்கரணமென்னும் இரண்டினது சகாயமின்றி யான்மாத்திரமே அறிகிறேன் என்றிப்படி அறிக.

வி௲ :—இதில் வேறு திருஷ்டாந்தம் யாது ?

விடை :—திருஷ்டாந்தம் :—ஐந்து துவாரமுள்ள குடத்திற்குள் பாத்திரம் எண்ணெய் திரிகளோடு தீபம் எரிகிறது. அந்தத் தீபமானது பாத்திரம், எண்ணெய், திரி, குடத்தின் உள்ளவயவம், குடத்தின் துவாரங்களென்னும் இவற்றைப் பிரகாசிப்பதாய்க் குடத்திற்கு வெளியில் துவாரங்களுக்கு நேரே வைக்கப்பட்டுள்ள வி

ணை, புஷ்பக்கொத்து, இரத்தினம், இரச பாத்திரம், அத்தர்ப்புட்டியென்னும் இவை எல்லாவற்றையும் துவாரத்தின் வழியாக ப்பிரகாசிப்பிக்கிறது. சூரியரூபமாக சகலபிரமாண்டத்தையும் பிரகாசிப்பிக்கிறது. மகாதேஜோமயமாகிய சாமானியரூபத்தால் சருவவியாபியாயிருக்கிறது.

சித்தாந்தம் :— அதுபோல பஞ்சஞானேந்திரியமாகிய துவாரமுள்ள ஸ்தூல தேகமாகிய குடத்தினுள் இதயதாமரையாகிய பாத்திரத்தில் மனமாகிய எண்ணெயும் புத்தியாகிய திரியும் இருக்கின்றது. அதன்பேரில் ஆரூடமாயுள்ள ஆன்மாவாகிய தீபம் இதயமாகிய பாத்திரத்தையும், மனமாகிய எண்ணெயையும், புத்தியாகிய திரியையும், தேகத்தின் உள்ளவயவங்களையும், இந்திரியமாகிய துவாரங்களையும் அறிவதாய் இந்திரியங்களோடு

சம்பந்தமுள்ள சத்தமுதலிய விஷயங்களை யும் இந்திரியவாயிலாக அறிகிறது. ஈசுர ரூபமாக பிரமாண்டமுதலிய சகல பாகி யப்பிரபஞ்சத்தையும் அறிகிறது. சாமா ணியசைதன்னியமாகிய பிரமரூபத்தால் சருவவியாபியாயிருக்கிறது.

இஃது இதில் வேறு*திருஷ்டாந்தமாம்.

வினு :—இப்படிச் சொல்லுவதால் எ ன்ன நிச்சயமுண்டாயிற்று ?

விடை :—மேற்கூறப்பட்டுள்ள பதினே ழுதத்துவங்களும் யானல்ல ; இவை என் னுடையவுமல்ல; இவை பஞ்சமகாபூதங்க ளினுடையவாம். இவற்றை அறியும் தி ருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்

* இங்கே வேறுயாகசாலையின் திருஷ்டாந்த ம் உண்டு. அதுமேல் ஏழாவது கலையில் உபதி ருஷ்டாவென்னும் ஆன்மாவின் விசேஷணப்பி ரசங்கத்திற்சொல்லப்படும்.

போல இவற்றினும் வேறாயிருக்கிறேன் என்னும் நிச்சயமுண்டாயிற்று.

வி௵ :—பதினேழுதத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்லவென்றறிவதெப்படி ?

விடை :—ஞானேந்திரியமைந்தில் :—

௧. சுரோத்திரம் :—சத்தத்தைக்கேட்குமாயின் அதையும் நானறிகிறேன். கேளாதகாலத்து அக்கேட்டலின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தச் சுரோத்திரம் நானல்ல; என்னுடையதுமல்ல. இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

௨. துவக்கு :—ப்ரிசத்தைக் கிரகிக்குமாயின் அதையும் நானறிகிறேன். கிரகிக்காத காலத்து அந்தக் கிரகித்தலின் இன்

மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தத் துவக்கு நானல்ல; இது என்னுடையதுமல்ல; இதுவாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ங. சட்சு :—உருவத்தைப் பார்த்தால் அதையும் நானறிகிறேன். பார்க்காதகாலத்து அப்பார்த்தலின் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தச் சட்சு நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது தேயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ச. சிங்குவை :—இரசத்தின் உருசியைக் கிரகித்தால் அதையும் நான் அறிகிறேன். உருசியைக் கொள்ளாதகாலத்து

அந்த உருசியைக்கொள்ளுதலின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தச் சிங்ஙுவை நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது பிருதிவியினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

௫. கிராணம்:—கந்தத்தைக் கிரகிக்குமாயின் அதையும் நானறிகிறேன். கிரகியாதகாலத்து அந்தக் கிரகணம்செய்தலின் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தக் கிராணம் நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது பிருதிவியினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

கன்மேந்திரியம் ஐந்தில்:—

௧. வாக்கு:—வசனிக்குமாயின் அ

தையும் நானறிகிறேன். வசனியாதகாலத்து அதனின்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்த வாக்கு நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது ஆகாயத்தினுடையதாம். இதையறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இதனினும் வேருயிருக்கிறேன்.

எ. பாணி:—(கை) கொடுக்கல் வாங்கல் செய்தால் அதையும் நான் அறிகிறேன். செய்யாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தப் பாணி நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது வாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

அ. பாதம்:—நடந்தால் அதையும் நானறிகிறேன். நடவாதகாலத்து அத

ன் இன்மையையும் நானறிகிறேன். ஆ கையால் இது நானல்ல; என்னுடைய துமல்ல; இது தேயுவினுடையதாம். இ தை அறியும் திருஷ்டாவாகிய நான் கட திருஷ்டாவைப்போல இதனினும் வே றாயிருக்கிறேன்.

௯. உபஸ்தம்:—இரசத்தை (மூத்திர வீரியங்களை) விடுமோயின் அதையும் நான றிகிறேன். விடாதகாலத்து அதன் இ ன்மையையும் நானறிகிறேன். ஆகையா ல் இந்த உபஸ்தம் நானல்ல; இது என்னு டையதுமல்ல; இது ஜலத்தினுடையதா ம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினு ம் வேறாயிருக்கிறேன்.

௰. குதம்:—மலத்தை நீக்குமாயின் அதையும் நானறிகிறேன். நீக்காதகால த்து அதன் இன்மையையும் நானறிகி

றேன். ஆகையால் இந்தக் குதம் நான
ல்ல ; இது என்னுடையதுமல்ல ; இது
பிருதிவியினுடையதாம். இதை அறியு
ம் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டா
வைப்போல இதனினும் வேருயிருக்கி
றேன்.

பிராண அந்தக்கரணங்களில் :—

௰௧—௰௫. பஞ்சப்பிராணன் :—கிரி
யையைச் செய்யுமாயின் அதையும் நான்
அறிகிறேன். கிரியையைச் செய்யாதகா
லத்து அதன் இன்மையையும் நான் அ
றிகிறேன். ஆகையால் இந்தப் பிராணன்
நானல்ல ; இது என்னுடையதுமல்ல ; இ
து சேர்ந்துள்ள பஞ்சமகாபூதத்தினுடை
யதாம். இதை அறியும் திருஷ்டாவா
கிய நான் கடதிருஷ்டாவைப்போல இத
னினும் வேருயிருக்கிறேன்.

௰௬. மனம் :—சங்கற்ப விகற்பஞ்செ

ய்யுங்காலத்து அதையும் நான் அறிகிறே ன். சங்கற்ப விகற்பம் செய்யாதகால த்து அதன் இன்மையையும் நான் அறி கிறேன். ஆகையால் இந்த மனம் நான ல்ல ; இது என்னுடையதுமல்ல ; இது சேர்ந்துள்ள பஞ்சமகர்பூதத்தினுடைய தாம். இதை அறியும் திருஷ்டாவாகி ய நான் கடதிருஷ்டாவைப்போல இதனி னும் வேறாயிருக்கிறேன்.

யஎ. புத்தி :—நிச்சயம் செய்யுமாயி ன் அதையும் நான் அறிகிறேன். நிச்ச யம்செய்யாதகாலத்து அதன் இன்மை யையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தப் புத்தி நானல்ல ; இது என்னுடை யதுமல்ல ; இது சேர்ந்துள்ள பஞ்சமகா பூதத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு இந்தப் பதினேழுதத்துவங்களும் நானல்ல ; என்னுடையவுமல்லவென்றறிக.

வினு :—இப்படிச் சொல்லுவதனுல் என்ன நிச்சயம் உண்டாயிற்று ?

விடை :—க. இலிங்கதேகமும், அதன் தர்மமாகிய புண்ணியபாவங்களின் கர்த்திருத்துவமும், அவற்றின் பலமாகிய போக்திருத்துவமும் ; உ. இகலோக பரலோகங்களில் கமனுகமனமும் (போக்குவரவும்) ; ௩. வயிராக்கியசமதமாதி சாத்துவிக விருத்திகளும், இராகத்துவேஷாதி இராசதவிருத்திகளும், நித்திரை சோம்பல் மறதிமுதலிய தாமதவிருத்திகளும் ; ச. அப்படியே பசி தாகம் அந்தமந்தபடுத்துவ (குருடு மந்தம் தெளிவு) முதலியவைகளும் நானல்ல ; என்னுடையவுமல்ல என்னும் நிச்சயம்

உண்டாயிற்று.

வினா:—க. புண்ணியபாவங்களின் கர்த்தாவும் அவற்றின் பலமாகிய சுகதுக்கங்களின் போக்தாவும் நானல்ல. அக்கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் என்னுடைய தர்மமுமல்லவென்றறிவதெப்படி?

விடை:—எந்த வஸ்து விகாரியோ அது கிரியையுடையதாயிருத்தலால் கர்த்தாவெனப்படும். நான் நிருவிகாரகூடஸ்தனாயிருத்தலால், கிரியைக்கு ஆசிரயனல்லன். அதனால் புண்ணியபாவமாகிய கிரியைக்கு கர்த்தாவுமல்லன். எவன் கர்த்தாவல்லனோ, அவன் போக்தாவுமல்லன். ஆகையால் இவை அந்தக்கரணத்தின் தர்மமாம்; என்னுடையவல்ல. இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கட திருஷ்டாவைப்போல இவற்றினினும் வேறாயிருக்கிறேன் என்றிப்படி அறிக.

வி :—உ. இகலோக பரலோகங்களில் கமனுகமனம் என்னுடைய தர்மமல்லவென்றறிவது எப்படி ?

விடை :—அந்தக்கரணம் (இலிங்கதேகம்) பரிச்சின்னமாயிருக்கிறது. அதற்குப் பிராரத்துவ்கன்மத்தின் வலியால் கமனுகமனம் சம்பவிக்கிறது. நான் ஆகாயத்தைப்போல வியாபகமாயிருக்கிறேன். ஆகையால் கமனுகமனம் என்னுடைய தர்மமல்ல என்றிப்படியறிக.

வி :—ங. சாத்துவிக இராசத தாமதவிருத்திகள் நானல்ல ; என்னுடையவுமல்லவென்றறிவதெப்படி ?

விடை :—திருஷ்டாந்தம் :—ஓர் அரண்மனையில் உட்கார்ந்திருக்கும் இராஜாவின் விநோதத்தின்பொருட்டு ஓர் மாயாவி நீர்க்குழல் ஒன்றுசெய்து, அதன் துவாரத்தைத் திறக்க அதினின்றும் மூன்று நீ

ர்த்தாரைகள் வெளிப்படுகின்றன. அந்த மூன்று தாரைகளினின்றும் பிரவாகரூபமாக அநேகம் தாரைகள் எழும்புகின்றன. அந்தத் துவாரத்தை அடைக்கும்போது அம்மூன்று தாரைகளும் தடைப்பட, இராஜாமாத்திரம் தனித்து மிஞ்சுகிறான்.

சித்தாந்தம் :—அதுபோல ஸ்தூலசரீரமாகிய அரண்மனையில் அதிஷ்டான கூடஸ்தசொரூபமாயுள்ள பரமாத்துமாவாகிய இராஜாவிருக்கின்றார். அவருடைய விநோதத்தின்பொருட்டு மாயையா (அஞ்ஞானமா) கிய மாயாவி, அந்தக்கரணமாகிய நீர்க்குழலைச் செய்து, சாக்கிரசொப்பனங்களில் அதன் பிராரத்துவமாகிய துவாரத்தைத் திறக்க அதினின்றும் மூன்றுகுணத்தின் பிரவாகமாகிய மூன்று தாரைகள் வெளிப்படுகின்றன. அந்த மூன்று தாரைகளினின்றும் அளவில்லா

த விருத்திகள் எழும்புகின்றன. சுழு த்தியில் பிராரத்துவகன்மமாகிய துவார ங்கள் தடைப்படவே, அந்த விருத்திகளி ன் பாவாபாவங் (உண்மையின்மை) களை அறியும் ஆனந்தசொருப கேவலபரமா த்துமாவாகிய இராஜா மிஞ்சுகிறார். அவ ரே நாஞகையால், இந்தச் சாத்துவி க இராசத தாமத விருத்திகள் நானல்ல; என்னுடையவுமல்ல; இவை அந்தக்கர ணத்தினுடையவாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவை ப்போல இவற்றினும் வேருயிருக்கிறே னென்றிப்படி அறிக.

வினு :—அந்தமந்தபடுத்துவங்கள் நா னல்ல; என்னுடையவுமல்லவென் றறிவ தெப்படி?

விடை :—நேத்திரமுதலிய இந்திரிய ங்கள் தத்தம் விஷயங்களொன்றையும்

கிரகிக்காதிருத்தல், அவற்றின் அந்த த்துவம். அதையும் நானறிகிறேன். விஷயங்களைச் சொற்பமாகக் கிரகித்தல், அவற்றின் மந்தத்துவம். அதையும் நான் அறிகிறேன். விஷயங்களைத் தெளிவாகக் கிரகித்தல், அவற்றின் படுத்துவம். அதையும் நான் அறிகிறேன். ஆகையால் இவைகள் நானல்ல ; என்னுடையவுமல்ல ; இவை இந்திரியங்களின் தர்மமாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன்.

இப்படிச் சூட்சுமதேகத்திற்கு நான் திருஷ்டாவாயிருக்கிறேன்.

## ௩. காரணதேகத்திற்கு நான் திருஷ்டாவாயிருக்கிறேன்.

வினா :—காரணதேகமென்பது யாது?

விடை :—புருஷன் சுழுத்தியினின்று

ம் எழுந்தகாலத்து, "எனக்கு இன்னை க்கு ஒன்றும் தெரியவில்லை" என்று சொல்லுவதனுல்,* சுழுத்தியில் அஞ்ஞானமிருக்கிறதெனச் சித்திக்கிறது. அன்றியும் ஜாக்கிரத்திலும் "நான் பிரமத்தை அறியேன்; என்னுடையது எனக்குத் தெரியவில்லை; நான் இதை அறியேன்" என்னும் அநுபவத்திற்கு விஷயம் அஞ்ஞானமாம். அன்றியும் சொப்பனத்திற்குக் காரணமும் நித்திரையாகிய அஞ்ஞானமாம். இப்படிப்பட்ட அஞ்ஞானம் எ

---

* சுழுத்தியினின்றும் எழுந்த புருடனுக்கு "எனக்கு ஒன்றுந்தெரியவில்லை" என்னும் ஞானம் உண்டாகிறது. அந்த ஞானம், அநுபவரூபமன்று. ஆனல் அது சுழுத்திகாலத்து அநுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தின் ஸ்மிருதியாம். அந்த ஸ்மிருதிக்கு விஷயம் சுழுத்திகாலத்தின் அஞ்ஞானமாம்.

துவோ, அது * காரணதேகமாம்.

வினா :—காரணதேகம் நான் அல்ல ; என்னுடையதுமல்லவென்றறிவது எப்படி ?

விடை :—“நான் அறிகிறேன்” “எனக்குத் தெரியவில்லை” என்றிப்படி உண்டாகும் அந்தக்கரணத்தின் விருத்திகளை ஞாத (அறியப்பட்ட) அஞ்ஞாத (அறியப்படாத) வஸ்துக்களாகிய விஷயங்களோடு நான் அறிகிறேன். ஆகையால் இந்தக் காரணதேகம் நானல்ல ; என்னு

*அஞ்ஞானத்தை ஸ்தூல சூட்சுமதேகங்களுக்குக் காரணமாயிருத்தலால் காரணமென்றும், தத்துவஞானத்தால் தகிக்கப்படுவதால் தேகமென்றும் கூறுவர். இந்த அஞ்ஞானம் கருப்பக்கிரகத்தின் இருளைப்போல பிரமத்தின் ஆசிரிதமாய்ப் (பிரமத்தையிடமாகக்கொண்டு) பிரமத்தையே ஆவரணஞ்செய் (மறைக்) கிறது.

டையதுமல்ல ; இது * அஞ்ஞானத்தினு டையதாம். இதை அறியும் திருஷ்டா வாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இ தனினும் வேறாயிருக்கிறேன் என்றிப்படி அறிக. இவ்வாறு காரணதேகத்திற்கு நான் திருஷ்டாவாயிருக்கிறேன்.

மூன்றாம்கலை முற்றிற்று.

———:o:———

## நான்காம்கலை.

### நான் பஞ்சகோசாதீதன்.

வி :—பஞ்சகோசாதீதன் என்றால் என்ன ?

விடை :—பஞ்சகோசாதீதன் என்பது நான் பஞ்சகோசங்களுக்கும் அதீதமா

---

* காரணதேகமே அஞ்ஞானமாயிருக்க, அதை "அஞ்ஞானத்தினுடைய" தென்று கூறியது, இராகுவையே இராகுவின் தலையென்று கூறுவதுபோலாம்.

(வேறு) யிருக்கிறேன் என்பதாம்.

வி௳ :—கோசமென்பது யாது ?

விடை :—கோசமென்பது கத்தியினு றைக்கும், திரவியப் பொக்கிசத்திற்கும், கோசகாரமென்னும் புழுவின் கூட்டிற்கு மாம். அதுபோலப் பஞ்சகோசங்கள் ஆன்மாவை மறைத்திருக்கின்றன. ஆகையால் அன்னமயாதிகளும் கோசமென ப்படுகின்றன.

வி௳ :—பஞ்சகோசங்களின் பெயர்க ளெவை ?

விடை :— க. அன்னமயகோசம். 2. பிராணமயகோசம். ௩. மனோமயகோசம். ௪. விஞ்ஞானமயகோசம். ரு. ஆனந்தமயகோசம் என்னுமிவை பஞ்சகோசங்களின் பெயர்களாம்.

வி௳ :—க. அன்னமயகோசம் என் பது யாது ?

விடை :—மாதாபிதாக்கள் உண்ட அன்னத்தினுல் உண்டாகிய சுரோணித சுக்கிலங்களால் மாதாவின் உதரத்தில் உற்பத்தியாய், ஜனித்தபிறகு பால்முதலிய அன்னத்தால் விருத்தியடைந்து, மரித்தபின் அன்னமயமாகிய பிருதிவியில் ஒடுங்கும் ஸ்தூலதேகம், அன்னமயகோசமாம்.

வின :—அன்னமயகோசம் எப்படி இருக்கிறது ?

விடை :—சுகதுக்கங்களின் அநுபவமாகிய போகத்திற்கு இடமாயிருக்கிறது.

வின :—அன்னமயகோசத்திற்கு நான் வேருயிருக்கிறேன் என்றறிவதெப்படி ?

விடை:—பிறத்தற்குமுன்னும் மரித்தபின்னும் அன்னமயகோசம் (ஸ்தூலசரீரம்) இல்லை. ஆகையால் இது உற்பத்திநாசமுடையதாயிருத்தலால் கடத்தைப்

போல காரியமாம். நான் எப்போதும் உண்மைவடிவ (பாவரூப) மாயிருக்கிறேன். அதனால் உற்பத்தி நாசமில்லாதவனாயிருக்கும் நான் இதனினும் வேறாயிருக்கிறேன். ஆகையால் இந்த அன்னமயகோசம் நானல்ல ; இது என்னுடையதுமல்ல ; இது ஸ்தூலதேகவடிவமாம். இதை அறியும் ஆன்மாவாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன். இப்படி அன்னமயகோசத்திற்கு நான் வேறாயிருக்கிறேனென்றறிக.

வினா :—உ. பிராணமயகோச மென்பது யாது ?

விடை :—கன்மேந்திரியம் ஐந்துடன் கூடிய பஞ்சப்பிராணன், பிராணமயகோசமாம்.

வினா :—கன்மேந்திரியம் ஐந்தும் பஞ்சப்பிராணனும் எவை ?

விடை :—கன்மேந்திரியம் ஐந்தும் பஞ்சப்பிராணனும் முன் சூட்சுமதேகத்தின் பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

வினா :—பஞ்சப்பிராணனது ஸ்தானங்களும் கிரியைகளும் எவை?

விடை :—க. பிராண வாயு:— இருதயஸ்தானத்தில் இருக்கிறது. பகலிரவாகிய ஒவ்வொரு நாளும் உயக்சூகூ௱ உச்சுவாச நிசுவாசங்களைக் கொள்ளுதலாகிய கிரியையைச் செய்கின்றது.

உ. அபானவாயு :— குதஸ்தானத்திலிருக்கின்றது. மலமூத்திரங்களை நீக்குவதாகிய கிரியையைச் செய்கின்றது.

ரு. சமானவாயு :— நாபிஸ்தானத்திலிருக்கின்றது. கிணற்றுநீரைத் தோட்டத்திற் செலுத்தும் தோட்டக்காரனைப் போல, உண்ட அன்னரசத்தை எடுத்து

நாடியின்வழியாய்ச் சரீரம் முழுவதிலும் சேர்ப்பித்தலாகிய கிரியையைச் செய்கின்றது.

ச. உதானவாயு :— கண்டஸ்தானத்திலிருக்கின்றது. உண்ணப்பட்டனவும் பருகப்பட்டனவுமாகிய அன்ன ஜலங்களின் விபாகத்தைச்செய்கின்றது. அப்படியே சொப்பன[illegible]க் காட்டுதலாகிய கிரியையைச் செய்கின்றது.

ரு. வியானவாயு :—சருவாங்கமாகிய ஸ்தானத்திலிருக்கின்றது. சருவ அங்கங்களின் மூட்டுகளைத் திருப்புதலாகிய கிரியையைச் செய்கின்றது. இப்படிப் பஞ்சப்பிராணனுக்கு முக்கிய ஸ்தானங்களும் கிரியைகளுமிருக்கின்றன.

வின :—பிராணாதிவாயுக்கள் சரீரத்திலென்ன செய்கின்றன?

விடை :—பிராணாதிவாயுக்கள் சரீர

த்தில் நிரம்பிச்சரீரத்திற்கு வல்லமையை த்தருகின்றன. அன்றியும் இந்திரியங்களின் தத்தம் காரியங்களில் பிரவிருத்தித்தலாகிய கிரியைக்குச் சாதனமாயுமிருக்கின்றன.

வினு :—பிராணமயகோசத்திற்கு நான் வேருயிருக்கிறேனென்றறிவதெப்படி?

விடை:—புருஷன் தூங்கும் காலத்துப் பிராணன் விழிப்பாயிருந்தபோதிலும், அப்போது ஓர் சிநேகன்வருவானுயின் அவனுக்கு உபசாரம் செய்கிறதுமில்லை; திருடன் நகைகளைக் கொண்டுபோவானுயின் அவனைத் தடுக்கிறதுமில்லை. அதனுல் இந்தப் பிராணவாயு கடத்தைப்போல ஜடமாம். சைதன்னியரூபமாகிய நான் இதனினும் வேருயிருக்கிறேன். ஆகையால் இந்தப் பிராணமயகோசம் நானல்ல; என்னுடையதுமல்ல; இது சூட்சுமதேக

வடிவாம். இதை அறியும் ஆன்மாவாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன் என்றறிக.

வினா :—ங. மனோமயகோசமென்பது யாது?

விடை :—ஞானேந்திரியம் ஐந்துடன் கூடிய மனம், மனோமயகோசமாம்.

வினா :—ஞானேந்திரியம் ஐந்தும் மனமும் எவை ?

விடை :—இவைகள் முன் சூட்சுமதேகத்தின் பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

வினா :—மனம் எப்படி இருக்கிறது ?

விடை :—தேகத்தில் அகந்தையும் கிரகமுதலியவற்றில் மமதையுமாகிய அபிமானத்தைச் செய்துகொண்டு, இந்திரிய வாயிலாக வெளியே செல்லுவதாய்க் கரணரூபமாயிருக்கின்றது.

வினு :—மனோமயகோசத்திற்கு நான் வேறாயிருக்கிறேன், என்றறிவதெப்படி ?

விடை :—காமக்குரோதாதி விருத்திகளோடுகூடியிருத்தலால் மனம் நியமமில்லாத சுபாவமுடையதாகயிருக்கிறது. அதனுல் விகாரியாம். நான் சகல விருத்திகளுக்கும் சாட்சியாகிய நிருவிகாரனுயிருக்கிறேன். ஆகையால் இந்த மனோமயகோசம் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது சூட்சுமதேகரூபமாம். இதை அறியும் ஆன்மாவாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன். இப்படி மனோமயகோசத்தினும் நான் வேறாயிருக்கிறேனென்றறிக.

வினு :—சு. விஞ்ஞானமயகோசமென்பது யாது ?

விடை :—ஞானேந்திரியம் ஐந்துடன் கூடிய புத்தி, விஞ்ஞானமயகோசமாம்.

வினா :—ஞானேந்திரியமும் புத்தியும் எவை?

விடை :—இவை முன் இலிங்கதேகப்பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

வினா :—புத்தி எப்படியிருக்கிறது?

விடை :—சுழூத்தியில் சிதாபாசனோடு புத்தி இலயமா (ஒடுங்கி) யிருக்கின்றது. ஜாக்கிரத்தில் நகநுனிமுதல் சிகைவரையிலும் சரீரத்தில் வியாபித்திருப்பதாய்க் கர்த்தாரூபமாயிருக்கின்றது.

வினா :— விஞ்ஞானமயகோசத்திற்கு நான் வேறாயிருக்கிறேன் என்றறிவதெப்படி?

விடை :—புத்தியானது குடமுதலியவற்றைப்போல இலயமுதலிய அவஸ்தைகளையுடையதாயிருத்தலால் விநாசியா (நாசமுடையதா)ம். நான் இலயமுதலிய

அவஸ்தையில்லாதவனுயிருத்தலால் இந்தப் புத்திக்கு விலட்சணமாகிய அவிநாசியாயிருக்கிறேன். ஆகையால் இந்த விஞ்ஞானமயகோசம் நானல்ல; என்னுடையதும்லல; இது சூட்சுமதேகரூபமாம். இதை அறியும் ஆன்மாவாகிய நான் இதனினும் வேறுயிருக்கிறேன். இப்படி * விஞ்ஞானமயகோசத்தினும் நான் வேருயிருக்கிறேனென்றறிக.

---

* தீபத்தின் பிரகாசமும் ஆகாசமும் அபின்னமாய்த்தோற்றினும் பின்னமாகவேயிருத்தல்போலும், காய்ச்சிய இரும்பில் அக்கினியும் இரும்பும் அபின்னமாய்த் தோற்றினும் பின்னமாகவேயிருத்தல்போலும், ஆன்மாவும் அந்தக்கரணமும் அபின்னமாய்த் தோற்றியபோதிலும் பின்னமாகவேயிருக்கின்றன. ஏனெனின், சுழுத்தியில் அந்தக்கரணம் இலயமாயிருக்க ஆன்மா அஞ்ஞானத்திற்குச் சாட்சியாகத் தோற்றுவதால்.

வி:—ரு. ஆனந்தமயகோசமென்பது யாது?

விடை:—புண்ணியகன்மபலத்தை அநுபவிக்குங்காலத்து ஒருக்கால் புத்தி விருத்தி அந்தர்முகமாய் ஆன்மசொரூபமாகிய ஆனந்தத்தின் பிரதிபிம்பத்தை யடைகின்றது. பிரிய மோதப் பிரமோத ரூபமாகச் சொல்லப்படும் விருத்தியே, புண்ணியகன்மபலபோகம் நிவர்த்தியாகும்போது நித்திரைவடிவமாக விலீனமா (ஒடுங்கு) கின்றது; அந்த விருத்தி ஆனந்தமயகோசமாம்.

வி:— ஆனந்தமயகோசமென்பது யாது?

விடை:—

(க). எதற்கு இஷ்டவஸ்துவின் தரிசனத்தால் உண்டாகிய பிரியவிருத்தி சிரசாயும்,

(உ). இஷ்டவஸ்துவின் இலாபத்தா லுண்டாகிய மோதவிருத்தி ஒரு (வலது) சிறகாயும்,

(ங). இஷ்டவஸ்துவின் அநுபவத் தால் உண்டாகிய பிரமோதவிருத்தி இர ண்டாவது (இடது) சிறகாயும்,

(ச). புத்திவிருத்தியில் அல்லது அ ஞ்ஞானவிருத்தியில் உள்ள ஆன்மசொ ரூபமாகிய ஆனந்தத்தின் பிரதிபிம்பம் சொரூபமாயும்,

(ரு). ஆன்மாவின் சொரூபமாகிய பிம்பானந்தம் * புச்ச (ஆதார) மாயுமிரு க்கிறதோ,

அப்படிப்பட்ட பட்சியாகிய போக்தா † ஆனந்தமயகோசமாம்.

---

* பிரமமாகிய ஆனந்தம் ஆதாரமாயிருத்த லால், சுருதியில் புச்சசத்தத்தாற் சொல்லப்ப ட்டிருக்கின்றது.

† இப்படியே மற்ற நான்கு கோசங்களின்

வினு :—ஆனந்தமயகோசத்திற்கு நான் வேருயிருக்கிறேனென்று அறிவதெப்படி ?

விடை :—ஆனந்தமயகோசம், மேக முதலிய பதார்த்தங்களைப்போல ஒவ்வோர்காலத்திலுண்டாவதாகையால், அது க்ஷணிகமாம். நான் எப்போது மிருத்தலால் நித்தியன். ஆகையால் இந்த ஆனந்தமயகோசம் நானல்ல ; என்னுடையதுமல்ல ; இது காரணதேகரூபமாம். இதை அறியும் ஆன்மாவாகிய நான் இதனினும் வேருயிருக்கிறேன்.

இப்படி ஆனந்தமயகோசத்திற்கு நா

---

பட்சிரூபத்துவமும் எம்மாற் செய்யப்பட்டுள்ள தைத்திரீய உபநிஷத்தின் ஹிந்திபாஷா உரையில் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கிறது. இச்சையுள்ளவர்கள் அங்கே பார்த்துக்கொள்ளுக.

ன் வேறுயிருக்கிறேனென்றறிக.

வினு :—இருப்பனவாகிய அன்னமயாதிகோசங்கள் ஆன்மாவல்லவெனின், அப்போது ஆன்மாவென்பது யாது?

விடை :—புத்திமுதலியவற்றிற் பிரதிபிம்பரூபமாயுள்ளதும், பிரியமுதலிய சொற்களால் சொல்லப்படுவதுமாகிய ஆநந்தமயகோசத்திற்குப் பிம்பரூபகாரணமாயுள்ள ஆநந்தம், நித்தியமாயிருத்தலால் ஆன்மாவாம்.

வினு :—பஞ்சகோசங்கள்தான் அநுபவத்தில் வருகின்றன. இவற்றிற்கு வேருய் ஓர் ஆன்மா அநுபவத்தில் வாராமையால், ஆன்மா பஞ்சகோசங்களுக்கு வேருய் இருக்கிறதென்னும் நிச்சயம் எப்படி உண்டாம்?

விடை :—பஞ்சகோசங்கள்தான் அநுபவத்தில் வருகின்றன. இவற்றிற்கு

வேருய் ஓர் ஆன்மா அநுபவத்தில் வ
ரவில்லை என்னும் வார்த்தை சத்தியம். ஆ
யினும், எந்த அநுபவத்தால் இந்தப் ப
ஞ்சகோசங்களும் அறியப்படுகின்றன
வோ, அந்த அநுபவத்தை நிவர்த்திக்கக்
கூடியவன் யாவன்? ஒருவனும் இல்லை.
ஆகையால் பஞ்சகோசங்களின் அநுபவ
ரூபமாகிய சைதன்னியம் யாதோ, அது ப
ஞ்சகோசத்திற்கு வேருகிய ஆன்மாவாம்.

வினு :—ஆன்மா எப்படியிருக்கிறது?

விடை :—சத்து சித்து ஆநந்தமுதலி
ய சொரூபமாயிருக்கிறது.

நான்காம்கலை முற்றிற்று.

—:o:—

ஐந்தாம்கலை.

---

மூன்றவஸ்தைக்கும் நான் சாட்சி.

வினு :—மூன்றவஸ்தைகள் எவை?

விடை :—க. * ஜாக்கிரம். உ. † சொப்பனம். ௩. ‡ சுழுத்தி என்னுமிவை மூன்றவஸ்தைகள்.

**க. ஜாக்கிராவஸ்தைக்கு நான் சாட்சி.**

வினா :—ஜாக்கிராவஸ்தை என்பது யாது ?

---

* சொப்பன சுழுத்திகளுக்கு வேறாய், இந்திரியஜந்நியஞானத்திற்கும் இந்திரியஜந்நியஞானசம்ஸ்காரத்திற்கும் ஆதாரகாலமாயிருப்பது, ஜாக்கிராவஸ்தையெனப்படும்.

† இந்திரியத்தினாலுண்டாகாத விஷயகோசர அந்தக்கரணத்தினது அபரோட்ச விருத்தியின் காலம், சொப்பனாவஸ்தையெனப்படும்.

‡ சுககோசரமு (சுகத்தை விஷயஞ்செய்வது) ம் அவித்தியாகோசரமுமாகிய அவித்தியாவிருத்தியின் காலம், சுழுத்தியவஸ்தையெனப்படும்.

விடை :—பதினுன்கு இந்திரியங்கள் * அத்தியான்மமும், அவற்றின் பதினு ன்குதேவதைகள் † அதிதெய்வமும், அவ ற்றின் பதினுன்கு விஷயங்கள் ‡ அதிபூத மூமாம். இந்த நாற்பத்திரண்டு தத்து வங்களால் எதில் விவகாரமுண்டாகிற தோ, அது § ஜாக்கிராவஸ்தை.

---

* ஆன்மாவை ஆசிரயத்திருக்கும் இந்திரி யாதிகள், அத்தியான்மமெனப்படும்.

† சுவசங்காதத்தி (தனதுதேகமுதலியவற் றி) ற்கு வேருய் நேத்திரேந்திரியத்திற்கு வி ஷயமாகாததுஎதுவோ, அது அதிதெய்வ மெனப்படும்.

‡ சுவசங்காதத்திற்கு வேருய் நேத்திரமுத லிய இந்திரியங்களுக்கு விஷயமாவது எது வோ, அது அதிபூதமெனப்படும்.

§ இது ஸ்தூலதிருஷ்டியுடைய புருஷர்கள் அறிதற்குரிய ஜாக்கிரவிலக்கணம். அப்ப டியே சொப்பன சுழுத்தியிலுமறிக.

வினா :—பதினான்கு இந்திரியங்களெவை ?

விடை :—ஞானேந்திரியம் ஐந்து :— க. சுரோத்திரம். உ. துவக்கு. ங. சக்ஷு. ச. சிங்குவை. ரு. கிராணம் என்பனவாம்.

கன்மேந்திரியம் ஐந்து :—சா. வாக்கு. எ. பாணி. அ. பாதம். கூ. உபஸ்தம், ய. குதம் என்பனவாம்.

அந்தக்கரணம் நான்கு :—யக. மனம். யஉ. புத்தி. யங. சித்தம். யச. அகங்காரம் என்பனவாம்.

இப்பதினான்கு இந்திரியங்களும் அத்தியான்மிகமாம்.

வினா :—பதினான்கு இந்திரியங்களுக்கும் பதினான்கு தேவதைகளெவை ?

விடை :—ஞானேந்திரியங்கள் ஐந்தின் தேவதைகள் :—

க. சுரோத்திரேந்திரியத்திற்குத் தேவதை—திக்கு.

உ. துவக்கிந்திரியத்திற்குத் தேவதை—வாயு.

ங. சக்ஷு இந்திரியத்திற்குத் தேவதை—சூரியன்.

ச. ஜிஹ்வேந்திரியத்திற்குத் தேவதை—வருணன்.

ரு. கிராணேந்திரியத்திற்குத் தேவதை—அசுவினிகுமாரர்.

கன்மேந்திரியங்கள் ஐந்தின் தேவதைகள் :—

சூ. வாக்கிந்திரியத்திற்குத் தேவதை—அக்கினி.

எ. பாணீந்திரியத்திற்குத் தேவதை—இந்திரன்.

அ. பாதேந்திரியத்திற்குத் தேவதை—வாமனர்.

௯. உபஸ்தேந்திரியத்திற்குத் தேவதை—பிரஜாபதி.

௰. குதேந்திரியத்திற்குத் தேவதை—இயமன்.

அந்தக்கரணம் நான்கின் தேவதைகள் :—

௰௧. * மன இந்திரியத்திற்குத் தேவதை—சந்திரன்.

௰௨. புத்தி இந்திரியத்திற்குத் தேவதை—பிரமன்.

௰௩. சித்த இந்திரியத்திற்குத் தேவதை—வாசுதேவன்.

௰௪. அகங்கார இந்திரியத்திற்குத் தேவதை—உருத்திரன்.

இப்பதினான்கு தேவதைகளும் அதிதெய்வமெனப்படும்.

வினா :—பதினான்கு இந்திரியங்களின்

---

* உள்ளிந்திரியமாகிய அந்தக்கரணம்.

பதினான்கு விஷயங்களெவை ?

விடை :—ஞானேந்திரிய பஞ்சகங்களின் விஷயங்கள் :—

க. சத்தம். உ. பரிசம். ங. உருவம். ச. இரசம். ரு. கந்தம் என்பனவாம்.

கன்மேந்திரிய பஞ்சகங்களின் விஷயங்கள் :—

சா. வசனம். எ. ஆதானம் (ஏற்றல்). அ. கமனம் (நடத்தல்). கூ. இரதிபோகம். ய. மலநீக்கம் என்பனவாம்.

அந்தக்கரண நான்கின் விஷயங்கள்:—யக. * சங்கற்பவிகற்பம். யஉ. நி

---

* மனதிற்குச் சங்கற்பவிகற்பம் விஷயமன்று. ஆனால் எந்த வஸ்துவின் சங்கற்பமுண்டாகின்றதோ, அந்த வஸ்து விஷயமாம். இப்படியே புத்தி சித்த அகங்கார கன்மேந்திரியங்களிலும் அறிக.

ச்சயம். ௰௩. சிந்தித்தல். ௰௪. அ
கந்தை என்பனவாம்.

இப்பதினான்கு விஷயங்களும் அதிபூத
ங்களாம்.

வினா :—அத்தியான்மம், அதிதெய்வ
ம், அதிபூதம் என்னும் மூன்றும் சேர்ந்து
என்னவென்றுசொல்லப்படுகின்றன?

விடை :—அத்தியான்மமுதலிய மூன்
றுபுட (ஆகார) ங்களும் சேர்ந்து திரிபு
டி எனப்படுகின்றன.

வினா :—பதினான்கு திரிபுடிகளையும்
அறிவதெப்படி?

விடை :—ஞானேந்திரியங்களின் திரி
புடிகள்.

| அத்தியான்மம். | அதிதெய்வம். | அதிபூதம். |
|---|---|---|
| இந்திரியம். | தேவதை. | விஷயம். |
| க. சுரோத்திரம். | திக்கு. | சத்தம். |
| உ. துவக்கு. | வாயு. | பரிசம். |

| இந்திரியம். | தேவதை. | விஷயம். |
| --- | --- | --- |
| ங. சட்சு. | சூரியன். | உருவம். |
| ச. சிங்ஙுவை. | வருணன். | இரசம். |
| ரு. கிராணம். | அசுவனிகுமாரர். | கந்தம். |

கன்மேந்திரியங்களின் திரிபுடிகள்.

| | | |
| --- | --- | --- |
| சு. வாக்கு. | அக்கினி. | வசனம் (கிரியை). |
| எ. பாணி. | இந்திரன். | எற்றலிடுதல். |
| அ. பாதம். | வாமனர். | கமனம். |
| க. உபஸ்தம். | பிரஜாபதி. | இரதிபோகம். |
| ய. குதம். | இயமன். | மலநீக்கம். |

அந்தக்கரண நான்கின் திரிபுடிகள்.

| | | |
| --- | --- | --- |
| யக. மனம். | சந்திரன். | சங்கற்பவிகற்பம். |
| யஉ. புத்தி. | பிரமன். | நிச்சயம். |
| யங. சித்தம். | வாசுதேவன். | சிந்தித்தல். |
| யச. அகங்காரம். | உருத்திரன். | அகந்தை. |

இப்படிப் பதினன்கு திரிபுடிகளையும் அறிக.

வி௲ :—இந்தத் திரிபுடிகளின் சுபாவ மென்ன ?

விடை :—மும்மூன்று பதார்த்தங்களுள்ள திரிபுடிகளில் ஒன்றில்லையாயின், அதனதன் விவகாரம் நடவாது. இந்திரியமும் தேவதையுமிருந்து அதன் விஷயமில்லையாயின் விவகாரம் நடவாது; விஷயமும் இந்திரியமும்மிருந்து தேவதையில்லாவிடினும் விவகாரம் நடவாது. இப்படியேசகலதிரிபுடிகளிலும் அறிக.

வி௲:— என்னுடைய சுபாவம் யாதென்றறிவதெப்படி ?

விடை :— திரிபுடி பூரணமாயிருக்குமாயின் அதையும் நானறிகிறேன். அப்படியே திரிபுடியின் விவகாரம் நடக்கு

மாயின் அதையும் நான் அறிகிறேன். விவகாரம் நடவாதாயின் அதையும் நானறிகிறேன். இப்படி என் சுபாவம் இருக்கிறதென்றறிக.

வினு :— இதனுல் என்ன சித்தித்தது.

விடை :— எதில் திரிபுடியினுல் விவகாரம் நடக்கிறதோ, அப்படிப்பட்டது ஜாக்கிராவஸ்தையெனச் சித்தித்தது.

வினு :— ஜாக்கிராவஸ்தையில் ஜீவனது ஸ்தானமும் வாக்கும் போகமும் சக்தியும் குணமும் ஜாக்கிராபிமானத்தால் அந்த ஜீவனது பெயரும் எவை ?

விடை :— ஜாக்கிராவஸ்தையில் ஜீவனுக்கு க * நேத்திரம் ஸ்தானம். உ. வைகரி வாக்கு. ந. ஸ்தூலம் போகம். ச. கிரியை சக்தி. ரு. இராசதம் குணம். சா. ஜாக்கிராபிமானத்தால்

* ஜாக்கிரத்திலிந்த சிதாபாசனுகிய ஜீவனு

விசுவனென்பது பெயர்.

வி௵ :—ஜாக்கிராவஸ்தையைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது?

விடை :—ஜாக்கிராவஸ்தை உண்டாகுமாயின் அதையும் நானறிகிறேன். சொப்பன சுழுத்திகளில் அதனின்மையையும் நானறிகிறேன். ஆகையால் ஜாக்கிராவஸ்தை நானல்ல; என்னுடையதுமல்ல; இது ஸ்தூலதேகத்தினுடையதாம். இதை அறியும் சாட்சியாகிய நான் கடசாட்சியைப்போல இதனினும் வேறுயிருக்கிறேனென்பது ஜாக்கிரத்தைச் சொல்லுதலாற் சித்தித்தது.

இவ்வாறு ஜாக்கிராவஸ்தைக்கு நான் சாட்சியாயிருக்கிறேன்.

---

க்கு நகமுதல் சிகைபரியந்தம் வியாப்தி (நிறைவு) இருந்தபோதிலும், பிரதானமாக நேத்திரத்திலிருத்தலால், அவனுக்கு நேத்திரம் ஸ்தானமெனப்படுகிறது.

## உ. சொப்பனுவஸ்தைக்கு நான் சாட்சி.

வினு :—சொப்பனுவஸ்தை என்பது யாது ?

விடை :—ஜாக்கிராவஸ்தையில் எந்தப் பதார்த்தங்கள் பார்க்கப்பட்டும் கேட்கப்பட்டும் அநுபவிக்கப்பட்டும் இருக்கின்றனவோ, அவற்றின் சம்ஸ்காரமானது மயிரின் ஆயிரத்திலோர்மடங்கு மெல்லிதாய்க் கண்டத்திலிருக்கும் ஹிதையென்னும் நாடியிலிருக்கின்றது. அந்தச் சம்ஸ்காரத்தால் நித்திரைகாலத்தில் பஞ்சவிஷயமுதலிய பதார்த்தங்களும் அவற்றின் ஞானமும் உண்டாகின்றன. அவற்றுல் எதில் விவகாரம் உண்டாகின்றதோ, அது சொப்பனுவஸ்தை.

வினு :—சொப்பனுவஸ்தையில் ஜீவனுக்கு ஸ்தானமும் வாக்கும் போகமும்

சக்தியும் குணமும் சொப்பனாபிமானத்தா ல் அந்த ஜீவனது பெயரும் எவை?

விடை :—சொப்பனாவஸ்தையில் க. கண்டம் ஸ்தானம். உ. மத்திமை வாக்கு. ந. சூட்சுமம் (வாசனாமயம்) போகம். ச. ஞானம் சக்தி. ரு. * சத்துவம் குணம். சா. சொப்பனாபிமானத்தால் தைஜஸனென்பது பெயர்.

வினா :—சொப்பனாவஸ்தையைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது?

விடை :—சொப்பனாவஸ்தை உண்டாகுமாயின் அதையும் நானறிகிறேன். ஜாக்கிரசுழுத்திகளில் அது இல்லாதபோது அதன் இன்மையையும் நானறிகிறேன். ஆகையால் இந்தச் சொப்பனாவஸ்தை நானல்ல; என்னுடையதுமல்ல; இது

* சிலர் இராசதம் குணமென்றும் கூறுவர்.

சூட்சுமதேகத்தினுடையதாம். இதை அறியும் சாட்சியாகிய நான் கடசாட்சியைப்போல இதனினும் வேருயிருக்கிறேன் என்பது சொப்பனத்தைச் சொல்லுதலாற்சித்தது.

இவ்வாறு சொப்பனுவஸ்தைக்கு நான் சாட்சியாயிருக்கிறேன்.

## ௩. சுழுத்தியவஸ்தைக்கு நான் சாட்சி.

**வி௵** :—சுழுத்தியவஸ்தை என்பது யாது?

**விடை** :—புருஷன் நித்திரையினின்றும் விழித்தெழுந்தகாலத்து, சுழுத்தியில் அநுபவித்த சுகத்தையும் அஞ்ஞானத்தையும் நினைத்து "நான் இன்று ஒன்றுந் தெரியாமல் சுகமாய்த் தூங்கினேன்" என்று சொல்லுகிருன். இந்தச் சுக அஞ்ஞானங்களின் பிரகாச (ஞான)ம், சாட்சி

சேதனமாகிய அநுபவத்தால் எதில் உண்டாகிறதோ, அப்படிப்பட்ட புத்தியின் விலயாவஸ்தை, சுழுத்தியவஸ்தையாம். விலயம்-ஒடுக்கம்.

வினு:—சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு ஸ்தானமும் வாக்கும் போகமும் சக்தியும குணமும் சுழுத்தியபிமானத்தால் அந்த ஜீவனது பெயரும் எவை?

விடை:—சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு. க இருதயம் ஸ்தானம். உ. பைசந்தி வாக்கு. ந. ஆனந்தம் போகம். ச. திரவியம் சக்தி. ரு. தாமதம் குணம். சா. சுழுத்தியபிமானத்தால் பிராஞ்ஞனென்பது பெயர்.

வினு:—சுழுத்தியவஸ்தையில் திருஷ்டாந்தம் யாது?

விடை:—முதல் திருஷ்டாந்தம்:—கிணற்றில் விழுந்திருக்கும் ஒர் ஆபரண

த்தை யெடுக்க அக்கிணற்றில் மூழ்கிய புருடன், அவ்வாபரணம் அகப்பட்டதை யும் அகப்படாததையுமறிகிறான். ஆனு ல் அதைச் சொல்லுதற்குச் சாதனமாகி ய வாக்கிந்திரியத்தின் தேவதையாகிய அக்கினிக்கு ஜலத்தோடு விரோதமிருத் தலால், அது திரோதானமாயி (மறைந்தி) ருக்கின்றது. ஆகையால் அவன் அங் கே அதைச் சொல்லுகிறதில்லை. ஜல த்திற்குவெளியே வந்தகாலத்து, சொ ல்லுதற்குச் சாதனமாகிய தேவதையோ டு வாக்கிந்திரியமிருத்தலால், நகை கிடை த்தது கிடைக்கவில்லை எனச்சொல்லுகி றான்.

சித்தாந்தம் :—அதுபோல, சுழுத்திய வஸ்தையில் சுக அஞ்ஞானங்களின் சா ட்சிசேதனமாகிய சாமானியஞானமிருக் கின்றது. ஆனல் விசேஷஞானத்தின்

சாதனமாகிய இந்திரியமும் அந்தக்கரண முமில்லாதிருத்தலால், சுக அஞ்ஞானங் களின் விசேஷஞானம் உண்டாகிறதில்லை. புருஷன் விழித்தகாலத்து, விசேஷஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியமும் அந்தக்கரணமும் இருத்தலால், சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட சுக அஞ்ஞானங்களின் ஸ்மிருதியா (நினைவா) கிய விசேஷஞானமுண்டாகிறது.

இரண்டாவது திருஷ்டாந்தம் :—

வெய்யிலில் உருகிய நெய்யானது நிழலிலிருக்குமாயின் கட்டியாகின்றது. மறுபடியும் வெய்யிலிலிருக்குமாயின் உருகுகின்றது. சித்தாந்தம் :—அதுபோல சுழுத்தியிலுள்ள காரணசரீரமாகிய அஞ்ஞானம் ஜாக்கிரசொப்பனங்களில் புத்திவடிவமாகின்றது. மறுபடியும் சுழுத்தியில் அஞ்ஞானவடிவமாகின்றது.

மூன்ருவது திருஷ்டாந்தம் :—

ஒரு குழந்தை சிறுவர்களுடன்சேர்ந்து விளையாடப்போகிருன். அவன் சிரமம (இளைப்ப) டையுங்காலத்து, தாயின் மடியில் தூங்கி வீட்டின் சுகத்தை அநுபவிக்கிருன். மறுபடியும் சிறுவர்கள் கூப்பிடுங்காலத்து வெளியேபோய்விளையாடுகிருன்.

சித்தாந்தம் :—அதுபோல காரணசரீரமாகிய அஞ்ஞானம் தாய். அதற்குப் புத்தியானது குழந்தை. அக்குழந்தை கன்மமாகிய சிறுவர்களோடு ஜாக்கிர சொப்பனமாகிய வெளிப்பூமியில் விவகாரமாகிய விளையாட்டைச் செய்து விட்டு சேபமாகிய சிரமத்தையடையும்போது, சுழுத்தியவஸ்தையாகிய கிரகத்தில் அஞ்ஞானமாகிய தாயினிடத்து இலீனமாய் (ஒடுங்கி)ப்பிரமாநந்தத்தை அநுபவிக்கிருன். மறுபடியும் கன்மமாகிய சிறுவர்கள்

அழைக்குங்காலத்து, ஜாக்கிரசொப்பன மாகிய வெளிப் பூமியில் விவகாரமாகிய விளையாட்டைச்செய்கிறான்.

நான்காவது திருஷ்டாந்தம் :—

சமுத்திர ஜலத்தால் நிரம்பிய ஓர் குடத்தைக் கழுத்திற் கயிறுகட்டிச் சமுத்திரத்தில் அமிழ்த்தினால், அப்போது குடத்திலுள்ள ஜலம் சமுத்திர ஜலத்தோடு ஐக்கியத்தை அடைந்தபோதிலும், கடமாகிய உபாதியால் வேறுபோன்றிருக்கிறது. மறுபடியும் கயிற்றையிழுக்கும் காலத்து பேதத்தை அடைகிறது. ஆனால் ஜலத்தோடுகூடிய குடத்திற்கும் சமுத்திரத்திற்கும் ஆதாரமாகிய ஆகாசம் வேறாகாமல் மூன்றுகாலத்திலும் ஏகரசமாயிருக்கின்றது.

சித்தாந்தம் :—அதுபோல அஞ்ஞானமாகிய சமுத்திர ஜலத்தால் நிரம்பிய

இலிங்கதேகமாகிய கடம், அதிருஷ்ட (பு
ண்ணியபாவ) மாகிய கயிற்ருற் கட்டப்ப
ட்டு சுழுத்திகாலத்திலும் அதின் அவா
ந்திரபேதமாகிய மரணம் மூர்ச்சை பிரள
யமென்னும் காலங்களிலும் சமஷ்டி அ
ஞ்ஞானமாகிய ஈசுரோபாதியான மாயை
யில் ஒடுங்குகின்றது. அப்போது அந்த
வியஷ்டி அஞ்ஞானமாகிய ஜீவோபாதி
யான அவித்தை சமஷ்டி அஞ்ஞானத்
தோடு ஐக்கியத்தை அடைந்தபோதிலு
ம், இலிங்கசரீரத்தின் சம்ஸ்காரமாகிய உ
பாதியினுல் வேறுபோன்றிருக்கின்றது.
மறுபடியும் அதிருஷ்டமாகிய கயிற்றை
அந்தரியாமி பிரேரிக்குங்கால் பேதத்தை
அடைகின்றது. ஆனல் வியஷ்டி அஞ்
ஞானமாகிய ஜலத்தோடுகூடிய இலிங்க
தேகமென்னும் குடத்திற்கும் சமஷ்டி அ
ஞ்ஞானமாகிய சமுத்திரத்திற்கும் ஆதா

ரமாகிய சிதாகாசம் வேறாகாமல் மூன்று காலத்திலும் ஏகரசமாயிருக்கிறது.

வினா :—சுழுத்தியைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது.

விடை :—சுழுத்தியவஸ்தை உண்டாகுமாயின் அதையும் நான் அறிகிறேன். ஜாக்கிர சொப்பனங்களில் அது இல்லாதபோது அதன் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் இந்தச் சுழுத்தியவஸ்தை நானல்ல; என்னுடையதுமல்ல; இது காரணதேகத்தினுடையதாம். இதை அறியும் சாட்சியாகிய நான் கடசாட்சியைப்போல இதனினும் வேறாயிருக்கிறேனென்பது சொப்பனவஸ்தையைச் சொல்லுதலாற் சித்தித்தது. இவ்வாறு சுழுத்தியவஸ்தைக்கு நான் சாட்சியாயிருக்கிறேன்.

ஐந்தாம்கலை முற்றிற்று.

## ஆறும்கலை.

——:o:——

## பிரபஞ்சமித்தியாவர்ணநம்.

——:o:——

வினா :—ஆன்மாவின் மூன்று அவஸ்தைகள் எதைப்போலத் தோற்றுகின்றன ?

விடை :—திருஷ்டாந்தம் :—க. இப்பியி (கிளிஞ்சிலி)ல்வெள்ளி அல்லது அப்பிரகம்(பூவிந்துநாதம்) அல்லது காகிதமென்னும் இம்மூன்றும் இப்பியினது அஞ்ஞானத்தால் கற்பிதமாகத் தோற்றுகின்றன.

உ. அந்த மூன்று வஸ்துக்களுக்கும் ஒன்றற்கொன்றும் இப்பியினோடும் வெதிரேகமும், இப்பிக்கு மூன்று வஸ்துக்களிலும் அந்நுவயமுமுண்டு. எப்படியெனின் :—

(க) சிப்பியில் வெள்ளி தோற்றுங்கா

லத்து அப்பிரகமும் காகிதமும் தோற்றுகிறதில்லை. அப்பிரகம் தோற்றுங் காலத்து வெள்ளியும் காகிதமும் தோற்றுகிறதில்லை. காகிதம் தோற்றுங்காலத்து வெள்ளியும் அப்பிரகமும் தோற்றுகிறதில்லை. இது மூன்றுவஸ்துக்களுக்கும் ஒன்றற்கொன்றுள்ள வெதிரேகம் (இன்மை).

(உ) இப்பியில் முதலிலும் நடுவிலும் ஈற்றிலும் இந்த மூன்றுவஸ்துக்களுக்கும் வியாவகாரிகமும் பாரமார்த்திகமுமாகிய அத்தியந்தாபாவமிருக்கிறது. இது அந்த மூன்றுவஸ்துக்களுக்கும் இப்பியிலுள்ள வெதிரேகம்.

(௩) பிராந்திகாலத்தில் "இது வெள்ளி" "இது அப்பிரகம்" "இது காகிதம்" என்பதாக இப்பியின் இதுவென்னும் அம்சம் அந்த மூன்றுவஸ்துக்களிலு

ம் அநுகூதமா (உள்ளீடா)ய் விளங்குகின்றது. இது அந்த மூன்றுவஸ்துக்களிலுமுள்ள இப்பியின் அந்நுவயம்.

ந. இங்கே இப்பியின் மூன்று அமிசங்கள் :— (க) சாமானிய அமிசம். (உ) விசேஷ அமிசம். (ந) கற்பிதவிசேஷ அமிசம் என்பனவாம்.

(க) இதந்தை (இது எனுந்தன்மை) சாமானிய] அமிசம். ஏனெனின், எது அதிககாலத்தில் தோற்றுகிறதோ, அது சாமானிய அமிசம். இதந்தை பிராந்திகாலத்திலும், இது இப்பி என்று பிராந்தியில்லாதகாலத்திலும் தோற்றுவதால் அது சாமானிய அமிசமாம். இது ஆதாரமென்றும் சொல்லப்படுகிறது.

(உ) நீலபிருஷ்ட (கருமையாகிய பின்புற) த்தையும் முக்கோணத்தையுமுடைய இப்பி, விசேஷ அமிசம். ஏனெ

னின், எது நியூன (அற்ப) காலத்தில் தோற்றுகிறதோ, அது விசேஷ அமிசம். பிராந்திகாலத்தில் இந்த நீலபிருஷ்ட முதலியவைகள் தோற்றுகிறதில்லை. ஆனால் இவற்றின் தோற்றத்தால் பிராந்தி நீங்குகின்றது. ஆகையால் இவை விசேஷ அமிசமாம். இது அதிஷ்டானமென்றும் சொல்லப்படும்.

(௩) வெள்ளிமுதலியவைகள் கற்பித விசேஷ அமிசம். ஏனெனின், எது அதிஷ்டானத்தை அறியுங் காலத்துத் தோற்றுகிறதில்லையோ, அது கற்பிதவிசேஷஅமிசம். வெள்ளிமுதலியவைகள் இப்பியின் அஞ்ஞானகாலத்தில் தோற்றுகின்றன; இப்பியின் ஞானகாலத்தில் இவைகள் தோற்றுகிறதில்லை. அதனால் இப்பியோடு விபசாரமு (மாறுதலு) டையனவாயிருக்கின்றன. ஆகையால் இ

து கற்பிதவிசேஷ அமிசமாம். இது பிராந்தி என்றும் சொல்லப்படும்.

சித்தாந்தம் :—அதுபோல

க. அதிஷ்டானமாகிய ஆன்மாவில் ஜாக்கிரம், அல்லது சொப்பனம், அல்லது சுழுத்தி என்னும் இம்மூன்று பிராந்தியும் ஆன்மாவை அறியாததால் உண்டாகின்றன.

உ. அவற்றிற்கு ஒன்றற்கொன்றும், அதிஷ்டானமாகிய ஆன்மாவோடும் * வெதிரேகமும், ஆன்மாவிற்கு அவற்றில் † அந்நுவயமுமுண்டு. எப்படியெனின் :—

(க) ஜாக்கிரம் தோற்றும் காலத்து

---

* அபாவம் (இன்மை) அல்லது வியாவிருத்தி (எதிர்மறை) வெதிரேகமாம்.

† பாவம் (உண்மை) அல்லது அநுவிருத்தி (உடன்பாடு) அந்நுவயமாம்.

சொப்பன சுழுத்திகள் தோற்றுகிறதில்லை. சொப்பனம் தோற்றும் காலத்து ஜாக்கிர சுழுத்திகள் தோற்றுகிறதில்லை. சுழுத்தி தோற்றும் காலத்து ஜாக்கிரசொப்பனங்கள் தோற்றுகிறதில்லை. இது மூன்றவஸ்தைகளுக்கும் ஒன்றற்கொன்றுள்ள வெதிரேகம்.

(உ) அதிஷ்டானத்தில் இந்த மூன்றவஸ்தைகளுக்கும் பாரமார்த்திக அத்தியந்தாபாவமி (நித்தியநிவர்த்தியி)ருக்கிறது. இது மூன்றவஸ்தைக்கும் அதிஷ்டானத்திலுள்ள வெதிரேகம்.

(ங) ஆன்மா இந்த மூன்றவஸ்தைகளில் அநுசூதமாய்ப் பிரகாசிக்கின்றது. இது மூன்றவஸ்தைகளிலும் ஆன்மாவிற்குள்ள அந்நுவயம்.

ங. இங்கே ஆன்மாவிற்கு அவித்தையாகிய உபாதியினால் ஆரோபிக்கப்பட்ட

மூன்றமிசங்கள். (க) சாமானியஅமிசம். (உ) விசேஷ அமிசம். (௩)கற்பிதவிசேஷ அமிசம் என்பனவாம்.

(க) சத்ரூபம் (இருப்பு) சாமானிய அமிசம். ஏனெனின், "ஜாக்கிரமிருக்கிறது" "சொப்பனமிருக்கிறது" "சுழுத்தியிருக்கிறது" என்றிப்படி ஆன்மாவின் இருப்பானது பிராந்திகாலத்திலும் தோற்றுகிறது. பிராந்தி நீங்கியகாலத்தும் "நான் சத்தாயிருக்கிறேன். நான் பரிபூரணனாயிருக்கிறேன், நான்அசங்கனாயிருக்கிறேன், நான் நித்தியமுக்தனாயிருக்கிறேன், நான் பிரமமாயிருக்கிறேன்" என்றிப்படி ஆன்மாவின் இருப்பானது தோற்றுகின்றது. ஆகையால் இந்தச் சத்ரூபம் சாமானிய அமிசமாம். இது ஆதாரமென்று சொல்லப்படும்.

(உ) சேதனத்துவம் ஆனந்தத்துவம்

அசங்கத்துவம் அத்துவிதீயத்துவமுதலிய ஆன்மாவின் விசேஷணங்கள், விசேஷ அமிசம். ஏனெனின், பிராந்திகாலத்தில் இவைகள் தோற்றுகிறதில்லை. ஆனால் இவற்றின் தோற்றத்தால் பிராந்திநிவர்த்தியாகின்றது. ஆகையால் இவை விசேஷ அமிசமாம். இது அதிஷ்டானமென்றும் சொல்லப்படும்.

(௩) மூன்றவஸ்தையாகிய பிரபஞ்சம் கற்பிதவிசேஷ அமிசம். ஏனெனின், பிரமாபின்னமாகிய ஆன்மாவை அறியாதகாலத்தில் தோற்றுகின்றது; "நான் பிரமம்" என்பதாக ஆன்மாவை அறியுங்காலத்து ஆன்மாவிற்கு வேருகச் சத்துத் தோற்றுகிறதில்லை. ஆகையால் இந்த மூன்றவஸ்தையாகிய பிரபஞ்சம் கற்பித விசேஷ அமிசமாம். இது பிராந்தி என்றும் சொல்லப்படும். இவ்வாறு இந்த

மூன்றவஸ்தைகளும் ஆன்மாவில் மித்தை யாகத் தோற்றுகின்றன.

வி :—ஆன்மாவினிடத்தில் மித்தை யாகிய பிரபஞ்சம் தோற்றுவதில் வேறு திருஷ்டாந்தங்களெவை ?

விடை :—கட்டையில் புருடனும், சாட்சியில் சொப்பனமும், மருபூமியில் ஜலமும், ஆகாசத்தில் கருமையும், பழுதையில் பாம்பும், ஜலத்தில் தலைகீழாகிய புருஷன் அல்லது விருட்சமும், கண்ணாடியில் நகரமும் தோற்றுகின்றன ; அவை மித்தையாம்.

அதுபோல ஆன்மாவில் தனது அஞ்ஞானத்தால் பிரபஞ்சம் தோற்றுகிறது ; அது மித்தையாம். இவ்வாறு பிரபஞ்சத்தின் மித்தியாத்துவத்தை நிச்சயம்செய்தலே பிரபஞ்சத்தின் * பாதமாம்.

---

* மித்தியாத்துவ நிச்சயத்திற்கு பாதமென்

வி ு:—பிராந்தியாகிய சமுசாரம் எத்தனைவகையாம்?

விடை:—க. * பேதப்பிராந்தி. உ. † கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தி. ௩. ‡ சங்கப்பிராந்தி. ௪.

---

று பெயராம். அது சாஸ்திரீயம் (சாஸ்திரசம்பந்தம்), யௌக்திகம் (யுக்திசம்பந்தம்), அப்ரோட்சமென்னும் பேதத்தால் மூன்றுவகையாம்.

* ஜீவேசுரர்களின் பேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜடங்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடபேதம், ஈசஜடபேதம் என்னுமிவை ஐவகைப் பேதப்பிராந்தி.

† அந்தக்கரணத்தின் தர்மமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆன்மாவினிடத்தில் தோற்றுதல், கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தி.

‡ ஆன்மாவிற்குத் தேகாதிகளில் அகந்தையும், கிரகாதிகளில் மமதையுமாகிய சம்பந்தமாவது அல்லது சஜாதிய விஜாதிய சுகதவஸ்

* விகாரப்பிராந்தி. ரு. பிரமத்திற்கு பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தி என்று ஐந்துவிதமாம்.

வின :—ஐவகைப்பிராந்தியும் எந்தத்திருஷ்டாந்தங்களால் நிவர்த்தியாகும்?

விடை :—க. † பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தியும், உ.

---

துக்களோடுள்ள சம்பந்தமாவது தோற்றுதல், சங்கப்பிராந்தி.

* பாலின் விகாரம் தயிராதல்போல, பிரமத்தின் விகாரம் ஜீவனும் அப்படியே ஜகத்துமாம் என்னும் தோற்றம், விகாரப்பிராந்தி.

† சூத்திரபாஷியத்திற்குப் பஞ்சபாதிகையென்னும் உரை பதுமபாதாசாரியரால் செய்யப்பட்டிருக்கிறது. அந்தப் பஞ்சபாதிகையின் வியாக்கியானமாகிய விவரணமென்னும் கிரந்தத்திற்குக் கர்த்தா, ஸ்ரீ பிரகாசாத்துமசரணரென்னும் ஆசாரியர். அவரது முறைமைய அநுசரித்துள்ளது, மேலெழுதப்பட்டுள்ள இந்த பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தம்.

ஸ்படிகத்தில் சிவப்பு வஸ்திரத்தின் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் கருத்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தியும், ங. கடாகாச திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தியும், ச. இரஜ்ஜுவிற் கற்பிதமாகிய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியும், ரு. கனகத்திற் குண்டலம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தியும் நிவர்த்தியாகும்.

வினா :—க. பிம்பப்பிரதிபிம்ப திருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தி எப்படி நிவர்த்தியாகும் ?

விடை :—திருஷ்டாந்தம் :— கண்ணாடியில் தோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் அக்கண்ணாடியிலில்லை. ஆனால் கண்ணாடியைப் பார்க்கும்பொருட்டு வெளிப்பட்ட நேத்திரவிருத்தி அந்தக் கண்ணா

டியைப் பரிசித்து (தீண்டி) மறுபடியும் திரும்பி முகத்தையே பார்க்கின்றது. ஆகையால் பிம்பமாகிய முகத்தோடு பிரதிபிம்பம் அபின்னமாம். அதனால் பிரதிபிம்பம் மித்தையன்று; சத்தியமாம். பிரதிபிம்பத்தின் தர்மமாகிய பிம்பத்தினும் வேறாந்தன்மையும், கண்ணாடியிலிருக்குந்தன்மையும், பிம்பத்தினும் எதிர்முகமாந்தன்மையுமாகிய இந்த மூன்றும் அவற்றினது தோற்றமாகிய ஞானமும் பிராந்தியாம். ஆகையால் இந்தத் தர்மங்களின் மித்தியாத்துவ நிச்சயமாகிய பாதத்தைச் செய்வதனால் பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு என்றும் அபேதமாகிய நிச்சயம் உண்டாகின்றது.

சித்தாந்தம்:—அதுபோல சுத்தப்பிரமம் பிம்பமாம். ஜீவனாகிய அதனது பிரதிபிம்பம் அஞ்ஞானமாகிய கண்ணாடியி

ல் தோற்றுகின்றது. அவற்றுள் சொப்பனத்தைப்போல ஒரு ஜீவன் முக்கியமாம். மற்றவை ஸ்தாவர ஜங்கமமாகிய நாநா ஜீவர்களாகத் தோற்றுகின்றன. அவை ஜீவாபாசங்களாம். அந்த ஜீவனுகிய பிரதிபிம்பம் ஈசுரனுகிய பிம்பத்தோடு எப்போதும் அபின்னமாம். ஆனுல் மாயையின் வலியாலாம் அந்த ஜீவனது தர்மமாகிய பிம்பமாம் ஈசுரனிலும் வேருந்தன்மை, ஜீவத்துவம், அற்பஞ்ஞத்துவம், அற்பசக்தித்துவம், பரிச்சின்னத்துவமுதலியனவும் அவற்றின் தோற்றமாகிய ஞானமும் பிராந்தியாம். ஆகையால் அவற்றின் மித்தியாத்துவ நிச்சயமாகிய பாதத்தைச் செய்வதனுல், ஜீவனுகிய பிரதிபிம்பத்திற்கும் ஈசுரனுகிய பிம்பத்திற்கும் என்றும் அபேதமாகிய நிச்சயமுண்டாகின்றது. இவ்வாறு பிம்பப்பிர

திபிம்ப திருஷ்டாந்தத்தால் * பேதப்பி
ராந்தி நிவர்த்தியாகின்றது.

வினு :—உ. படிகத்தில் சிவப்பு வஸ்தி
ரத்தின் செந்நிறம் தோற்றும் திருஷ்டா
ந்தத்தால் கருத்திருத்துவ போக்திருத்து
வப்பிராந்தி எப்படி நீங்கும்?

விடை :—சிவப்பு வஸ்திரத்தின்மேல்
வைக்கப்பட்ட படிகமணியில் வஸ்திரத்தி
ன் செந்நிறம் சையோக சம்பந்தத்தால்
தோற்றுகிறது. ஆனல் அது வஸ்திரத்
தின் தர்மமாம். வஸ்திரமும் படிகமும்

* முக்கியமாகிய ஜீவேசுரபேத நிஷேதத்தா
ல் அதனுள்ளடங்கிய நான்கு பேதங்களின் நி
ஷேதமும் இயல்பாகவே சித்திக்கின்றது. ச
கலபேதமும் உபாதியினுலாயிருக்கின்றன. உ
பாதிகள் யாவு மித்தையாகையால், அவற்று
லாகிய பேதங்களும் மித்தையாம். ஆகவே
வாஸ்தவமாகிய அத்துவிதப்பிரமமே மிஞ்சு
கின்றது.

பிரிந்தகாலத்து அது படிகத்தில் தோற்றுகிறதில்லை. ஆகையால் அது படிகத்தின் தர்மமன்று. ஆனல் படிகத்தில் பிராந்தியினுல் தோற்றுகிறது.

சித்தாந்தம்:—அதுபோல அந்தக்கரண தர்மமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆன்மாவில் தாதான்மிய சம்பந்தத்தால் தோற்றுகின்றன. ஆனல் அவை அந்தக்கரணத்தின் தர்மமாம். சுழுத்தியில் அந்தக்கரணமும் ஆன்மாவும் பிரிந்தகாலத்து அவை ஆன்மாவினிடத்திற் தோற்றுகிறதில்லை. ஆகையால் ஆன்மாவின் தர்மமன்று. ஆனல் ஆன்மாவினிடத்தில் பிராந்தியினுல் தோற்றுகின்றன. இவ்வாறு படிகத்திற் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் கர்த்திருத்துவ போக்திருத்துவப் பிராந்தி நீங்குகின்றது.

வினா :—ந. கடாகாய திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தி எப்படி நிவர்த்தியாகும் ?

விடை :—கடவுபாதியையுடைய ஆகாயம் கடாகாயமெனப்படும். அந்த ஆகாயம் கடத்தோடு தோற்றியபோதினும், கடத்தின் தர்மமாகிய உற்பத்தி நாசம் கமனுகமனமுதலியவை ஆகாயத்தைப் பரிசிக்கிறதில்லை. ஆகையால் ஆகாயம் அசங்கமாம். ஆகாயத்திற்குக் கடத்தோடு சம்பந்தம் தோறறுதல் பிராந்தியாம்.

சித்தாந்தம் :—அதுபோல தேகமுதலிய சங்காதமாகிய உபாதியையுடைய ஆன்மா ஜீவனெனப்படும. அந்த ஆன்மா சங்காதத்தோடு கூடியதாகத் தோற்றியபோதிலும, சங்காதத்தின் தர்மமாகியஜனனமரணுதிகள் ஆன்மாவைப் பரிசியா. ஏனெனின், சங்காதம் திரிசியம் ; ஆ

ன்மா திருஷ்டா. அதனல் ஆன்மா சங்காதத்தினும் வேருகிய அசங்கனும். ஆன்மா சங்காதரூபமல்லாததாகையால் ஆன்மாவிற்குச் சங்காதத்தோடு அகந்தையாகிய சம்பந்தமில்லை. ஆன்மா சங்காதமாகாமல், அந்தச் சங்காதம் பஞ்சபூதத்தினதாயிருத்தலால், ஆன்மாவிற்கு மமதையாகிய சம்பந்தமுமில்லை. ஆன்மா சங்காதத்திற்கு வேருயிருத்தலால் ஆன்மாவிற்குச் சங்காதத்தின் சம்பந்திகளாகிய ஸ்திரீ புத்திர கிரகாதிகளோடு மமதையாகிய சம்பந்தமுமில்லை. இவ்வாற்ருல் ஆன்மா அசங்கன். இவ்வான்மாவிற்கு சங்காதத்தோடுள்ள அகந்தை மமதையாகிய சம்பந்தம், பிராந்தியாம். இவ்வாறு கடாகாச திருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தி நீங்குகின்றது.

வினு:—சு. இரச்சுவில் கற்பிதமாகி

ய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப்பிரா ந்தி எப்படி நீங்கும்?

விடை :—மந்தாந்தகாரத்தில் இரச்சு வானதிருக்க, அதைப் பார்க்கும்பொரு ட்டு நேத்திரத்துவாரத்தால் அந்தக்கரண விருத்தி வெளிப்படுகின்றது. அந்த விரு த்தி இருள்முதலிய தோஷத்தால் இரச்சு வின் ஞானத்தை அடைகிறதில்லை. ஆ கையால் அந்த விருத்தியால் இரச்சுவின் ஆவரணம் பங்கமாகிறதில்லை. அப்போ து இரச்சுவை உபாதியாகவுடைய சைத ன்னியத்தை ஆசிரயித்திருந்த * தூலா வித்தை க்ஷோபத்தை அடைந்து, சர்ப்ப ரூப விகாரத்தை அடைகின்றது. அந்த ச் சர்ப்பம், பாலின் பரிணமமாகிய தயிரை

---

* கடமுதலிய உபாதிகளையுடைய சைதன் னியத்தை ஆவரணஞ்செய்யும் அவித்தை, தூ லாவித்தை.

ப்போல அவித்தையின் பரிணாமமும், இரச்சுவை உபாதியாகவுடைய சைதன்னியத்தின் விவர்த்தமுமாம்.

சித்தாந்தம் :— அதுபோலப் பிரம சைதன்னியத்தின் ஆசிரிதமாயிருக்கும் * மூலாவித்தை, பிராரப்தமுதலிய நிமித்தத்தால் † க்ஷோபத்தை அடைந்து ஜட சைதன்னிய (சிதாபாச)ப் பிரபஞ்சமாகிய விகாரத்தை அடைகின்றது. அந்தப் பிரபஞ்சம் அவித்தையின் ‡ பரிணாமமும்

* சுத்தப்பிரமத்தையும் ஆன்மாவையும் ஆவரணம் செய்யும் அவித்தை, மூலாவித்தை.

† காரியமாதற்கு எதிர்ப்படுதலை (காரியாபிமுகாவஸ்தையை) க்ஷோபமென்பர்.

‡ முன் உருவத்தைவிட்டு வேறு உருவத்தை அடைதல், பரிணாமம். அல்லது உபாதானத்தின் சமானசத்தையுடைய வேற்றுருவம் (உபாதானத்தினும் வேறுவிதமாகிய வடிவம்) பரிணாமமாம். பாலின் பரிணாமமாகிய தயிர்

* அதிஷ்டானப் பிரமசைதன்னியத்தின் † விவர்த்தமுமாம்; பரிணாமமன்று. இவ்வாறு இரச்சுவில் கற்பிதமாகிய சர்ப்பதிருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியின் நிவர்த்தி உண்டாகின்றது.

---

போல. இதனையே விகாரமென்றும் கூறுவர்.

* எது தான் நிருவிகாரவடிவமாயிருந்துகொண்டு அவித்தையினாலாகிய கற்பித காரியத்திற்கு ஆசிரியமாகின்றதோ, அது அதிஷ்டானம். கற்பித சர்ப்பத்திற்கு அதிஷ்டானமாகிய இரச்சுபோல. இதனையே பரிணாமி உபாதானத்திற்கு விலட்சணமாகிய விவர்த்த உபாதானமென்றும் கூறுவர்.

† அதிஷ்டானத்தினும் விஷமசத்தை (அற்பமும் பின்னமுமாகிய சத்தை) யுடைய அதிஷ்டானத்தினும் அன்னியதாரூபம் (வேறுவிதமாகிய வடிவம்), விவர்த்தமாம். இரச்சுவின் விவர்த்தமாகிய சர்ப்பம்போல. இதனையே கற்பிதகாரியமென்றும், கற்பிதவிசேஷமென்றுங் கூறுவர்.

வினு :—ரு. கனகத்தில் குண்டலந் தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரமத்திற்கு வேருகிய ஜகத்தினது சத்தியத்தன்மையின் பிராந்தி எப்படி நிவர்த்தியாகும்?

விடை:—கனகத்திற்கும் குண்டலத்திற்கும் காரியகாரணத்தன்மையால் தோற்றும் பேதம் கற்பிதமாம். கனகத்திற்கு வேருகக் குண்டலத்தின் சொரூபம் காணப்படாமையால் வாஸ்தவ அபேதமிருக்கிறது. அதனுல் கனகத்திற்கு வேருகக் குண்டலத்திற்குச் சத்தையில்லை.

சித்தாந்தம் :—அதுபோலப் பிரமத்திற்கும் ஜகத்திற்கும் காரியகாரணத்தன்மையினுலும் விசேஷணத்தினுலும் தோற்றும் பேதம், கற்பிதமாம். விசாரித்துப்பார்க்குமிடத்து அஸ்திபாதிப்பிரிய (சச்சிதானந்த) த்திற்கு வேருக நாமரூப

ஜகத்து சத்தியமாகச் சித்திக்கிறதில்லை. ஆனால் மித்தையாகச் சித்திக்கிறது. எந்த வஸ்து எதிற் கற்பிதமாமோ, அந்த வஸ்து அதனினும் வேறாகச் சித்திக்கிறதில்லை. ஆகையால் பிரமத்திற்கும் ஜகத்திற்கும் வாஸ்தவ அபேதமுண்டு. அதனால் ஜகத்திற்குப் பிரமத்தினும் வேறாகிய சத்தையில்லை. இவ்வாறு கனகத்தில் குண்டலந் தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரமத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப் பிராந்தி நிவர்த்தியாகின்றது.

வினா :—பிராந்தியென்பது யாது?

விடை :—பிராந்தியென்பது அத்தியாசமாம்.

வினா : —அத்தியாசமென்பது யாது?

விடை :—பிராந்தி (மயக்க) ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கு

ம், பிராந்திஞானத்திற்கும் அத்தியாச மென்று பெயராம்.

வினு:—இந்த அத்தியாசம் எத்தனை விதமாம்?

விடை:—ஞானத்தியாசம் அர்த்தாத்தி யாசமென்னும் பேதத்தால் அத்தியாசம் இரண்டுவிதமாம். அவற்றுள் அர்த்தா த்தியாசமானது * கேவலசம்பந்தாத்தி யாசம், † சம்பந்த சகித சம்பந்தியத்தியா

---

* அனன்மாவில் ஆன்மாவின் அத்தியாச ம் உண்டாகின்றது. அங்கே அனன்மாவில் ஆன்மாவின் தாதான்மிய சம்பந்தம் அத்தி யஸ்தமாகின்றது. ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகிறதில்லை. ஆகையால் அனு த்துமாவில் ஆன்மாவின் கேவலசம்பந் தாத்தியாசமுண்டாகின்றது.

† ஆன்மாவில் அனன்மாவின் சம்பந்தமு ம் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமா

சம், * கேவல தர்மாத்தியாசம், தர்மச
† கிததர்மியத்தியாசம், ‡ அன்னியோன்

---

கின்றது. ஆகையால் ஆன்மாவில் அனுன்
மாவின் **சம்பந்தசகித சம்பந்தியின
த்தியாச**முண்டாகின்றது.

* ஸ்தூலதேகத்தின் வெண்மைமுதலியன
வும் இந்திரியங்களின் பார்வைமுதலியனவுமா
கிய தர்மங்கள்மாத்திரம் ஆன்மாவில் அத்தி
யஸ்தமாகின்றன ; அவற்றின் சொரூபம் அ
த்தியஸ்தமாகிறதில்லை. ஆகையால் ஆன்மா
வில் தேகேந்திரியங்களது **கேவலதர்ம
த்தினத்தியாச**முண்டாகின்றது.

† அந்தக்கரணத்தின் கருத்திருத்துவாதி தர்
மங்களும் சொரூபமுமாகிய இரண்டும் ஆன்மா
வில் அத்தியஸ்தமாகின்றன. ஆகையால் ஆன்
மாவில் அந்தக்கரணத்தின் **தர்மசகிததர்
மியின் அத்தியாச**முண்டாகின்றது.

‡ இரும்பும் அக்கினியும்போல ஆன்மாவில்

னியாத்தியாசம், * அன்னியதராத்தியாசம் என்னும் பேதத்தால் ஆறுவிதமாம்.

அல்லது †சொரூபாத்தியாசம் ‡ சம்சர்

---

அனான்மாவின் அத்தியாசமும் அனான்மாவில் ஆன்மாவின் அத்தியாசமும் இருத்தல், அன்னியோன்னியாத்தியாசமாம்.

* அனான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது. ஆனால் ஆன்மாவில் அனான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாம். இதுவே அன்னியதராத்தியாசமாம். இரண்டில் ஒன்றின் அத்தியாசம் அன்னியதராத்தியாசமெனப்படும்.

† ஞானத்தினால் பாதமாகத்தக்க வஸ்து அதிஷ்டானத்தில் சொரூபமாக அத்தியஸ்தமாகின்றது. தேகாதி அனான்மாவிற்கு அதிஷ்டான ஞானத்தால் பாதமுண்டாகின்றமையால், ஆன்மாவில் அதன் சொரூபாத்தியாசமுண்டாகின்றது.

‡ பாதிக்கத்தகாத வஸ்துவின் சொரூபம்,

க்காத்தியாசம் என்னும் பேதத்தால் அர்த்தாத்தியாசம் இரண்டு வகைப்படும். முற்சொல்லப்பட்ட ஆறுபேதங்களும் இதில் * அடங்கும். மேலெழுதப்பட்டு

---

அத்தியஸ்தமாகிறதில்லை. ஆனல் அதன் சம்பந்தம் அத்தியஸ்தமாகும். ஆகையால் அனன்மாவில் ஆன்மாவின் சம்சர்க்காத்தியாசமுண்டாகின்றது. இதனையே சம்பந்தாத்தியாசமென்றும் கூறுவர்.

* கேவலதர்மாத்தியாசம், தர்மசகிததர்மியினத்தியாசம், அன்னியதராத்தியாசம் என்னுமிம்மூன்றும் சொரூபாத்தியாசத்தி லடங்கும். கேவலசம்பந்தாத்தியாசம், சம்சர்க்காத்தியாசமேயாகும். சம்பந்தசகிதசம்பந்தியினத்தியாசம், சம்சர்க்காத்தியாசசகித சொரூபாத்தியாசமாம். அன்னியோன்னியாத்தியாசத்தில் சம்சர்க்காத்தியாசம் சொரூபாத்தியாசமென்னுமிரண்டு முண்டு. ஏனெனின், ஆன்

ள்ள பேதப்பிராந்திமுதலிய ஐவகைப்பி ராந்தியும் இதனுள் * அடங்கும். இ னி அடுத்துச்சொல்லப்படும் ஆன்மானுன் மாக்களினது விசேஷணங்களின் அன்னி யோன்னியாத்தியாசமும் இதிற்றனே அ

---

மாவின் சொரூபம் சத்தியமானமயால் அது அத்தியஸ்தமாகாது. ஆனல் அதன் சம்சர்க்க மெனப்படும் தாதான்மிய சம்பந்தம் அனன்மா வில் அத்தியஸ்தமாம். ஆகையால் அதன் சம்சர்க்காத்தியாசமுண்டாகின்றது. அனன் மாவின் சொரூபமே ஆன்மாவில் அத்தியஸ்த மாகின்றமையால், அதன் சொரூபாத்தியாசமு ண்டாகின்றது. அதனுல் அன்னியோன்னி யாத்தியாசம் இவ்விரண்டிலு மடங்கும்.

* முன்னெழுதப்பட்டுள்ள பேதப்பிராந்தி முதலிய ஐவகைப்பிராந்திகளில் சங்கப்பிரா ந்தி நீங்கிய மற்ற நால்வகைப்பிராந்தியும் சொ ரூபாத்தியாசத்தி லடங்கும். ஐந்தாவது சங்க ப்பிராந்தி சம்சர்க்காத்தியாசத்தி லடங்கும்.

டங்கும். அது அதன் டிப்பணத்தில் (விளக்கவுரையில்) காட்டப்படும்.

வினா :—அகங்காராதி அனான்மாக்களையும், ஆன்மாவையும் அறிவதில் விசேஷ உபயோகமுள்ள அத்தியாசமெது ?

விடை :— அன்னியோன்னியாத்தியாசமாம்.

வினா :— அன்னியோன்னியாத்தியாசமென்பது யாது ?

விடை:—பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின் (ஒன்றில் ஒன்றின்) அத்தியாசத்திற்கு*அன்னியோன்னியாத்தியாசமென்று பெயர்.

---

* இங்கே சகல அத்தியாசங்களினது சொரூபத்தையும் உதாரணத்தையும் விரியுமென்றஞ்சி விசேஷமாய் எழுதாமல் சம்க்ஷேப (சுருக்க) மாய் எழுதியிருக்கிறோம். அவற்றை விசேஷமாய் அறியவிரும்புவோர் விருத்திப்பிரபாகர கிரந்தத்திற் காண்க. ஆனால் அன்னியோன்னியாத்தியாசத்தின் சொரூபம், விசேஷ

வினா :—ஆன்மானான்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) எப்படி அத்தியாசமுண்டாகிறது ?

விடை :—க. சத்து. உ. சித்து.

---

உபயோகமுள்ளதென்றறிந்து ஸ்பஷ்டமா(தெளிவா)ய்க் காட்டப்பட்டிருக்கின்றது. அதில் அனான்மாவின் தர்மமாகிய துக்கமும் துவைதசகிதத்துவமும், ஆன்மாவின் ஆனந்தத்திலும் அத்துவிதத்தன்மையிலும் சொரூபமாக அத்தியஸ்தமாய், அவற்றை மறைக்கின்றன. ஆன்மாவின் தர்மமாகிய சத்தும் சித்தும், அனான்மாவின் அசத்துவத்திலும் ஜடத்துவத்திலும் சம்சர்க்க (சம்பந்த) வாயிலாக அத்தியஸ்தமாய் அவற்றை மறைக்கின்றன. காரியசகித அஞ்ஞானத்தால் மறைக்கப்படுவது அதிஷ்டானமெனப்படும். இவ்வாறு ஆன்மானான்மாக்களின் அன்னியோன்னியாத்தியாசமாகிய இதுவும் சம்சர்க்காத்தியாச சொரூபாத்தியாசங்களி லடங்கும்.

௩. ஆனந்தம். ௪. அத்துவைதத்து வம் என்னு மிந்நான்கு விசேஷணங்களும் ஆன்மாவினுடையனவாம். ௧. அசத்து. ௨. ஜடம். ௩. துக்கம். ௪. துவைதசகிதத்துவம் (துவிதத்தோடுகூடிய தன்மை) என்னு மிந்நான்கு விசேஷணங்களும் அனான்மாவினுடையனவாம். அவற்றுள்,

(௧) (௨) துக்கம் துவித்சகிதத்துவம் என்னும் இவ்விரண்டு அனான்மவிசேஷணங்களும் ஆன்மாவின் ஆநந்தத்தையும் அத்துவிதத்துவத்தையும் மறைக்கின்றன. அதனால் ஆன்மாவில் "நான் ஆனந்தரூபனாயும் அத்துவிதரூபனாயுமிருக்கிறேன்" என்னும் ஞானமுண்டாகாமல், "நான் துக்கியாயும் ஈசுவராதிகளினும் வேறாயுமிருக்கிறேன்" என்னும் ஞானம் உண்டாகிறது.

(௩) (௪) ஆன்மாவின் சத்து சித்து என்னும் இரண்டு விசேஷணங்களும் அ னுன்மாவின் அசத்துவத்தையும் ஜடத்து வத்தையும் மறைக்கின்றன. அதனு ல் அனுன்மாவாகிய அகங்காராதிகளி ல் "அசத்தாயும் ஜடரூபமாயுமிருக்கிற து" என்னும் ஞானமுண்டாகாமல் "இ ருக்கிறது, விளங்குகிறது" என்னும் ஞா னமுண்டாகிறது.

இவ்வாறு ஆன்மானுன்மாக்களுக்கு * பரஸ்பர அத்தியாசமிருக்கின்றது.

ஆறுங்கலை முற்றிற்று.

---

* பிரம ஈசுரர்களுக்கும் கூடஸ்த ஜீவர்க ளுக்கும் உள்ள பரஸ்பர அத்தியாசம் மேற்ப தினேராவது கலையிற் சொல்லப்படும்.

## ஏழாம்கலை.

---

## ஆன்மாவின் விசேஷணம்.

——:o:——

வினு :—ஆன்மாவின் விசேஷணம் எத்தனை வகையாம் ?

விடை :—ஆன்மாவின் விசேஷணம் * விதேயம் (சாக்ஷாத்போதகம்) † நிஷே

---

* சுமங்கிலி என்னும் சொல் அமங்கிலியாகிய ஸ்திரீயை நிஷேதித்து, சுவாசினி (நல்வாசமுள்ள) ஸ்திரீயை நேரே அறிவிப்பதாயிருத்தல்போல, " சத்து" முதலிய விதேய விசேஷணங்கள் " அசத்து" முதலிய பிரபஞ்சத்தின் விசேஷணங்களை நிஷேதித்து, சத்துமுதலிய வடிவினதாகிய பிரமத்தை நேரே அறிவிப்பனவாயிருக்கின்றன. ஆகையால் " விதேய" மெனப்படுகின்றன.

† அவிதவை என்னும் சொல் விதவையாகிய ஸ்திரீயை நிஷேதித்து, அர்த்தத்திஞல் அவ

த்தியம் (பிரபஞ்சத்தின் நிஷேதவாயிலாக அறிவிப்பது) என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

வினா :—ஆன்மாவின் விதேய விசேஷணங்கள் எவை ?

விடை :—க. சத்து. உ. சித்து. ௩. ஆனந்தம். ௪. பிரமம். ௫. சுயம்பிரகாசம். ௬. கூடஸ்தர். எ. சாக்ஷி. அ. திருஷ்டா. ௯. உபதிருஷ்டா. ௰. ஏகம் என்னுமிவைமுதலியன.

---

ளுக்கு விலக்ஷணமாகிய சுவாசினி ஸ்திரீயை அறிவிப்பதாயிருத்தல்போல, அநந்தமுதலிய நிஷேத்திய விசேஷணங்கள் அந்தமுதலிய பிரபஞ்சத்தின் தர்மங்களை நிஷேதித்து, அர்த்தத்தினால் அவற்றிற்கு விலட்சணமாகிய பிரமத்தை அறிவிப்பனவாயிருக்கின்றன. ஆகையால் "நிஷேத்திய" மெனப்படுகின்றன.

வினு :—க. ஆன்மா எப்படிச் சத்தாம்?

விடை :—ஞானத்திஞலேனும் மற்ருென்றிஞலேனும் எதனது நிவர்த்தியுண்டாகவில்லையோ, அது சத்து. ஆன்மா ஞானத்திஞலும் மற்றெதிஞலும் நிவர்த்தியாகாமையால் சத்தாம்.

வினு :—உ. ஆன்மா எப்படிச்சித்தாம்?

விடை :—குன்ருத பிரகாசம், சித்து. ஆன்மா குன்ருத பிரகாசவடிவமாயிருத்தலால், சித்தாம்.

வினு :—ந. ஆன்மா எப்படி ஆனந்தமாம்?

விடை :—பரம (எல்லாவற்றினுமதிக) ப்பிரீதிக்கு எது விஷயமோ, அது ஆனந்தம். ஆன்மாவினிடத்தில் எல்லோருக்கும் பரமப்பிரீதியிருத்தலால், அது ஆனந்தமாம்.

181 181 275

வினு :—ச. ஆன்மா எப்படிப் பிரம ரூபமாம்?

விடை :—ஆன்மா சச்சிதானந்தவடிவ மென்பது சுருதி யுக்தி அனுபவங்களால் சித்திக்கின்றது. பிரமமும் சாஸ்திரங் (உபநிஷத்துக்) களில் சச்சிதானந்தவடி-வமெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. அதனுல் ஆன்மா பிரமவடிவமாம்.

அல்லது பிரமமென்பது வியாபகத்தி ற்காம். எதற்குத் தேசத்தினுல் அந்த மில்லேயோ, அது வியாபகமெனப்படும். ஆன்மா பிரமத்தினும் வேருயிருக்குமாயி ன், தேசத்தினுல் அந்தமுடையதாகும். எதற்குத் தேசத்தினு லந்தம் உண்டாகி றதோ, அதற்குக் காலத்தினுலும் அந்தமு ண்டாகுமென்பது நியமம். எதற்குத் தேசகாலங்களினுல் அந்தமுண்டாகிற தோ, அது அநித்தியமெனப்படும். அத

னல் ஆன்மா அநித்தியமாகும். ஆகை யால் ஆன்மா பிரமத்தினும் வேறன்று. அன்றியும் பிரமம் ஆன்மாவினும் வேரு யிருக்குமாயின் அது அனன்மாவாகும். அனன்மாவாகிய கடமுதலியவைகள் ஜடமாகையால், ஆன்மாவினும் வேருகிய பிரமம் ஜடமாகும். இவ்வார்த்தை சுருதிக்கு விரோதமாம்.

ஆகையால் ஆன்மாவிற்கு வேருகப் பிரம மில்லை. அதனுல் ஆன்மா பிரமவடிவமாம்.

வினு :—ரு. ஆன்மா எப்படிச் சுயம் பிரகாசமாம்?

விடை :—எது தீபத்தைப்போல தனது பிரகாசத்தில் ஒன்றையும் அபேட்சியாது, தான் எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பதா யிருக்கிறதோ, அது சுயம்பிரகாசமெனப்படும். இப்படி யிருப்பது

ஆன்மாதான். ஆகையால் ஆன்மா சுய
ம்பிரகாசமாம்.

அல்லது எது எப்போதும் அபரோ
ட்சவடிவமாய், எந்த ஞானத்திற்கும் வி
ஷயமாகாதிருக்கின்றதோ, அது சுயம்பிர
காசமெனப்படும். ஆன்மா எப்போதும்
அபரோட்ச வடிவமாயும் பிரகாசவடிவ
மாயுமிருத்தலால், எந்த ஞானத்திற்கும்
விஷயமாகாததாயிருக்கின்றது. ஆகை
யால் அது சுயம்பிரகாசமாம்.

வினா :—சு. ஆன்மா எப்படிக் கூடஸ்
தராம் ?

விடை :—கூடமென்பது கொல்லனது
சம்மட்டிக்காம். அதைப்போல நிருவி
காரவடிவமாயிருப்பது, கூடஸ்தனென
ப்படும். கொல்லன் அநேக அடிகளை
அடித்தபோதிலும் சம்மட்டி எப்படி
யோ அப்படியே (நிருவிகாரமா) யிருத்த

ல்போல மனமாகிய கொல்லன் விவகார மாகிய அநேக அடிகளை அடித்தபோதிலும், ஆன்மா எப்படியோ அப்படியே (நிருவிகாரமா) யிருக்கிறது. ஆகையால் ஆன்மா கூடஸ்தராம். கூடஸ்தரென்று சொல்லுதலால் அசலம் அக்கிரியம் (செயலற்றது) என்பதும் அர்த்தத்தினுல் சித்தித்தது.

வினு :—எ. ஆன்மா எப்படிச்சாட்சியாம்?

விடை :—உலக வியவகாரத்தில் உதாசீனமா (இராகத்துவேஷமில்லாததா) ய்ச் சமீபத்திலிருக்கும் சேதனம், சாட்சியெனப்படும். ஆன்மா தேகாதிகளோடு உதாசீனமாய்ச் சமீபத்திலிருக்கும் சேதன (அஜடப்பிரகாச) மாயிருத்தலால், சாட்சியாம். அல்லது அந்தக்கரணமாகிய உபாதியையுடைய சேதனம் சாட்சியென

ப்படும். அல்லது அந்தக்கரணத்திலும் அந்தக்கரண விருத்தியிலுமிருக்கும் சேதனமாத்திரம் (கேவலசேதனம்) சாட்சியெனப்படும். ஆன்மா இப்படியிருக்கின்றது. ஆகையால் அது சாட்சியாம்.

வினு :—அ. ஆன்மா திருஷ்டாவென்பது எப்படி?

விடை :—பார்க்கிறவன் எவனோ. அவன் திருஷ்டாவெனப்படுவன். ஆன்மா சகல திருசியங்களையும் பார்க்கிறதாயிருத்தலால், திருஷ்டாவாம்.

வினு :—கூ. ஆன்மா எப்படி உபதிருஷ்டாவாம்?

விடை :—யாகசாலையில் யாககாரியங்களைச் செய்யும் இருத்துவிக்குகள் பதினைந்துபெயர். பதினாறாவது எஜமானன். பதினேழாவது எஜமானனுடைய மனவி. பதினெட்டாவது உபதிருஷ்டா (சமீபத்

தில் உட்கார்ந்துகொண்டு பார்க்கிறவன்). அவன் ஒரு காரியமும் செய்கிறதில்லை. அதுபோல ஸ்தூலதேகமாகிய சாலையில் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பிராணன் ஐந்து என்னுமிப்பதினைந்தும் இருத்துவிக்குகள். பதினாறுவது மனம் எஜமானன். பதினேழாவது புத்தி அவன் மனைவி. இவையெல்லாம் தத்தம் விஷயங்களைக் கிரகித்தலாகிய போகாகார யாககாரியங்களைச் செய்கின்றன. இவை எல்லாவற்றையும் சமீபத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் ஆன்மா பதினெட்டாவது உபதிருஷ்டாவாம்.

வினா :— ம். ஆன்மா எப்படி ஏகமாம் ?

விடை :—ஆன்மாவிற்குச் சஜாதீயமா (இனமுள்ளதா) கிய வேறு ஆன்மா இல்

லாமையால் ஏகமாம்.

இவைமுதலியன ஆன்மாவின் விதேய விசேஷணங்கள்.

வினு :—ஆன்மாவின் நிஷேத்திய வி சேஷணங்கள் எவை ?

விடை :—க. அநந்தம். உ. அக ண்டம் ங. அசங்கம். ச. அத்துவிதீ யம். ரு. அஜன்மம். சு. நிருவிகா ரம். எ. நிராகாரம். அ. அவ்வியக் தம். கூ. அவ்வியயம். ௰. அக்ஷரம் என்னுமிவைமுதலியனவாம்.

வினு :—க. ஆன்மா எப்படி அநந்தமா ம் ?

விடை :—ஆன்மாவிற்கு வியாபகமா யிருத்தலால் தேசத்தினுலும், நித்தியமா யிருத்தலால் காலத்தினுலும் அந்தமி ல்லை. ஆன்மா அதிஷ்டானமாயிருத்த லால் எல்லாவற்றினது சொரூபமாம்.

அதனல் அதற்கு வஸ்துவினுலும் அந்த மில்லை. ஆன்மாவிற்குத்தேசகாலவஸ்துக்களால் அந்த (பரிச்சேத) மில்லாமையால், அது அநந்தமாம்.

வினு:—உ. ஆன்மா எப்படி அகண்டமாம்?

விடை:—ஆன்மா, ஜீவேசுவர்களின் பேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடங்களின் பேதம், ஜடஜடபேதம், ஜடஈசுரர்களின்பேதம், என்னும் ஐந்துபேதங்களு மில்லாததாயிருக்கின்றது. அல்லது சஜாதீய விஜாதீய சுகதமென்னும் பேதங்களில்லாததாயிருக்கின்றது. ஆகையால் அது அகண்டமாம்.

வினு:—ங. ஆன்மா எப்படி அசங்கமாம்?

விடை:—சங்கமென்பது சம்பந்தத்திற்காம். அச்சம்பந்தம். க. சஜாதீய

ம். உ. விஜாதீயம். ௩. சுகதமெ
ன மூன்றுவகையாம்.

(க) தன்ஜாதியுடையதோடுள்ள சம்ப
ந்தம் சஜாதீயம். பிராமணனுக்கு அ
ன்னியப் பிராமணனோடுள்ளதுபோல.

(உ) அன்னிய ஜாதியுடையதோடு
ள்ள சம்பந்தம் விஜாதீயம். பிராமணனு
க்குச் சூத்திரனோடுள்ளதுபோல.

(௩) தன் அவயவ (அங்க) ங்களோடு
ள்ள சம்பந்தம் சுகதம். பிராமணனு
க்குத் தனது அங்கமாகிய கைகால்முதலி
யவற்றோடுள்ளதுபோல.

(க) ஆன்மா (சேதனம்) ஒன்றாயிரு
த்தலால் அதற்கு ஜாதியில்லை. ஜீவன்,
ஈசுவரன், பிரமன், விஷ்ணு, சிவன், நான்,
நீயென்னும் இவைமுதலிய பேதங்கள் உ
பாதியினாலாயினவைகளா யிருத்தலால் மி
த்தையாம். ஆகையால் ஆன்மாவிற்கு எ

தனோடும் சஜாதீய சம்பந்தம் பொரு ந்தாது. அதுபோல

(உ) ஆன்மா அத்துவைதமாயும் ச த்தாயுமிருக்கின்றது. அதனினும் வே றாய்த் தோன்றும் மாயையு (அஞ்ஞான மு) ம் அதன் காரியமாகிய தூல சூட்சு மப் பிரபஞ்சமும் அசத்தாம். அசத்தெ ன்பது ஓர் பதார்த்த மன்று. ஆகையா ல் ஆன்மாவிற்கு ஒன்றனோடும் விஜாதீய சம்பந்தம் பொருந்தாது.

(ங) ஆன்மா நிரவயமாம். சச்சிதா நந்த முதலியன, ஆன்மாவின் அவயவங்க ளன்று. ஆனல் ஒரு வடிவமாயிருந்த லான் ஆன்மாவின் சொரூபமாம். அ தனல் ஆன்மாவிற்குச் சுகதசம்பந்தம் பொருந்தாது. இவ்வாறு ஆன்மா சகல சம்பந்தமுமில்லாததால் அசங்கமாம்.

வினு:—ச. ஆன்மா எப்படி அத்து

விதமாம் ?

விடை :— துவிதமாகிய பிரபஞ்சம் சொப்பனம்போல கற்பிதமாயிருத்தலால் வாஸ்தவமன்று. ஆகையால் ஆன்மா துவிதமில்லாததாயிருத்தலால் அத்துவிதமாம்.

வி :—ரு. ஆன்மா எப்படி அஜன்மமா (பிறப்பில்லாததா) ம் ?

விடை :—ஸ்தூலதேகத்தின் தர்மம் ஜன்மமாம். ஜன்மம் சூட்சுமதேகத்தின் தர்மமே அல்லவென்றால், அது எப்படி ஆன்மாவின் தர்மமாகும். அன்றியும் ஆன்மாவிற்கு ஜன்மம் ஒப்புவோமாயின் மரணமும் ஒப்பவேண்டிவரும். அதனால் ஆன்மா அநித்தியமென்பது சித்திக்கும். அது பரலோகவாதிகளாகிய ஆஸ்திகர்களுக்கு அனிஷ்டமா (பிரியமில்லாததா) ம். ஏனெனின், ஜனனமரண

முடைய வஸ்துவிற்கு ஆதியிலும் அந்தத்திலும் அபாவமுண்டு. அதனால் பூர்வஜன்மத்தில் ஆன்மாவில்லை; அதனது கன்மமும் யில்லை. அப்போது இந்த ஜன்மத்தில் ஆன்மாவிற்குக் கன்மமின்றிப் போகமுண்டாகிறதுமன்றி, மரணத்திற்குப் பிறகு ஆன்மாவில்லாமையால், இந்த ஜன்மத்திற் செய்யப்பட்ட கன்மத்திற்கு அநுபவமின்றி நாசமுமுண்டாகும். அதனால் வேதோக்ததன்மங்கள் வியர்த்தமாகும். ஆகையால் ஜன்மம் ஆன்மாவின் தர்மமன்று. அதனால் ஆன்மா அஜன்மமாம். அஜன்மமென்றதனால் அஜர அமரமென்பதும் அர்த்தத்தினால் சித்தித்தது.

வினா:—சு. ஆன்மா எப்படி நிருவிகாரமாம்?

விடை:—குடத்திற்குப் (க) பிறப்பு

(உ) இருப்பு (ங) வளர்ச்சி (ச) பரிணமம் (ரு) க்ஷயம் (சா) நாசம் என்னும் ஆறு தர்மங்களிருக்கின்றன. அவை குடத்திலிருக்கும் குடத்தின் வேறாகிய ஆகாயத்தின் தர்மமன்று. அதுபோல

(க) "தேகம் பிறக்கிறது" என்பது பிறப்பு.

(உ) "தேகம் பிறந்திருக்கிறது" என்பது இருப்பு (முன்னில்லை; இப்போதிருக்கிறது எனல்).

(ங) "தேகம் பாலகனாயிற்று" என்பது வளர்ச்சி.

(ச) "தேகம் யௌவனமாயிற்று" என்பது பரிணமம்.

(ரு) "தேகம் விருத்தமாயிற்று" என்பது க்ஷயம்.

(சா) "தேகம் மரணமடைந்தது" எ

ன்பது நாசம்.

இந்த ஆறு விகாரங்களும் தேகத்தின் தர்மங்களாம். தேகத்தை அறிவதாய் தேகத்திற்கு வேறாயிருக்கும் ஆன்மாவி ன் தர்மமன்று. இப்படி ஆறுவிகாரங்க ளுமில்லாததாகிய ஆன்மா நிருவிகாரமா ம்.

வினு :—எ. ஆன்மா எப்படி நிராகா ரமாம்.

விடை :—க ஸ்தூலம் உ சூட்சு மம் ௩ நீளம் ௪ குறுகல் என நான்குவிதமாகிய வடிவங்கள் சகத்திலு ண்டு.

(க) ஆன்மா இந்திரியத்திற்கும் மன திற்கும் விஷயமாகாததாயிருத்தலால் சூ ட்சுமமாம்; அதனுல் ஸ்தூலமன்று.

(உ) ஆன்மா வியாபகமாயிருத்தலா ல் சூட்சுமம (அணுவ) ன்று.

(௩) (௪). ஆன்மா எங்கும் ஓதப்புரோதமா (குறுக்குநெடுக்கா) யிருத்தலால், நீளமும் குறுகலுமன்று. ஆகையால் ஆன்மா நிராகாரமாம்.

வினா:—அ. ஆன்மா எப்படி அவ்வியக்தமாகும் ?

விடை:—ஆன்மா, மன இந்திரியாதிகளுக்கு அகோசரமாயிருத்தலால் அஸ்பஷ்டமா (வெளிப்படையில்லாததா) ம். ஆகையால் அது அவ்வியக்தமாம்.

வினா:—கூ. ஆன்மா எப்படி அவ்வியயமாம் ?

விடை:—களஞ்சியத்தில் தானியத்தை எடுத்தலாலும் போடுதலாலும் தானியத்திற்கு வியயம் (குறைவு நிறைவு) உண்டாகின்றது. ஆன்மாவிற்கு அப்படி வியயமுண்டாகாமையால் அவ்வியயமாம்.

வினு :—௰. ஆன்மா எப்படி அக்ஷரமாம் ?

விடை :—ஆன்மா க்ஷர (நாச) மில்லாலதாயிருத்தலால் அக்ஷரமாம். இதையே அக்ஷயமென்றும் அமிர்தமென்றும் அவிநாசி என்றும் கூறுவர். இவைமுதலியன ஆன்மாவின் நிஷேத்திய விசேஷணங்கள்.

வினு :—இவ்வான்மாவின் விசேஷணங்கள் எப்படிப் பரஸ்பரம் பின்னமாம்?

விடை :—சச்சிதாநந்தமுதலியன ஆன்மாவிற்குக் குணமாயிருக்குமாயின், பரஸ்பரம் பின்னமாம். Swe. 6. 16. Chha. 8-5.

க. இவை ஆன்மாவின் குணமாகாமல் சொரூபமாயிருக்கின்றன. ஆகையால் பரஸ்பரம் பின்னமாகாமல், அபின்னமாம். ஒரே ஆன்மா நாசரகிதமாயிருத்தலால் சத்தென்றும்,

உ. ஜடவிலக்ஷணமாகிய பிரகாசவடிவமாயிருத்தலால் சித்தென்றும்,

ங. துக்கத்திற்கு விலக்ஷணமாகிய முக்கியப் பிரியத்திற்கு விஷயமாயிருத்தலால் ஆனந்தமென்றும் சொல்லப்படுகின்றது.

இவ்வாறு சகல விசேஷங்களிலுமறிக.

திருஷ்டாந்தம் :—ஒரே புருஷன் பிதாவின் திருஷ்டியால் புத்திரனென்றும், பாட்டனது திருஷ்டியால் பேரனென்றும், பிதாவின் சகோதரனது திருஷ்டியால் சகோதரனது புத்திரனென்றும், மாமனது திருஷ்டியால் மருமகனென்றும் சொல்லப்படுகிறதுபோலும்.

ஒரே சன்னியாசி, பசு ஸ்திரீ கிரகஸ்தன் தண்டமில்லாதவன் என்னுமிவர்களது திருஷ்டியால் மனிதன் புருஷன் துறவி தண்டி என்னும் விதேய விசேஷண

ங்களாலும் கடம் பாஷாணம் (கல்) விரு
ட்சமுதலியவற்றின் திருஷ்டியால் அக
டம் அபாஷாணம் அவிருட்சம்முதலிய
நிஷேத்திய விசேஷணங்களாலும் சொ
ல்லப்படுகிறதுபோலும்.

சித்தாந்தம்:—ஒரே ஆன்மா, பிரபஞ்ச
த்தின் விசேஷணமாகிய அசத்து ஜடம்
துக்கம் அந்தம் கண்டம் சங்கமுதலிய
வற்றின் திருஷ்டியால் சத்து சித்து ஆந
ந்தம் அநந்தமுதலியனவாகச் சொல்லப்ப
டுகின்றது. இவ்வாறு ஆன்மாவின் விசே
ஷணங்கள் ஒன்றற்கொன்று பின்னமாகா
மல் அபின்னமாகின்றன.

ஏழாம்கலை முற்றிற்று.

---

## எட்டாம்கலை.

——:o:——

சச்சிதாநந்த விசேஷவர்ணநம்.

வினா :—க. சத்தென்பது யாது?

விடை :—மூன்றுகாலத்திலும் பாதிக்கப்படாதது, சத்து.

வினா :—உ. சித்தென்பது யாது?

விடை :—மூன்றுகாலத்திலும் எல்லாவற்றையும் அறிவது, சித்து.

வினா :—ங. ஆநந்தமென்பது யாது?

விடை :—மூன்றுகாலத்திலும் பரமப்பிரேமைக்கு விஷயமாவது, ஆனந்தம்.

வினா :—௪. "நான் சத்" தென்றறிவ தெப்படி?

விடை :—மூன்றுகாலத்திலு மிருத்தலால் நான் சத்தென்றறிக.

வினா :—மூன்று காலத்திலுமிருத்தலால் நான் சத்தென்றறிவதெப்படி?

விடை :—க. ஜாக்கிரத்திலும், சொப்பனத்திலும், சுழூத்தியிலும் நானிருக்கிறேன். அதுபோல

உ. காலையிலும், மத்தியானத்திலும், சாயங்காலத்திலும் நானிருக்கிறேன். அதுபோல

ந. பகலிலும், இரவிலும், பட்சத்திலும் நானிருக்கிறேன். அதுபோல

ச. மாசத்திலும், இருதுவிலும், வருஷத்திலும் நானிருக்கிறேன். அதுபோல

ரு. பாலியாவஸ்தையிலும், யௌவனாவஸ்தையிலும், விருத்தாவஸ்தையிலும் நானிருக்கிறேன். அதுபோல

சா. பூர்வபட்சத்திலும், * இந்தத்தே

* இந்தப் பிரகரணத்தில் "இருந்தேன், இருப்பேனென்று" உச்சரிக்கத்தக்க இறந்தகால எதிர்காலங்களும் இருக்கிறேன் என்று நிகழ்

கத்திலும், வருந்தேகத்திலும் நானிரு க்கிறேன். அதுபோல

எ. யுகத்திலும், மனுவிலும், கற்ப த்திலும் நானிருக்கிறேன். அதுபோல

அ. இறந்தகாலத்திலும், நிகழ்கால த்திலும், வருங்காலத்திலும் நானிருக்கி றேன். இவ்வாறு மூன்றுகாலத்திலு மிருத்தலால் நான் சத்தென்றறிக.

வினு :—எனக்குவேறாகிய நாமரூப வ

---

காலத்தைப்போல உச்சரிக்கப்பட்டிருக்கின்ற ன. அது பூதமுதலிய காலங்களின் (மித்தை யாத்துவத்தை) சூசிப்பிக்கும்பொருட்டாம். ஆன்மாவிற்குச் சத்துமுதலிய வடிவம் உண் டென்பதில் சுருதிமுதலிய அநேக பிரமாண ங்களுண்டு. எந்தக் காலத்திலும் அது அச த்துமுதலியன வாமென்பதில் பிரமாண மி ல்லை. ஆகையால் எந்தக் காலத்திலும் ஆன் மா சச்சிதானந்தவடிவமாமெனச் சித்திக்கிற தென்றறிக.

ஸ்துக்களோடுகூடிய மூன்று காலத்தை யும் என்னவென்றறிதல்?

விடை :—எனக்கு வேருகிய நாமரூப வஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலமும் அசத்தென்றறிக.

வினு :—சத்தசத்துக்களின் நிச்சயம் எதனுலுண்டாகும் ?

விடை :—சத்தசத்துக்களின் நிச்சயம் அந்நுவயவெதிரேகயுக்திகளால் உண்டா கும்.

வினு :—சத்தசத்துக்களின் நிச்சயத்தி ல் அந்நுவயவெதிரேகயுக்திகளை அறிவ தெப்படி ?

விடை :— (க) ஜாக்கிரத்திலிருக்கிற நானே சொப்பனத்திலுமிருத்தலால், நா ன் சத்து. ஜாக்கிரம் என்னிடத்திலில் லாமையால், இது அசத்தாம். சொப்ப னத்திலிருக்கிற நானே சுழுத்தியிலுமி

ருத்தலால், நான் சத்தாயிருக்கிறேன். சொப்பனம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். சுழுத்தியிலிருக்கிற நானே காலையிலுமிருக்கிறேன். ஆகையாலிது அசத்தாம்.

(உ) காலையிலிருக்கிற நானே மத்தியானத்திலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். காலை என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். மத்தியானத்திலிருக்கிற நானே சாயங்காலத்திலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். மத்தியானம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். சாயங்காலத்திலிருக்கிற நானே பகலிலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். சாயங்காலம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம்.

(ரு) பகலிலிருக்கிற நானே இரவிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன். பகல் என்னிடத்திலில் லாமையால் அசத்தாம். இரவிலிருக்கி ற நானே பட்சத்திலுமிருக்கிறேன். ஆ கையால் நான் சத்தாயிருக்கிறேன். இ ரவு என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். பட்சத்திலிருக்கிற நானே மாசத்திலுமிருக்கிறேன். ஆகையால் நா ன் சத்தாயிருக்கிறேன். மாசம் என்னிட த்திலில்லை. ஆகையாலிதுஅசத்தாம்.

(சு) மாசத்திலிருக்கிற நானே இரு துவிலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். மாசம் என்னிட த்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். இருதுவிலிருக்கிற நானே வருஷத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன். இருது என்னிடத்திலி

ல்லை. ஆகையாலிது அசத்தாம். வரு ஷத்திலிருக்கிற நானே பாலியாவஸ்தையி லுமிருக்கிறேன். ஆகையால் நான் ச த்தாயிருக்கிறேன். வருஷம் என்னிட த்திலில்லை. ஆகையாலிது அசத்தாம்.

(ரு) பாலியாவஸ்தையிலிருக்கிற நா னே யௌவனாவஸ்தையிலுமிருக்கிறே ன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறே ன். பாலியாவஸ்தை என்னிடத்திலி ல்லை. ஆகையாலிது அசத்தாம். யௌ வனாவஸ்தையிலிருக்கிற நானே விருத்தா வஸ்தையிலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். யௌவனாவ ஸ்தை என்னிடத்திலில்லை. ஆகையாலி து அசத்தாம். விருத்தாவஸ்தையிலிரு க்கிற நானே பூர்வதேகத்திலுமிருக்கிறே ன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறே ன். விருத்தாவஸ்தை என்னிடத்திலி

ல்லை. ஆகையாலிது அசத்தாம்.

(சு) பூர்வதேகத்திலிருக்கிற நானே இந்தத் தேகத்திலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். பூர்வதேகம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். இந்தத் தேகத்திலிருக்கிற நானே வரும் தேகத்திலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். இந்தத் தேகம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். இனிவரும் தேகத்திலிருக்கிற நானே யுகத்திலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். வருந்தேகம் என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம்.

(எ) யுகத்திலிருக்கிற நானே மனுவிலுமிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். யுகம் என்னிடத்தில்லை. ஆகையாலிது அசத்தாம். ம

னுவிலிருக்கிற நானே கற்பத்திலுமிரு க்கிறேன். ஆகையால் நான் சத்தாயிரு க்கிறேன். மனு என்னிடத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம். கற்பத்திலி ருக்கிற நானே பூதகாலத்திலுமிருக்கிறே ன். ஆகையால் நான் சத்தாயிருக்கி றேன். கற்பம் என்னிடத்திலில்லை. ஆ கையாலிது அசத்தாம்.

(அ) பூதகாலத்திலிருக்கிற நானே வ ருங்காலத்திலுமிருக்கிறேன். ஆகையா ல் நான் சத்தாயிருக்கிறேன். இறந்த காலம் என்னிடத்திலில்லை. ஆகையாலி து அசத்தாம். வருங்காலத்திலிருக்கிற நானே நிகழ்காலத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தாயிருக்கிறேன். வருங்காலம் என்னிடத்திலில்லை. ஆ கையாலிது அசத்தாம். நிகழ்காலத்திலி ருக்கிற நானே எல்லாக்காலங்களிலு மிரு

க்கிறேன். ஆகையால் நான் சத்தாயிரு
க்கிறேன். வர்த்தமான காலம் என்னி
டத்திலில்லை. ஆகையாலிது அசத்தாம்.
இவ்வாறு சத்தசத்துக்களின் நிச்சயத்தில்
அந்நுவய வெதிரேக யுக்திகளை அறிக.

வினா :—நான் எப்படிச் சித்தாயிருக்கி
றேன் ?

விடை :—மூன்றுகாலத்திலும் நான
றிந்துகொண்டிருக்கிறேன். ஆகையால்
நான் சித்தாயிருக்கிறேன்.

வினா :—மூன்றுகாலத்திலும் நானறி
ந்துகொண்டிருத்தலால் சித்தாயிருக்கி
றேனென்றறிவதெப்படி ?

விடை :—க. ஜாக்கிரத்தையும், சொ
ப்பனத்தையும், சுழுத்தியையும் நானறிகி
றேன். அதுபோல

உ. காலையையும், மத்தியானத்தை
யும், சாயங்காலத்தையும் நானறிகிறேன்.

அதுபோல

ரு. பகலையும், இரவையும் பட்சத்தையும் நானறிகிறேன். அதுபோல

௪. மாசத்தையும், இருதுவையும், வருஷத்தையும் நானறிகிறேன். அதுபோல

ரு. பாலியாவஸ்தையையும், யௌவனாவஸ்தையையும், விருத்தாவஸ்தையையும் நானறிகிறேன். அதுபோல

சு. பூர்வதேகத்தையும், இந்தத்தேகத்தையும், வரும்தேகத்தையும் நானறிகிறேன். அதுபோல

எ. யுகத்தையும், மனுவையும், கற்பத்தையும் நானறிகிறேன். அதுபோல

அ. இறந்தகாலத்தையும், வருங்காலத்தையும், நிகழ்காலத்தையும் நான் அறிகிறேன்.

இவ்வாறு எல்லாக்காலத்தினும் நான

றிந்துகொண்டிருத்தலால், நான் சித்தாயி
ருக்கிறேனென்றறிக.

வினா :—எனக்கு வேறாகிய நாமரூப வ
ஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலத்தையு
ம் என்னவென்றறிதல்?

விடை :—எனக்கு வேறாகிய நாமரூப
வஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலமும்
ஜடமென்றறிக.

வினா :—சித்து ஜடங்களின் நிச்சயம்
எதனாலுண்டாகும்?

விடை :—சித்துஜடங்களின் நிச்சயம்
அந்நுவயவெதிரேகயுக்திகளாலுண்டாகு
ம்.

வினா :—சித்துஜடங்களின் நிச்சயத்தி
ல் அந்நுவயவெதிரேகயுக்திகளை அறிவ
தெப்படி?

விடை :—ஜாக்கிரத்தை அறிந்துகொ
டிருக்கிற நானே சொப்பனத்தையும் அ

றிந்துகொண்டிருக்கிறேன். ஆகையால் நான் சித்தாயிருக்கிறேன். ஜாக்கிரம் என்னை அறியாது. ஆகையாலிது ஜடமாம். சொப்பனத்தை அறிந்துகொண்டிருக்கும் நானே சுழுத்தியையும் அறிந்துகொண்டிருக்கிறேன். ஆகையால் நான் சித்தாயிருக்கிறேன். சொப்பனம் என்னை அறியாது. ஆகையாலிது ஜடமாம். இவைமுதலிய மற்றெல்லாக்காலங்களையும் முன்போல அறிக. இவ்வாறு சித்துஜடங்களின் நிர்ணயத்தில் அந்நுவயவெதிரேகயுக்திகளை அறிக.

வினா:—நான் ஆனந்தசொரூபனாயிருக்கிறேனென்பது எப்படி?

விடை:—மூன்றுகாலத்திலும் பரமப்பிரியனாயிருத்தலால் நான் ஆனந்தசொரூபனாயிருக்கிறேன்.

வினா:—மூன்றுகாலத்திலும் பிரியனா

யிருத்தலால், நான் ஆனந்தசொரூபனாயி ருக்கிறேனென் றறிவதெப்படி?

விடை:—ஜாக்கிரத்திலும் சொப்பனத்திலும் சுழுத்தியிலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல காலையிலும் மத்தியானத்திலும் சாயங்காலத்திலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல பகலிலும் இரவிலும் பட்சத்திலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல மாசத்திலும் இருதுவிலும் வருஷத்திலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல பாலியாவஸ்தையிலும் யௌவனாவஸ்தையிலும் விருத்தாவஸ்தையிலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல பூர்வதேகத்திலும் இந்தத்தேகத்திலும் வரும்தேகத்திலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல யுகத்திலும் மனுவிலும் கற்பத்திலும் நான் பிரியனாயிருக்கிறேன். அதுபோல இற

ந்தகாலத்திலும் வரும்காலத்திலும் நிகழ் காலத்திலும் நான் பிரியனுயிருக்கிறேன். இவ்வாறு மூன்று காலத்திலும் பரமப்பி ரியனுயிருத்தலால், நான் ஆனந்தசொரு பனுயிருக்கிறேனென்றறிக.

வினு :—என்னிலும் வேருகிய நாமரூ பவஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலமும் என்னவென்றறிதல் ?

விடை :—என்னிலும் வேருகிய நாம ரூப வஸ்துக்களோடுகூடிய மூன்றுகால மும் துக்கமென்றறிக.

வினு :—ஆநந்ததுக்கங்களின் நிச்சய ம் எதினுலுண்டாகும் ?

விடை :— ஆநந்ததுக்கங்களின் நிச் சயம் அந்நுவயவெதிரேகயுக்திகளால் உ ண்டாகும்.

வினு :— ஆநந்த துக்கங்களின் நிச்ச யத்தில் அந்நுவயவெதிரேகயுக்திகளை அ

றிவதெப்படி ?

விடை :— ஜாக்கிரத்தில் (பரமப்) பிரியனாயிருக்கின்ற நானே சொப்பனத்திலும் பிரியனாயிருக்கிறேன். * ஆகையால் நான் ஆநந்தசொரூபன். ஜாக்கிரம் எனக்குப் பிரியமன்று. ஆகையால் இது து

---

* எந்தெந்த ஜாக்கிரமுதலிய காலங்கள் ஆன்மாவினிடத்தில் தோற்றுகின்றனவோ, அந்தந்தக் காலங்கள் துக்கவடிவமாயினும், அத்தியாசத்தால் அவை ஆன்மாவிற்குச் சிதாபாசன்வாயிலாகப் பிரியமாகத் தோற்றுகின்றன. அப்போது அன்னியகாலங்கள் பிரியமாகத் தோற்றுகிறதில்லை. ஆகையால் எல்லாக்காலங்களிலும் வியபிசாரமு (மாறுதலு) டைய பிரியம் இருக்கின்றது. ஆனால் இவைகள் வாஸ்தவமாகத்துக்கவடிவமேயாம். ஆனால் ஆன்மாவி (தன்) னிடத்து அவ்வியபிசாரப் (எப்போதும்) பிரியமிருக்கின்றது. ஆகையால் ஆன்மா ஆநந்தவடிவமாம்.

க்கமாம். இவை முதலிய மற்றெல்லாக் காலங்களையும் முன்போல அறிக. இவ்வாறு ஆநந்த துக்கங்களின் நிச்சயத்தில் அந்நுவயவெதிரேகயுக்திகளை அறிக.

வினா :— நான் பரமப்பிரியனாயிருக்கிறேனென்றறிவதெப்படி ?

விடை :— திருஷ்டாந்தம்: புத்திரனது மித்திர (சிநேகித) னிடத்திலிருக்கும் பிரியம், புத்திரன் பொருட்டாம். புத்திரனிடத்திலுள்ள பிரியம் அவனது மித்திரன் பொருட்டன்று. ஆகையால் புத்திரன் அதிகப்பிரியன். அதுபோல திரவியம் புத்திரன்முதலியவற்றிலுள்ள பிரியம் ஆன்மாவின் பொருட்டாம். ஆன்மாவினிடத்திலுள்ள பிரியம், திரவிய புத்திராதிகளின் பொருட்டன்று. ஆகையால் ஆன்மா அதிகப்பிரியன். இவ்வாறு நான் பரமப்பிரியனாயிருக்கிறேனென்றறிக.

வினு :— பிரியத்தின் எற்றத்தாழ்வுக ளை அறிவதெப்படி ?

விடை:—க. ஜாக்கிரத்தில் எல்லாவ ற்றிலும் பிரியமுள்ளது திரவியம். ஏ னெனின், தனத்தின் பொருட்டுப் புருஷ ன் தன் தேசத்தைவிட்டு அன்னிய தேச த்திற்குப்போய், அநேக நீசகன்மங்(தாழ் ந்தவேலை) களைச் செய்கின்றமையால், தி ரவியம் பிரியமுள்ளது.

உ. திரவியத்தினும் புத்திரன் பிரிய ன். ஏனெனின் புத்திரன் துற்செய்கை யினுல், இராஜக்கிரகத்தில் பந்தனத்தை அடைந்தகாலத்து, அவனைத் தனத்தைக் கொடுத்து விடுவிக்கின்றமையால், தனத் தினும் புத்திரன் பிரியன்.

ங. புத்திரனினும் சரீரம் பிரியமு ள்ளது. ஏனெனின், பஞ்சமுண்டாகும் காலத்து புத்திரனை விற்றுச் சரீரஙிருவா

களுஞ் செய்கின்றமையால், புத்திரனிலும் சரீரம் பிரியமுள்ளது.

ச. சரீரத்தினும் இந்திரியம் பிரியமுள்ளது. ஏனெனின், யாரேனும் அடிக்க வருங்காலத்து இந்திரியங்களை மறைத்துக்கொண்டு, "என் சரீரத்திலடி; கண் காது மூக்கு முகங்களில் அடிக்காதே' யென்று சொல்லுகிறான். ஆகையால் சரீரத்தினும் இந்திரியம் பிரியமுள்ளது.

ரு. இந்திரியத்தினும் பிராணன் பிரியமுள்ளது. ஏனெனின், ஒருவனுக்கு,துற்செய்கைசெய்ததினால் "இவன் பிராணனைவாங்குக" என்று இராஜாவின் உத்திரவு உண்டாகுமாயின், அப்போது அவன் "என் திரவியம் புத்திரன் மனைவி வீடுமுதலியவற்றைக்கொள்ளையிடுங்கள் ;என்பிராணனை வாங்காதீர்கள்" என்று சொல்லுகிறான். அப்படிச் சொல்லியும் பிராணனை

வாங்கும்படியாகவே இராஜன் ஆஜ்ஞாபிடு வாரையின், அப்போது "என் காது மூக்கு க் கை கால்களை அறுத்துவிடுங்கள்; ஆனல் என்பிராணனை வாங்காதீர்கள்" என்றுசொல்லுகிறான். ஆகையால் இந்திரியத்திலும் பிராணன் பிரியமுள்ளது.

௬. பிராணனினும் ஆன்மா பிரியமுள்ளது. ஏனெனின், ஒருவனுக்கு மிகுந்த வியாதியால் வருத்தம் வந்தகாலத்து "என் பிராணன் நீங்குமாயின் நான் சுகமுடையவனாவேன்" என்று சொல்லுகிறான். ஆகையால் பிராணனிலும் ஆன்மா பிரியமுள்ளது. இவ்வாறு பிரியத்தின் ஏற்றத்தாழ்வை அறிக.

எட்டாங்கலை முற்றிற்று.

---

## ஒன்பதாம்கலை.

## அவாச்சிய சித்தாந்தவர்ணநம்.

——:o:——

வினா :— * பிரமான்மா வாக்கிற்கு விஷயமாகாதெனின், அது எப்படிச் சச்சிதாநந்தமுதலிய விசேஷணங்களாற் சொல்லப்படும் ?

விடை :— பிரமான்மாவிற்குச் சில † விதேயவிசேஷணங்களாயும் சில ‡ நிஷேத்திய விசேஷணங்களாயுமிருக்கி

* இங்கே பிரமான்மா என்பது பண்புத்தொகை.

† "சத்திருக்கிறது", "சித்திருக்கிறது" என்றிவ்வாறு விதிமுகமாகப் பிரமத்தை அறிவிக்கும் பதம், விதேயவிசேஷணமாம்.

‡ "அநந்தம் (அந்தமுடையதன்று)" "அகண்டம் (கண்டமுடையதன்று)" என்றிவ்வாறு நிஷேதமுகத்தால் பிரமத்தை அறிவிக்கும் பதம், நிஷேத்திய விசேஷணமாம்.

ன்றன. அவற்றுள் விதேயவிசேஷணா ங்களாகிய சத்துமுதலியன, பிரபஞ்சத் தை நிஷேதித்து எஞ்சி நிற்கும் பிரமத் தை * இலக்ஷணையினாலே நேரே அறிவி

---

* மாயையிலும் பிரபஞ்சத்திலும் ஆபேக்ஷி க சத்தியத்துவமும், பிரமத்தில் நிரபேக்ஷிக ச த்தியத்துவமு முண்டு. இரண்டும் சேர்ந்து 'ச த்து' என்னும் பதத்திற்கு வாச்சியமாம். மா யையின் சத்தியத்துவத்தை விட்டு பிரமமா த்திரத்தின் சத்தியத்துவம், இலக்ஷியமாம். அ ந்தக்கரணவிருத்திஞானம் சேதனஞானம் என் னுமிரண்டும் சேர்ந்து 'சித்' தென்னும் பதத்திற்கு வாச்சியமாம். விருத்திஞானத்தை விட்டு சேதனமாத்திரமாகிய ஞானம் இலக்ஷி யமாம். விஷயாநந்தம் வாசனாநந்தம் பிரமாந ந்தம் என்னும் இரண்டும் சேர்ந்து 'ஆந ந்தம்' என்னும் பதத்திற்கு வாச்சியமாம், இர ண்டையும் விட்டு பிரமாநந்தம் மாத்திரம் இல க்ஷியமாம். மாயையிலும் அதன் காரியமாகிய

க்கின்றன. நிஷேத்திய விசேஷணங்க

---

ஆகாசாதிகளிலும் ஆபேக்ஷிக வியாபகத்துவ மும், பிரமத்தில் (ஆன்மாவில்) நிரபேக்ஷிக வியாபகத்துவமு முண்டு. இரண்டும் சேர்ந்து 'பிரமம் (விபு)' என்னும் பதத்திற்கு வாச்சியமாம். பிரமம் மாத்திரம் இலக்ஷியமாம். ஆபாசனோடுகூடிய புத்தியில் ஆபேட்சிக சொப்பிரகாசத்தன்மையும், சேதனத்தில் நிரபேக்ஷிக சொப்பிரகாசத்தன்மையு முண்டு. இரண்டும் சேர்ந்து 'சுயம் பிரகாசம்' என்னும் பதத்திற்கு வாச்சியமாம். சேதனம் மாத்திரம் இலக்ஷியமாம். இரச்சுமுதலியவற்றில் ஆபேக்ஷிக அவிகாரித்துவமும், சேதனத்தில் நிரபேக்ஷிக அவிகாரித்துவமு முண்டு. இவ்விரண்டும் சேர்ந்து 'கூடஸ்த' மென்னும் பதத்திற்கு வாச்சியமாம். கேவலசேதனம் இலட்சியமாம். இலௌகிக சாட்சியும் மாயைஅவித்தைகளின் உபகிதசேதனமு (பிரமமும்ஆன்மாவு) மாகிய இரண்டும் சேர்ந்து 'சாட்சி' என்னும் பதத்திற்கு வாச்சியமாம். மாயை அவித்தைகளின் உ

ளாகிய அநந்தாதிகள் சாக்ஷாத் (நேரே)

---

பகிதசேதனமாத்திரம் இலக்ஷியமாம். சாபா
ச அந்தக்கரண விருத்தியெனும் திருஷ்டி
யோடு விசிஷ்ட (கூடிய) சேதனம், ‘திரு
ஷ்டா’ என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.
சேதனபாகம் மாத்திரம் இலக்ஷியமாம். யா
கத்தின் உபதிருஷ்டாவும் பிரத்தியகான்மா
வும் ஆகிய இரண்டும்சேர்ந்து ‘உபதிருஷ்டா’
என்னும் பதத்திற்கு வாச்சியாம். பிரத்தியகா
ன்மா மாத்திரம் இலட்சியமாம். உலகத்திலு
ள்ள ஏகாங்கியாகிய புருஷனும் சஜாதீய
பேதமில்லாத பிரமமும் ‘ஏகம்’ என்னும்
பதத்திற்கு வாச்சியமாம். பிரமம் மாத்திரம் இ
லட்சியமாம். இப்படியே சொல்லப்படாத ம
ற்ற விதேய விசேஷணங்களிலும் அறிந்து
கொள்ளுக. இவ்வாறு பிரபஞ்சத்தின் ‘அச
த்து’ முதலிய விசேஷணங்களை நிஷேதிக்கு
ம் சத்துமுதலிய பதங்களின் அர்த்தத்திலும்
பாகத்தியாக இலட்சணையின் பிரவிருத்தி யிரு
க்கின்றது.

பிரபஞ்சத்தையே நிஷேதிக்கின்றன. அ தற்கு விலட்சணமாகிய பிரமான்மா அர் த்தத்தினாலே சித்திக்கின்றது. அதனால் பிரமான்மா அவாச்சியமாயிருத்தலால், எந்த விசேஷணத்தினாலும் சொல்லப்படு கிறதில்லை.

வினா :—சத்துமுதலிய விதேய விசே ஷணங்கள் எப்படிப் பிரபஞ்சத்தை நி ஷேதித்து மிஞ்சிய பிரமத்தை அறிவி க்கின்றன ?

விடை :—க. சத்தென்பதனால் அச த்து நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சத்துரூபம் இலக்ஷணையினாலே சித்திக்கி ன்றது.

உ. சித்தென்பதனால் ஜடம் நிஷேதி க்கப்பட, மிஞ்சியிருக்கும் சித்துரூபம் இ லக்ஷணையால் சித்திக்கின்றது.

ங. ஆநந்தம் என்பதனால் துக்கம் நி

ஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் ஆநந்த (சுக) வடிவம் இலக்ஷணையினால் சித்திக்கின்றது.

ச. பிரமமென்பதனால் பரிச்சின்னம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் வியாபகம் இலட்சணையினால் சித்திக்கின்றது.

ரு. சுயம்பிரகாசமென்பதனால் அன்னியப் பிரகாசம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சுயம்பிரகாசம் இலக்ஷணையால் சித்திக்கின்றது.

சா. கூடஸ்தமென (அவிகாரியெ) ன்பதனால் விகாரம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் நிருவிகாரி இலக்ஷணையினாலே சித்திக்கின்றது.

எ—௯. சாட்சி, திருஷ்டா, உபதிருஷ்டா என்பவற்றால் சாட்சிய திருசிய உபதிருசியங் (சமீபத்திலுள்ள வஸ்துக்) கள் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சாட்சி

திருஷ்டா உபதிருஷ்டாவென்பவை இல க்ஷணையினுலே சித்திக்கின்றன.

௰. ஏகம் என்பதனுல் நாநாவென்பது நிஷேதிக்கப்பட, மிஞ்சிய ஏகமென்பது இலக்ஷணையினுலே சித்திக்கின்றது. இவ்வாறு மற்ற விதேய விசேஷணங்களிலு மறிக.

வினு :—அநந்தாதி நிஷேத்தியவிசேஷணங்கள் பிரபஞ்சத்தை எப்படி நிஷேதிக்கின்றன ?

விடை :—அநந்தம் என்பதனுல் தேசகாலவஸ்துக்களாலாகிய பரிச்சேதத்தின் நிஷேதமும், அகண்டம் என்பதனுல் ஐந்துவிதமாகிய அல்லது மூன்றுவிதமாகிய பேதங்களின் நிஷேதமும், அஜன்மமென்பதனுல் ஜன்மத்தின் நிஷேதமும் உண்டாம். இவ்வாறு மற்ற நிஷேத்திய விசேஷணங்களிலுமறிக.

வினு :—இவ்விசேஷணங்களுக்கு இப்படிப் பொருள்செய்வதாற் பிரயோஜனமென்ன ?

விடை :—இவ்விசேஷணங்களுக்கு இப்படிப் பொருள்செய்வதின் பிரயோசனம், சேதனம் மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமாகாதென்று சொல்லும் சுருதியின் அர்த்தத்திற்கு விரோதமுண்டாகாமையாம். குணம் தொழில் ஜாதி சம்பந்தமுதலிய மனோவாக்குகளின் பிரவிருத்திக்கு ஏதுவாகிய தர்மங்கள் பிரமத்திலில்லை. ஆனுல் பிரமம் தர்மமில்லாததாயிருத்தலால் நிர்விசேஷமாம். ஆகையால் சுருதியும் அதை மனோவாக்குகளுக்கு விஷயமாகாததெனக் கூறுகின்றது.

அல்லது எது பேசவேண்டியதோ, அது துவிதத்தினு லுண்டாகிறது ; அத்துவிதத்தினு லுண்டாகிறதில்லை. ஆகையா

ல் இந்த விசேஷணங்களுக்கு இப்படி அர்த்தஞ் செய்வதால் சுருதிவிருத்தமாகிய துவிதம் சித்திக்கிறதில்லை ; அன்றியும் அத்துவிதமும் சுகமாக அறியக்கூடியதாகின்றது.

ஒன்பதாம்கலை முற்றிற்று.

---

## பத்தாம்கலை.

—:o:—

### சாமானியவிசேஷசைதன்னியவர்ணநம்.

வினா :—விசேஷசைதன்னியமென்பது யாது ?

விடை :— அந்தக்கரணத்திலும் அந்தக்கரணவிருத்தியிலுமுள்ள சாமானியசைதன்னியமாகிய பிரமத்தின் பிரதிபிம்பரூப சிதாபாசன், * விசேஷசைதன்னியம்.

---

* இங்கேசொல்லப்பட்டிருக்கின்ற சிதாபா

வினு :—சிதாபாசனிலட்சணம் யாது?

விடை :—சைதன்னிய (பிரம) த்தின் இலட்சணமில்லாததாய்ச் சைதன்னியத்தைப்போல தோற்றுவது, சிதாபாசனெனப்படும்.

வினு :—இந்தச் சிதாபாசன் எதனுல் விசேஷசைதன்னிய மெனப்படுகின்றது.

விடை :—அற்பதேசத்திலும் அற்பகாலத்திலுமிருக்கும் வஸ்து, * விசேஷமெனப்படும். சிதாபாசன் அந்தக்கரணதேசத்திலும், ஜாக்கிரசொப்பனகாலங்களிலும் அல்லது அஞ்ஞானகாலத்திலுமிருத்தலால், விசேஷசைதன்னியமெனப்படுகின்றது.

---

சனுகிய விசேஷசைதன்னியம், ஆருவதுகலையிற் சொல்லப்பட்ட கற்பிதவிசேஷ அம்சத்திலடங்கும்.

* அதிஷ்டானம் அத்தியஸ்தம் என்னும் பே

வினு :—விசேஷசைதன்னியத்தில் திருஷ்டாந்தம் யாது ?

விடை :—திருஷ்டாந்தம் :— சூரியனது பிரகாசம் எங்கும் சமானமாயினும், பிரதிபிம்பம் எங்கும் உண்டாகிறதில்லை. எங்கே ஜலம் அல்லது கண்ணுடியாகிய உபாதி இருக்கின்றதோ, அங்கே பிரதிபிம்பரூபமாக விசேஷம் தோற்றுகிறது.

அல்லது சூரியனது பிரகாசம் எங்கும்

---

தத்தால் விசேஷமிரண்டுவகையாம் அவற்றுள் எது பிராந்திகாலத்தில் தோற்றுகிறதில்லையோ, எது தோற்றுவதால் பிராந்தி நிவர்த்தியாகின்றதோ, அது அதிஷ்டானமாகிய விசேஷமாம். எது பிராந்திகாலத்தில் தோற்றி, அதிஷ்டானத்தை அறியுங்காலத்துத் தோற்றுகிறதில்லையோ, அது அத்தியஸ்த விசேஷமாம். இதனையே கற்பிதவிசேஷமென்றும் கூறுவர்.

சமானமாயிருக்கினும், துணி பஞ்சுமுத
லியவற்றை எரிக்கிறதில்லை. எங்கே சூ
ரியகாந்தக்கல்லாகிய உபாதியிருக்கின்ற
தோ, அங்கே அக்கினிரூபமாக விசேஷமு
ண்டாய்த், துணி பஞ்சுமுதலியவற்றை எ
ரிக்கின்றது. அவற்றுள் சாமானியரூபமா
னது எங்கும் எப்படியோ அப்படி (உள்
ளபடி)யே யிருத்தலால் எதார்த்தமா (வெ
குகாலநிலையுடையதா) ம். உபாதியினல்
தோற்றும் விசேஷரூபம் வியபிசாரமு
டையதாயிருத்தலால் அயதார்த்தமா (அ
ற்பகாலநிலையுடையதா) ம்.

அதுபோல அஸ்தி யாதிப் பிரியரூபமா
யிருக்கிற சாமானிய சைதன்னியம் எங்கு
ம் சமானமாயிருக்கினும், அதனல் பேசுத
ல் நடத்தல் முதலிய விசேஷ விவகாரங்
கள் உண்டாகாது. எங்கே அந்தக்கர
ணமாகிய உபாதியிருக்கிறதோ, அங்கே

சிதாபாசரூபமாக விசேஷசைதன்னிய முண்டாய்ப், பேசுதல், நடத்தல், கருத் திருத்துவ போக்திருத்துவம், பரலோக இவ் வுலகங்களுக்குப் போகுதல் வரு தல், முதலிய விசேஷ விவகாரமுண்டா கின்றது. அவற்றுள் சாமானியசைத ன்னியமாகிய பிரமம் சத்தியம். உபாதி யினால் தோற்றும் விசேஷசைதன்னிய மாகிய சிதாபாசன், மித்தை. அதுபோ லவே புண்ணியபாவங்களின் கருத்திரு த்துவம், சுகதுக்கங்களின் போக்திரு த்துவம், பரலோகஇகலோகங்களுக்குப் போகுதல் வருதல், ஜனனமரணம், எண்ப த்துநான்கிலட்சம் யோனிகளை அடைதல் முதலிய சமுசாரதர்மங்களும், சிதாபாச னுடையனவாயிருத்தலால் மித்தையாம்.

வினு :—விசேஷசைதன்னியத்தை அ றிவதால் நிச்சயிப்பது யாது ?

விடை :— விசேஷசைதன்னியமாகிய சிதாபாசனும் அவனுடைய தர்மமும் நானல்ல ; என்னுடையவுமல்ல ; ஆனவி வை என்னிடத்திற் கற்பிதங்களாம். இவற்றிற் கதிஷ்டான சாமானிய சைதன்னியமாகிய நான் இவற்றினும் வேறாயிருக்கிறேன் என்று நிச்சயிக்கவேண்டும்.

வினு :— சாமானியசைதன்னியமென்பது யாது ?

விடை :— ஆகாயத்தைப்போல எங்கும் பரிபூரணமாய்ச், சர்வநாமரூபங்களுக்கும் அதிஷ்டானமாய், அஸ்தி பாதிப் பிரியரூபமாய், நிர்விகாரமாயிருக்கும் பிரமம், சாமானியசைதன்னியம்.

வினு :—பிரமம் எதனுல் சாமானிய சைதன்னியமெனப்படுகின்றது ?

விடை :— அதிகதேசத்திலும் அதிக காலத்திலும் இருக்கும் வஸ்து சாமானிய

மெனப்படும். பிரமம் புத்திகற்பிதமாகிய சகலதேசத்திலும் சகலகாலத்தினும் வியாபகமாயிருத்தலால், சாமானியசைதன்னியமெனப்படுகின்றது.

வினா :—சாமானிய சைதன்னியத்தை அறிவதில் திருஷ்டாந்தம் யாது ?

விடை :—திருஷ்டாந்தம் :—ஒரு இரஜ்ஜுவில் பலபுருஷர்களுக்கு, ஒருவனுக்குத் தண்டமாகவும், ஒருவனுக்குச் சர்ப்பமாகவும், ஒருவனுக்குப் பிருதிவியின் இரேகையாகவும், ஒருவனுக்கு ஜலதாரையாகவும் பிராந்தி உண்டாகின்றது. அந்தப் பிராந்தியில் இரண்டமிசங்களிருக்கின்றன. ஒன்று சாமானியமாகிய இதுவெனும் அமிசம். மற்றது சர்ப்பமுதலிய விசேஷ அமிசம். அவற்றுள் "இது தண்டம், இது சர்ப்பம், இது பிருதிவியின் இரேகை, இது ஜலதாரை" என்

றிவ்வாறு சர்ப்பமுதலிய விசேஷ அமிசங்களில் சாமானியமாகிய இதுவெனும் அமிசம், எங்கும் வியாபகமாயிருக்கிறது. அது இரஜ்ஜுவின் சொரூபமாம். அந்தச்சாமானிய இதுவெனும் அமிசம் பிராந்திகாலத்திலும் தோற்றுகிறது; பிராந்தி நீங்கியகாலத்திலும் "இது இரஜ்ஜு" என்பதாகத் தோற்றுகின்றது. ஆகையால் அவ்வியபிசாரியா (பிறழ்ச்சியில்லாததா) யிருத்தலால் சத்தியமாம். பரஸ்பர வியபிசாரியாகிய சர்ப்பமுதலிய விசேஷ அமிசங்கள் கற்பிதமாம்.

சித்தாந்தம் :—

அதுபோல சகல பதார்த்தங்களிலும் க. அஸ்தி. உ. பாதி. ந. பிரியம். ச. நாமம். ரு. ரூபம் என்னும் ஐந்தமிசங்களுண்டு.

(க) "குடமிருக்கிறது" என்பது அ

ஸ்தி (சத்து).

(உ) "குடம் விளங்குகிறது" என்பது பாதி (சித்து).

(ந) "குடம் பிரியமாயிருக்கிறது." ஏனெனின், குடம் நீர் முகத்தற்கு (மொள்ளுதற்கு) உபயோகமுள்ளதாயிருத்தலால் பிரிய (ஆநந்த) மாம். 'பாம்பு சிங்கமுதலியனவும் பெண் பாம்பு பெண் சிங்கமுதலியவற்றிற்குப் பிரியமாம்

(ச) "குடம்" என்னும் மூன்றெழுத்து நாமம்.

(ரு) "பருத்த உருண்டை வயிறுடைமை" குடத்தின் ரூபம் (வடிவம்). இப்படியே குடமுதலிய சகலபூதங்களிலும் பூதங்களின் காரியங்களிலும் அறிக. இவ்வாறு பாகிய (வெளிப்) பதார்த்தங்களில் ஐந்து அமிசங்கள் காட்டப்பட்டன. அதுபோல

க ஆந்தர (உள்) தேகமுதலியவற்றில்—

(அ) "நானிருக்கிறேன்" என்பது அஸ்தி.

(பா) "நான் அறிகிறேன்" என்பது பாதி.

(பி) "எனக்கு நானே பிரியனுயிருக்கிறேன்" என்பது பிரியம்.

(நா) தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், அஞ்ஞானம், இவற்றின் தர்மம் என்பவை நாமம்.

(ரூ) இவற்றிற்கு "உரிய வடிவம்' ரூபம்.

இது ஆந்தரபதார்த்தங்களில் ஐந்து அம்சங்களைக் காட்டியதாம்.

உ. இந்தச் சகல நாமரூபங்களையும் விடுவதனுல்—

(அ) "பிருதிவி யிருக்கிறது."

(பா) "பிருதிவி விளங்குகிறது."

(பி) "பிருதிவி பிரியமாயிருக்கிறது." ஏனென்றால், பிருதிவி யிருத்தற்கு இடங்கொடுத்தலால்.

(நா) "பிருதிவி" என்னும் நாமமிருக்கிறது.

(ரூ) "கந்தகுணத்தோடுகூடிய" ரூபமிருக்கிறது.

ந. பிருதிவியின் நாமரூபத்தை விடுவதனால்—

(அ) "ஜலமிருக்கிறது."

(பா) ஜலம் விளங்குகிறது."

(பி) "ஜலம் பிரியமாயிருக்கிறது." ஏனெனின், ஜலம் தாகத்தை நீக்குதலால்,

(நா) "ஜலம்" என்னும் நாமமிருக்கிறது.

(ரு) "சீதமாகிய பரிசகுணத்தோடு கூடிய" ரூபமிருக்கிறது.

ச. ஜலத்தின் நாமரூபத்தை விடுவதனல்—

(அ) "அக்கினி இருக்கிறது."

(பா) "அக்கினி விளங்குகிறது."

(பி) "அக்கினி பிரியமாயிருக்கிறது." ஏனெனின், குளிரையும் இருளையும் போக்குதலால்.

(நா) "அக்கினி" என்னும் பெயரிருக்கிறது.

(ரு) "உஷ்ணமாகிய பரிச குணத்தோடுகூடிய" ரூபமிருக்கிறது.

ரு. அக்கினியின் நாமரூபங்களை விடுவதனல்—

(அ) "வாயு இருக்கிறது."

(பா) "வாயு விளங்குகிறது."

(பி) "வாயு பிரியமாயிருக்கிறது."

ஏனெனின், வாயு வியர்வையை நீக்குத லால்.

(நா) "வாயு" என்னும் நாமமிருக்கி றது.

(ரூ) "உருவமில்லாத பரிசகுணத் தோடுகூடிய" ரூபமிருக்கிறது.

சு. வாயுவின் நாமரூபங்களை விடுவத னால்—

(அ) "ஆகாயமிருக்கிறது."

(பா) "ஆகாயம் விளங்குகிறது."

(பி) "ஆகாயம் பிரியமாயிருக்கிற து." ஏனெனின், ஆகாயம் இருத்தற் கும் திரும்புதற்கும் இடங்கொடுக்கிறது.

(நா) "ஆகாயம்" என்னும் நாமமிரு க்கிறது.

(ரூ) "சப்தகுணத்தோடு கூடிய" ரூபமிருக்கிறது.

எ. ஆகாயத்தின் நாமரூபங்களை விடு

வதனால்—

(அ) "பிறகு இன்னது இருக்கிறதெ ன எனக்குத் தெரியவில்லை" என்னும் அஞ்ஞானமிருக்கிறது.

(பா) அந்த "அஞ்ஞாணம் விளங்கு கிறது."

(பி) "அஞ்ஞானம் பிரியமாயிருக்கி றது." ஏனெனின், அஞ்ஞானிகளுக்கு ப் பிரியமாயிருக்கின்றது. அன்றியும் பி ரபஞ்சத்திற்குக் காரணமாயிருத்தலால், ஜீவர்களின் நிருவாகத்தைச் செய்கின்ற து.

(நா) "அஞ்ஞானம்" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "ஆவரணம் விட்சேபமென்னும் சத்திகளையுடைய அநாதி அநிர்வசனீய பாவரூப (உண்மைவடிவ)" மென்னும் ரூபமிருக்கின்றது.

அ. அஞ்ஞானத்தின் நாமரூபங்களை விடுவதனால்—

(அ) "ஒன்றுமில்லை" எனத்தோற்றுவதாகிய சகல பதார்த்தங்களின் அபாவமிருக்கின்றது.

(பா) "அபாவம் தோற்றுகிறது."

(பி) "அபாவம் சூனியத்தியானிகளுக்குப் பிரியமாயிருக்கின்றது."

(நா) இதற்கு "அபாவம்" என்னும் நாமமிருக்கிறது.

(ரூ) "சகல வஸ்துக்களின் அபாவம் (நிஷேதமுகப் பிரதீதிக்கு விஷயம்)" என்னும் ரூபமிருக்கிறது.

கூ. அபாவத்தின் நாமரூபங்களை விடுவதனால்—

(அ) அபாவத்தன்மையின் சொரூபமான அதிஷ்டானமாகிய சத்வஸ்துவே மிஞ்சியிருக்கின்றது.

(பா) அது அபாவத்தின் அபாவத்த ன்மையைப் பிரகாசித்தலால் சித்தாம்.

(பி) துக்கத்திற்கு வேறாயிருத்தலால் ஆநந்தமாம். இவ்வாறு சர்வநாமரூபங் களிலும் அநுசூத மாயிருக்கும் அவ்வியபிசாரியாகி ர நாமரூபங்களுக்கதிஷ்டானப் பிரமம், * சாமானிய சைதன்னியமாம். குடத்தி

---

* சுழுத்தி மூர்ச்சை சமாதிகளையறிவது, **சாமானியசைதன்னியம்.** "கடத்தை நானறிகிறேன்" என்பதாகப் பிரமாதா, பிரமாணம், பிரமேயமென்னும் திரிபுடியை அறியும் சாட்சி, **சாமானியசைதன்னியம்.** ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளின் சந்திகளை அறிவது, **சாமானியசைதன்னியம்.** அதுபோலவே விருத்திகளின் சந்திகளையறிவது, **சாமானியசைதன்னியம்.** அங்குஷ்டத்தின் அக்கிர (நுனிப்) பாகத்தை யறிவது, **சாமானியசைதன்னியம்.**

ன் நாமரூபம் படத்தில் இல்லை; படத்தி
ன் நாமரூபம் குடத்தில் இல்லை. அதனு
ல் பரஸ்பர *வியபிசாரமுடைய இந்த
நாமரூபங்கள் மித்தையாம். இது சாமா
ணிய சைதன்னியத்தை அறிவதில் திரு
ஷ்டாந்தமாம்.

---

தேசாந்திரத்தில் விருத்தி சென்றிருக்குங்
காலத்து அதன் மத்தியபாகத்தை யறிவது,
**சாமாணியசைதன்னியம்.** சூரியச
ந்திரவடிவமாக விருத்தி யுண்டாகுங்காலத்து
அதன் மத்தியபாகத்தை யறிவது, **சாமாணி
யசைதன்னியம்.** "மேரு எனக்கு
த்தெரியவில்லை" என அஞ்ஞான விசிஷ்ட
மேருவையறிவது, **சாமாணியசைதன்
னியம்.**

* எந்தப் பதார்த்தம் ஓரிடத்திலிருந்து ஓரிட
த்திலில்லாதிருக்கின்றதோ, அது வியபிசார
மு (மாறுதலு) டையதாம்.

வி௵ :—முற்கூறிய சாமானிய சைதன்னியமாகிய பிரமத்திற்கு எப்படி எல்லாவற்றினும் அதிக சூக்குமத்தன்மையும் வியாபகத்தன்மையு மிருக்கின்றது ?

விடை :—யாது யாது காரியமோ, அது ஸ்தூலமும் பரிச்சின்னமுமாம் ; யாது யாது காரணமோ, அது சூட்சுமமும் வியாபகமுமா (அதிகதேசத்திலுள்ளதுமா) மென்பது நியமம். பிரமம் எல்லாவற்றிற்கும் காரணமாயிருத்தலால், எல்லாவற்றினும் அதிக சூட்சுமமும் வியாபகமுமா மென்பது இனிக் காட்டப்படுகின்றது.

க. சமுத்திரஜலத்தினின்றும் கடினமாகிய நுரையும் உப்புமுண்டாகின்றது. இதனுல் பிருதிவி ஜலத்தின் காரியமென அறியப்படுகின்றது. ஆகையால் பிருதிவியினும் ஜலம் சூட்சுமமும் வியாபகமுமாம்.

அல்லது பிருதிவியின் அவயவங்களாகிய கல்முதலியவற்றை வஸ்திரத்திற் போட்டால் தங்குகிறது. ஜலம் வஸ்திரத்தில் தங்குகிறதில்லை. அன்றியும் பிருதிவியில் எங்கெங்கே வெட்டிப்பார்த்தாலும் அங்கங்கே ஜலம் வெளிப்படுகின்றது. புராணங்களிலும் பிருதிவியிலும் ஜலம் பத்துமடங்கு வியாபகமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனாலும் ஜலம் பிருதிவியினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

உ. அதுபோல, அக்கினிமுதலியவற்றின் வெப்பத்தால் சரீரத்தில் வியர்வையும் மழையுமுண்டாகின்றது. இதனால் ஜலம் அக்கினியின் காரியமென்றறியப்படுகின்றது. ஆகையால் ஜலத்தினும் அக்கினி சூட்சுமமும் வியாபகமுமாம்.

அல்லது ஜலம் வஸ்திரத்தில் தங்குகிறதில்லை; குடத்தில் தங்குகின்றது. சூரி

யன்முதலியவற்றின் பிரகாசம் குடத்தி லும் தங்குகிறதில்லை. புராணங்களில் ஜலத்தினும் அக்கினி பத்துமடங்கு வியா பகமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இ தனுலும் அக்கினி ஜலத்தினும் வியாபக மும் சூட்சுமமுமாம்.

ந. அதுபோல, அக்கினியின் உற்ப த்தியும் நாசமும் காற்றின் ஆதீன (வச) மாம். இதனல் தேயு, வாயுவின் காரிய மென்றறியப்படுகின்றது. ஆகையால் அக்கினியினும் வாயு சூட்சுமமும் வியாப கமுமாம்.

அல்லது சூரியன்முதலியவற்றின் பிர காசம், குடமுதலிய பாத்திரங்களில் த ங்குகிறதில்லை. நேத்திரத்தினுல் அறிய ப்படுகின்றது. வாயுவோ நேத்திரத்தின லுமறியப்படுகிறதில்லை. புராணங்களில் தேயுவினும் வாயு பத்துமடங்கதிகமெனக்

கூறப்பட்டிருக்கின்றது. இதனாலும் வாயு அக்கினியினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

ச. அதுபோல, வாயுவின் உற்பத்தி திதி இலயங்கள் ஆகாயத்தி (வெளியி) லேயே உண்டாகின்றன. இதனால் வாயு ஆகாயத்தின் காரியமென அறியப்படுகின்றது. ஆகையால் வாயுவினும் ஆகாயம் சூட்சுமமும் வியாபகமுமாம்.

அல்லது வாயு நேத்திரத்தினலறியப்படுகிறதில்லை. ஆனால் துவக்கினால் பரிச குணவாயிலாகக் கிரகிக்கப்படுகின்றது. ஆகாயமோ துவக்கினாலும் கிரகிக்கப்படுகிறதில்லை. புராணங்களில் வாயுவினும் ஆகாயம் பத்துமடங்கு வியாபகமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனாலும் அது வாயுவினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

ரு. அதுபோல, "ஆகாயத்திற்குமேல் என்னயிருக்கும்" என்று விசாரிக்க, "எனக்கு ஒன்றும் தெரியவில்லை" எனப் புத்தியின் மழுக்கத்திற்கு ஆசிரய(விஷய)மாகிய அஞ்ஞானம் தோற்றுகிறது. இதனுல் ஆகாயம் அஞ்ஞானத்தின் காரியமென்றறியப்படுகின்றது. ஆகையால் அந்த அஞ்ஞானம் ஆகாயத்தினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

அல்லது ஆகாயம் துவக்கினுல் கிரகிக்கப்படுகிறதில்லை. ஆனுல் மனதினுல் கிரகிக்கப்படுகின்றது. சாஸ்திரங்களில் அஞ்ஞானம் ஆகாயத்தினும் அநேகமடங்கதிகமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இதனுலும் அது ஆகாயத்தினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

சா. அதுபோல, "எனக்குத் தெரியவில்லை என்னுமநுபவத்திற்கு விஷயமாகி

ய அஞ்ஞானத்தின் பிரகாசம், அறிவதா கிய சேதனத்தாலுண்டாகின்றது. " அஞ்ஞானமிருக்கிறது ; விளங்குகிறது ; அஞ்ஞானிகளுக்குப் பிரியமாயிருக்கின்றது." என்றிவ்வாறு அஞ்ஞானத்தில் அநுசூதமாக அஸ்தி பாதிப் பிரியமாகிய பிரமசேதனம் விளங்குகின்றது. ஆகையால் அஞ்ஞானம் பிரமசேதனத்தின் ஆசிரிதமாம். அதனால் பிரமசேதனம் அஞ்ஞானத்தினும் சூட்சுமமும் வியாபகமுமாம்.

அல்லது அஞ்ஞானம் மனதினால் கிரகிக்கப்படுகிறதில்லை. ஆனால் " எனக்குத் தெரியவில்லை" யென்னும் அநுபவமாகிய இலிங்கத்தால் அதன் அனுமானமுண்டாகின்றது. பிரமசேதனம் சுயம்பிரகாச வடிவமாயிருத்தலால் ஒரு பிரமாணத்திற்கும் விஷயமாகாது. சரீரத்திலுள்ள மச்சம்போல பிரமத்தின் ஏகதேசத்தில்

அஞ்ஞானமிருக்கின்றது. மிஞ்சியிருக்கும் பிரமம் சுத்தசொப்பிரகாசமென்று சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது. இதனுலும‌து சூட்சுமமும் வியாபகமுமாம். இவ்வாறு சாமானியசைதன்னியமாகிய பிரமத்திற்குச் சகலபிரபஞ்சத்தினும் அதிகசூட்சுமத்தன்மையும் வியாபகத்தன்மையுமிருக்கின்றது.

வினு :— சாமானியசைதன்னியத்தை அறிதலால் நிச்சயம்செய்யவேண்டியது யாது ?

விடை :—அஸ்தி பாதி பிரியரூப சாமானியசைதன்னியமாகிய பிரமமே நான் ; நானே அந்த அஸ்தி பாதி பிரியரூப சாமானியசைதன்னியமாகிய பிரமம்; நாமரூபப்பிரபஞ்சம் என்னிடத்திற் கற்பிதம் என்று நிச்சயம் செய்யவேண்டியது.

வினு :—இப்படி நிச்சயம் செய்வதால்

என்னவுண்டாகும் ?

விடை :—இப்படி நிச்சயஞ்செய்வதனு ற் சகல அனர்த்த நிவர்த்தியும் பரமாநந் தப் பிராப்தியுமாகிய மோட்சமுண்டாகு ம்.

பத்தாங்கலை முற்றிற்று.

---

## பதினோராங்கலை.

———:o:———

### "தத் துவம்" பதார்த்தைக்கிய நிரூபணம்.

வினு :—"தத்" பதமென்பது யாது ?

விடை :—சாமவேதத்தின் சாந்தோக் கிய வுபநிஷத்தின் ஆருவது பிரபாடக (அத்தியாய) த்தில் சுவேதகேதுவென்னு ம் புத்திரனுக்கு அவர் பிதாவாகிய உத் தாலகமுனிவர், உபதேசித்த * " தத்துவ

---

* இதைப்போல மற்றப் "பிரஞ்ஞானம் பிரமம்" என்பது இருக்குவேதத்தின் மகா

மசி" என்னும் மகாவாக்கியத்தின் முதற் பதம் "தத்" என்னும் பதமாம்.

---

வாக்கியம். "அகம்பிரமாஸ்மி" என்பது எஜுர்வேதத்தின் மகாவாக்கியம். "அயமாத்துமாப்பிரமம்" என்பது அதர்வணவேதத்தின் மகாவாக்கியம். "தத்" பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய ஈசுவரனும், இலட்சியார்த்தமாகிய சுத்தப்பிரமமுமே முற்கூறிய மூன்று மகாவாக்கியங்களிலுமுள்ள "பிரம" பதத்திற்கு வாச்சியார்த்த இலக்ஷியார்த்தங்களாம். "துவம்" பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய ஜீவனும், இலட்சியார்த்தமாகிய கூடஸ்தசாட்சியுமே முற்கூறிய மூன்று மகாவாக்கியங்களிலுமுள்ள "பிரஞ்ஞானம்", "அகம்", "அயம்" பதத்தோடுகூடிய "ஆன்மா" என்னும் இம்மூன்று பதங்களுக்கும் வாச்சியார்த்த இலட்சியார்த்தங்களாம். அன்றியும் "தத்துவமசி" வாக்கிய முழுதிற்குமுள்ள ஜீவப்பிரம ஐக்கியமாகிய அர்த்தமே முற்கூறிய மூன்று மகாவாக்கியங்களுக்கும் அர்த்தமாம்.

வினா :—" துவம்" பதமென்பது யாது ?

விடை :—இதே " தத்துவமசி" மகாவாக்கியத்தின் இரண்டாவது பதம், " துவம்" பதமாம்.

வினா :—வாச்சியார்த்த இலட்சியார்த்தமென்பது யாது ?

விடை :—சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம், சத்தத்தின் விருத்தியெனப்படும். அந்த விருத்தி இரண்டுவகையாம்:— ஒன்று சக்தி விருத்தி ; மற்றொன்று இலட்சணாவிருத்தி. சத்தத்தில் அர்த்தஞானத்தை உண்டுபண்ணும் சாமர்த்தியமாகிய சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சாட்சாத் சம்பந்தமானது சத்தத்தின் சக்தி * விருத்தியாம். சக்தி

* இந்தச் சக்திவிருத்தியின் இலட்சணத்தில் அந்நியமதஸ்தர் கொள்கையும், அவற்றின்

விருத்தியினால் அறியப்பட்ட அர்த்தத்தி ன் வாயிலாக சத்தத்திற்கு அர்த்தத்தோ டுள்ள பரம்பரையாகிய சம்பந்தம், சத்த த்தின் இலட்சணாவிருத்தியாம். அவற் றுள் சக்திவிருத்தியினால் எந்த அர்த்த ம் அறியப்படுகின்றதோ, அது சத்தத்தி ன் வாச்சியார்த்தமெனப்படும். இதனை யே சக்கியார்த்தமென்றும் முக்கியார்த்த மென்றும் கூறுவர். இலட்சணாவிருத்தி யினால் அறியப்படும் அர்த்தம் சத்தத்தின் இலட்சியார்த்தமெனப்படும்.

வினா :—இலட்சணாவிருத்தி எத்தனை வகையாம் ?

விடை :—௧. ஜகத்து. ௨. அஜக த்து. ௩. பாகத்தியாகம் என்னும் பே தத்தால் இலட்சணாவிருத்தி மூன்றுவ

---

கண்டனமும், சித்தாந்தமும் விசாரசாகர விரு த்திப்பிராபகர கிரந்தங்களிற் காண்க.

கையாம்.

வின:—மூன்றுவிதமாகிய இலட்சணை யின் இலட்சணமும் உதாரணமும் எவை?

விடை:—க. எங்கே வாச்சியார்த்தம் முழுவதும் விடுபட்டு, வாச்சியார்த்தத்தின் சம்பந்தியானது கிரகிக்கப்படுகின்றதோ, அது ஜகத்திலட்சணை (விட்டவிலக்கணை) யாம். ஒரு புருஷன் ஒருவனை “இடைச்சேரி எங்கேயிருக்கிறது” என்று கேட்க, அதற்கவன் “இடைச்சேரி கங்கையில் இருக்கிறது” என்று சொல்வானாயின், அங்கே கங்கை என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகத்தில் இடைச்சேரியானது சம்பவியாது. ஆகையால் வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகம் முழுவதும் விடுபட்டு, அதன் சம்பந்தியாகிய

தீரம் (கரை), கொள்ளப்படுகிறது.

உ. எங்கே வாச்சியார்த்தம் விடுபடாமல், அதன் சம்பந்தியானது கிரகிக்கப்படுகின்றதோ, அது அஜகத்திலட்சணை (விடாதவிலக்கணை) யாம். ஒருவன் "சிவப்பு ஓடுகிறது" என்று சொல்வானாயின், அங்கே சிவப்பு என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய செந்நிறத்தில் ஓடுதல், பொருந்தாதாகையால் செந்நிறமுடைய குதிரை ஓடுகிறதென வாச்சியார்த்தம் விடுபடாமல், அதன் சம்பந்தியாகிய குதிரையென்னும் அதிக அர்த்தம் கிரகிக்கப்படுகின்றது.

ங. எங்கே விரோதமுடைய சில வாச்சிய பாகம் விடுபட்டு, அதன் சம்பந்தியாகிய விரோதமில்லாத சில வாச்சியபாகம் கொள்ளப்படுகின்றதோ, அது பாகத்தியாக இலட்சணை (விட்டுவிடாதவில

க்கணை) யாம். முன் ஒரு தேசகாலத்தி ல் பார்க்கப்பட்ட தேவதத்தன் அன்னிய தேசகாலத்தில் பார்க்கப்படுவானாயின், அப்போது அவனைப் பார்க்கும் சோமத த்தனானவன் "அந்தத் (தூர) தேசத்தி லும் அந்தக் (பூத) காலத்திலும் பார்க்கப் பட்ட தேவதத்தன் எவனோ, அவனே இ ந்தத் (சமீப) தேசத்தில் இந்தக்(வர்த்தமா ன) காலத்தில் வந்திருக்கிறான்" என்று சொல்லுகிறான். இங்கே அந்தத் தேசகா லமும் இந்தத்தேசகாலமுமாகிய வாச்சிய பாகங்களுக்கு ஐக்கிய விரோதமிருத்த லால், அவற்றின் பார்வை விடுபட்டு, "தே வதத்தன் இவன்தான்" என்னும் விரோத மில்லாத வாச்சியபாகம் கொள்ளப்படுகி ன்றது.

வினா :—மூன்றுவித இலட்சணைகளில் மகாவாக்கியத்தில் எந்த இலட்சணை பொ

ருந்தும் ?

விடை :—க. எங்கே விட்டவிலக்கணை யிருக்கின்றதோ, அங்கே வாச்சியார்த்தம் முழுதும் விடுபடுகின்றது. மகாவாக்கியத்தில் விட்டவிலக்கணையைக் கொள்ளுவோமாயின், "தத்" "துவம்" பதங்களின் வாச்சியார்த்தத்தில் பிரவேசித்துள்ள பிரமசைதன்னிய சாட்சிசைதன்னியங்களுக்கு விடுபாடுண்டாய், அவற்றினும் வேருகிய அசத்து ஜட துக்கரூப பிரபஞ்சம் கொள்ளப்படுவதாகும். அதனுல் பெரும் அனர்த்தத்தினடைவு உண்டாகும். அதனுற் புருஷார்த்தமும் சித்தியாது. ஆகையால் மகாவாக்கியத்தில் விட்டவிலக்கணை பொருந்ாது.

உ. எங்கே விடாதவிலக்கணையிருக்கின்றதோ,அங்கே வாச்சியார்த்தத்தின் ஒரு பாகமும் விடுபடுகிறதில்லை. மகாவாக்கி

யத்தில் விடாதவிலக்கணையைக் கொள்ளு வோமாயின், "தத்" "துவம்" பதவாச்சி யார்த்தங்களின் ஐக்கியவிரோதம் நீங் காது. அதனால் இலட்சணையைச் செய் தற்கு ஒரு பிரயோசனமும் சித்தியாது. ஆகையால் மகாவாக்கியத்தில் விடாதவி லக்கணை பொருந்தாது.

ங. எங்கே பாகத்தியாக இலக்ஷணை யிருக்கின்றதோ, அங்கே விரோதமுடை ய பாகம் விடுபட்டு, விரோதமில்லாத பாக ம் கொள்ளப்படுகின்றது. மகாவாக்கியத் தில் பாகத்தியாக விலக்கணையைக் கொள் ளுவோமாயின், "தத்" "துவம" பதங்க ளின் வாச்சியார்த்தத்தில் தர்மத்தோடுகூ டிய மாயை அவித்தையாகிய விரோதமு டைய பாகம் விடுபட்டு, விரோதமில்லாத அசங்க சுத்த சேதனபாகம் கொள்ளப்படு கின்றது. அதனாலவற்றிற்கு ஐக்கியமு

ம் பொருந்துகின்றது. அதனால் பரமபுருஷார்த்தத்தின் பிராப்தி யுண்டாகின்றது. ஆகையால் மகாவாக்கியார்த்தத்தில் பாகத்தியாகவிலக்கணை பொருந்தும்.

வினா:—“ தத்” பதத்தின் வாச்சியார்த்த இலட்சியார்த்தங்களெவை?

விடை :—

க. அவ்வியாகிருதமாகிய மாயை ஈசுவரனுக்குத் தேசமாம்.

உ. உற்பத்தி திதி பிரளயமென்னு மிம்மூன்றும் ஈசுவரனுக்குக் காலங்களாம்.

ங. சத்துவகுணம் இரசோகுணம் தமோகுணம் என்னு மிம்மூன்றும், ஈசுரனுக்கு * வஸ்துக் (சிருஷ்டி சாமக்கிரியை) களாம்.

---

* மாயையும் மூன்றுகுணங்களும் ஒரே பதார்த்தமாகையால், ஈசுவரனது தேச வஸ்து சரீரங்களுக்கு ஏகத்துவமுண்டாகின்றது. ஆயி

௪. விராட்டு இரணியகருப்பம் அவ்வியாகிருதம் என்னுமிம்மூன்றும் ஈசுவரனுக்குச் சரீரங்கள்.

௫. வைசுவானரன் சூத்திராத்துமா அந்தரியாமி என்னும் இம்மூவரும் ஈசத்தன்மையின் அபிமானிகள்.

௬. "ஒருவனாகிய நான் அனேகமாக ஆவேன்" என்னும் பார்வைமுதல் "ஜீவரூபமாகப் பிரவேசித்தார்" என்பதுவரையிலுமுள்ள சிருஷ்டி, ஈசுவரனது காரியமாம்.

---

னும் குயவனுக்குக் குடத்தைச் செய்ய, மிருத்திகையாகிய பிருதிவி தேச (இட) மாயும் மிருத்திகையின் பிண்டம் (திரள்) வஸ்துவாயும், எலும்புமுதலிய வடிவினதாகிய பிருதிவியின் பாகம் சரீரமாயுமிருக்கின்றன. அவற்றிற்கு ஏகத்துவம் சம்பவியாதென்பதில்லை. அதுபோல ஈசுவரனது தேசமுதலியவற்றிற்கும் ஏகத்துவம் சம்பவியாதென்பதில்லை.

எ. க. சருவசக்தித்துவம். உ. சருவஞ்ஞத்துவம். ௩. வியாபகத்துவம். ௪. ஏகத்துவம். ரு. சுதந்திரத்துவம். ௬. சாமர்த்தியம். எ. பரோட்சத்துவம். அ. மாயாவுபாதியுடைமை என்னு மிவ்வெட்டும் ஈசுவரனது தர்மங்கள்.

இவை எல்லாவற்றோடும் கூடிய மாயை, அதிலுள்ள சிற்பிரதிபிம்பமாகிய சிதாபாசன், அவற்றிற்கதிஷ்டானமாகிய பிரமம் என்னும் இவை எல்லாம் சேர்ந்து ஈசுவரனெனப்படும். அது "தத்" பதத்திற்கு வாச்சியார்த்தமாம்.

இவை எல்லாவற்றோடும் கூடிய மாயா சிதாபாசபாகத்தை விட்டு, மிஞ்சியிருக்கும் விராட்டு இரணியகருப்ப அவ்வியாகிருதங்களுக்கு அதிஷ்டான ஈசுரசா

ட்சியாகிய சுத்தப்பிரமம், "தத்" பதத்திற்கு இலட்சியார்த்தமாம்.

வினா:—பிரமத்திற்கும் மாயையில் பிரதிபிம்பனாகிய ஈசுரனுக்கும் பரஸ்பர அத்தியாசம் (அன்னியோன்னியாத்தியாசம்) எப்படியிருக்கின்றது?

விடை:—அவிசாரதிருஷ்டியால் பிரமத்தினது சத்தியத்தன்மையின் சமுசர்க்க(தாதான்மிய சம்பந்த)ம் ஈசுரனிடத்து அத்தியஸ்தமாகின்றமையால், ஈசுவரன் சத்தியமாகத்தோற்றுகின்றார். ஈசுவரனது சொரூபமும், அவரது காரணத்தன்மையின் சொரூபமும் பிரமத்தில் அத்தியஸ்தமாகின்றமையால், பிரமம் ஜகத்திற்குக் காரணமாகத் தோற்றுகின்றது. இதனையே தடஸ்தலட்சணத்தை அறிவிக்கும் சுருதி புராண ஆசாரியர்களது வசனங்கள், அநுவாதஞ்செய்கின்றன. இவ்

வாறு பிரமத்திற்கும் ஈசுவானுக்கும் பரஸ்பர அத்தியாசமிருக்கின்றது.

வி௵:— அவ்வத்தியாசம் எதனால் நிவர்த்தியாம்?

விடை:—அவ்வத்தியாசம் விவேகஞானத்தால் நிவர்த்தியாம்.

வி௵:—"துவம்" பதத்தின் வாச்சியார்த்த இலட்சியார்த்தங்களெவை?

விடை:—க. நேத்திரம். உ. கண்டம். ங. இருதயம் என்னுமிம்மூன்றும் ஜீவனுக்குத்தேசமாம். உ. ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னுமிம்மூன்றும் ஜீவனுக்குக் காலமாம். ங. ஸ்தூலம் சூட்சுமம் காரணம் என்னுமிம்மூன்றும் ஜீவனுக்கு வஸ்துக் (போகசாமக்கிரியை) களாம்.

ச. இதுவே சரீரமுமாம்.

ரு. விசுவ தைஜச பிராஞ்ஞனென்னு

மிம்மூவரும் ஜீவத்தன்மையின் அபிமானி
கள்.

௬. ஜாக்கிரமுதல் மோட்சபரியந்த
முள்ள போகமாகிய சமுசாரம், ஜீவனது
காரியமாம்.

எ. க. அற்பசக்தித்துவம். உ. அ
ற்பஞ்ஞத்துவம். ௩. பரிச்சின்னத்
துவம். ௪. நாநாத்துவம். ரு. பர
தந்திரத்துவம். ௬. சாமர்த்தியமின்
மை. எ. அபரோட்சத்துவம். அ.
அவித்தையுபாதியுடைமை என்னு மிவ்
வெட்டும் ஜீவனது தர்மங்களாம். இவை
எல்லாவற்றோடும் கூடிய அவித்தை,
அதில் பிரதிபிம்பமாகிய சிதாபாசன்,
அவற்றிற்கதிஷ்டானமாகிய கூடஸ்தர் எ
ன்னு மிவை எல்லாஞ்சேர்ந்து ஜீவனென
ப்படும். அது "துவம்" பதத்திற்கு வா
ச்சியார்த்தமாம்.

இவை எல்லாவற்றோடும் கூடிய சிதாபா
சபாகத்தை விட்டு மிஞ்சியிருக்கும் ஸ்
தூல சூட்சும காரணசரீரங்களுக்கு அதி
ஷ்டான சிவசாட்சியாகிய கூடஸ்த ஆன்
மா, "துவம்" பதத்திற்கு இலட்சியார்
த்தமாம்.

விஞ :—கூடஸ்தருக்கும் புத்தியில் பி
ரதிபிம்பமாகிய ஜீவனுக்கும் பரஸ்பர அ
த்தியாசம் எப்படியாகும்?

விடை :—அவிசார திருஷ்டியில் கூட
ஸ்தரது சத்தியத்தன்மையின் சமுசர்க்க
ம் (தாதான்மிய சம்பந்தம்), ஜீவனிடத்தி
ல் அத்தியஸ்தமாகின்றமையால், ஜீவன்
மித்தையாகத் தோற்றாமல் சத்தியமாகத்
தோற்றுகின்றது. ஜீவனது சொரூபமும்
அதனது கர்த்திருத்துவாதி தர்மங்களும்
கூடஸ்தனிடத்தில் அத்தியஸ்தமாகின்ற
மையால், கூடஸ்தர் அகர்த்தாவும், அபோ

க்தாவும், அசமுசாரியும், நித்தியமுக்தமும், அசங்கமுமாகிய பிரமாகத்தோற்றுமல், அதனினும் விபரீதமாகத் தோற்றுகின்றூர். இவ்வாறு கூடஸ்தருக்கும் ஜீவனுக்கும் பரஸ்பரஅத்தியாசமாம்.

வினு :—அந்த அத்தியாசம் எதனுல் நிவர்த்தியாம் ?

விடை :—அந்த அத்தியாசம் விவேகஞானத்தால் நிவர்த்தியாம்.

வினு :—" தத் " பத " துவம் " பதார்த்தங்களுக்கு மகாவாக்கியத்திற் சொல்லப்பட்ட ஐக்கியம் எப்படிச் சம்பவிக்கும் ?

விடை :—" தத் " பத " துவம் " பதார்த்தங்களின் வாச்சியார்த்தமாகிய உபாதிசகித சைதன்னியங் (ஈசுவரஜீவர்) களின் ஐக்கியத்திற்கு விரோதமிருந்தபோதிலு

ம், " தத்" பத " துவம்" பதங்களின் இலட்சியார்த்தமாகிய பிரமான்மாக்களின் ஐக்கியத்திற்குச் சிறிதும் விரோதமில்லை. இவ்வாறு " தத்" பத " துவம்" பதார்த்தங்களுக்கு மகாவாக்கியத்திற் கூறிய ஐக்கியம் சம்பவிக்கும்.

வினா :—" நான் பிரமம்" என்னும் பிரமான்மவைக்கிய ஞானம் யாருக்குண்டாகின்றது ?

விடை :—இந்த ஞானம் சிதாபாசனுக்குண்டாகின்றது.

வினா :—பிரமத்துக்கு வேறாகிய சிதாபாசன் தன்னை எப்படிப் பிரமரூபமாக அறிவன் ?

விடை :—ஜீவத்தன்மைக்கு அதிஷ்டானமாகிய கூடஸ்தருக்குப் பிரமத்தோடு முக்கிய அபேதமிருக்கின்றது. புத்தியோடுகூடிய சிதாபாசனுக்குத் தனது சொரூ

பத்தை வாதித்தலால், பிரமத்தோடு அபே தமுண்டாகின்றது. ஆகையால் சிதாபாச ன் தனது சொரூபத்தைப் பாதித்துத், தன்னை அகம் சத்தத்திற்கு இலட்சியார் த்தமாகிய கூடஸ்தராக அறிகிறான். த னது நிஜரூபமாகிய கூடஸ்தனை "நான் கூடஸ்தர்" என்றபிமானித்துக்கொண்டு, "நான் பிரமம்" என்றறிகிறான். இவ் வாறு சிதாபாசன் தன்னைப் பிரமரூபமாக அறிகிறான்.

வினா:—இந்தத் "தத்" "துவம்" பத இலட்சியார்த்தங்களின் ஐக்கியத்தில் திரு ஷ்டாந்தம் யாது?

விடை:—திருஷ்டாந்தம். க. கட ம டவுபாதிகளையுடைய கடாகாச மகாகாசங் களுக்கு ஐக்கிய விரோதமிருந்த போதி லும், கடமடங்களாகிய உபாதிகளின் திருஷ்டியை விட்டு, ஆகாசமாத்திரத்தி

ற்கு ஐக்கியவிரோதமில்லை.

உ. கண்ணாடிப்பாத்திரத்திலும் மண் பாத்திரத்திலும் எரியும் விளக்கின் உபாதிகளாகிய இரண்டு பாத்திரங்களுக்கும் ஐக்கிய விரோதமிருந்தபோதிலும், அக்கினித்தன்மையால் தீபத்தின் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

ஙு. இராஜாவுக்கும் இடையனுக்கும் அவர்களின் உபாதிகளாகிய சேனையினாலும் ஆட்டுமந்தையினாலும் ஐக்கியவிரோதமிருந்தபோதிலும், மனிதத்தன்மையால் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

ச. கங்கை ஜலத்திற்கும் கங்கை ஜலத்தின் கலசத்திற்கும் அவற்றின் உபாதிகளாகிய ஆறுகலசங்களால் ஐக்கியவிரோதமிருந்தபோதிலும், கங்கைநீர் மாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

ரு. சமுத்திரத்திற்கும் நீர்த்துளிக்கும் அவற்றின் உபாதிகளாகிய சமுத்திர திவலைகளான் ஐக்கியவிரோதமிருந்தபோதிலும், ஜலமாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

சா. ஓர்புருஷனைப் பிதாவை முன்னிட்டுப் புத்திரனென்றும் பாட்டனை முன்னிட்டுப் பௌத்திர (பேர) னென்றும் சொல்லுகிறார்கள். அவனது உபாதிகளாகிய பிதா பாட்டன்மார்களால் ஐக்கியத்திற்கு விரோதமிருந்தபோதிலும், புருஷன்மாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

எ. காசியில் ஓர் அரசனிருந்தான். அவன் யானையில் உட்கார்ந்து பவனிவருவதைச் செவ்வையாகப்பார்த்திருந்த ஓர் யாத்திராவாசியாகிய தேவதத்தன், சில காலத்திற்குப்பின் அக்காசியரசனை ஓர்

வேற்றரசன் இராச்சியத்தை கவர்ந்து கொண்டு துரத்திவிட, அவன் கோவணம் தரித்து, அங்கத்தில் விபூதியணிந்து, சுரைக்குடுக்கையும் தண்டமும் கையிற்கொண்டவனாய், வெருங்காலோடு தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுச் சுற்றிக்கொண்டே தன் கிராமத்திற்கு வரக் கண்டு, அன்னிய யாத்திரைவாசியாகிய சோமதத்தனை நோக்கி: நாம் காசியில் எந்த இராஜாவைப் பார்த்தோமோ "அவன்தான் இவன்" என்று சொன்னான். அதற்கு அன்னிய யாத்திரைவாசியாகிய சோமதத்தன்,

(க) அந்தத் தேசம் வேறு; இந்தத் தேசம் வேறு;

(உ) அந்தக் காலம் (அவஸ்தை) வேறு; இந்தக் காலம் வேறு;

(ங) அவனது வஸ்து (சாமக்கிரியை) வேறு; இவனது வஸ்து வேறு;

(௪) அவனது அபிமானம் வேறு; இவனது அபிமானம் வேறு;

(௫) அவனது காரியம் வேறு; இவனது காரியம் வேறு;

(௬) அவனது தர்மம் வேறு; இவனது தர்மம்வேறு;

ஆகையால் அந்தக் காசி அரசனுக்கும் இந்தச் சந்நியாசிக்கும் ஐக்கியம் எப்படிக்கூடுமெனை, அதற்கு அச்சோமதத்தன், அவனுடையவும் இவனுடையவுமாகிய (௧) தேச (௨) கால (௩) வஸ்து (௪) அபிமான (௫) காரிய (௬) தர்மங்களை விட, இரண்டிலும் அநுகூதமாயுள்ள புருஷன்மாத்திரம் ஒருவனே என்றான்.

சித்தாந்தம் :—அதுபோல, ஜீவேசுரர்களது தேசகாலமுதலியவற்றை விட்டால், இருவரிலும் அனுரூதமாயுள்ள சேதனமாத்திரமாகிய பிரமமும் ஆன்மா

வும் ஒன்றேயாம். ஆகையால் "பிரம மே நான், நானே பிரமம்" என்று திடமாக நிச்சயம்செய்தல்வேண்டும். இதுவே தத்துவஞானம். இதனாலேயே சருவதுக்கநிவர்த்தியும் பரமாநந்தப்பிராப்தியுமாகிய மோட்சமுண்டாகின்றது.

பதினோராம்கலை முற்றிற்று.

---

## பனிரண்டாம்கலை.

## ஞானியின் கன்மநிவர்த்திவர்ணநம்.

---

வினா:—கன்மமென்பது யாது?

விடை:—மனோ வாக்குக் காயங்களின் கிரியை(செய்கை), கன்மமாம்.

வினா:—கன்மம் எத்தனைவகையாம்?

விடை:—க. சஞ்சிதம். உ. பிராரத்தம். ந. ஆகாமியம் என்னும் பேதத்தால் கன்மம் மூன்றுவகையாம்.

வினா :— க. சஞ்சிதகன்மமென்பது யாது?

விடை :—அநேக அதீத (பூத) சென்மங்களிற் சஞ்சயஞ்செய்ய (சேர்க்க) ப்பட்ட கன்மம், சஞ்சிதமாம்.

வினா :—உ. பிராரத்தகன்மமென்பது யாது?

விடை :—அநேக சஞ்சிதகன்மங்களின் மத்தியில் பரிபக்குவமாகியதும், ஈசுவர இச்சையினால் இந்த வர்த்தமான தேகத்தின் ஆரம்பத்திற்கு ஏதுவாகியதுமான ஏதேனும் ஓர் சஞ்சிதகன்மம், பிராரத்தமாம்.

வினா :—ங. ஆகாமியகன்மமென்பது யாது?

விடை :— ஞானத்திற்கு முன்னாவது பின்னாவது இந்த வர்த்தமான தேகத்தில் மரணபரியந்தம் செய்யப்படும் கன்மம்,

ஆகாமியமாம்.

வினு :—க. ஞானிகளின் கன்மம் எப்படி நிவர்த்தியாகும் ?

விடை :—க. ஞானத்திஞல் அஞ்ஞானத்தின் ஆவரண அமிசம் நிவர்த்தியாகின்றது. ஆவரணம் நிவர்த்தியாகவே, ஆவரணத்தை ஆசிரயித்துள்ள சஞ்சித (முன் அநேக ஜன்மங்களிற்செய்த) கன்மம் நிவர்த்தியா (நாசமா) கின்றது.

௨. " நான் அகர்த்தாவும் அபோக்தாவும் அசங்கமுமாகிய பிரமமாயிருக்கிறேன்" என்னும் நிச்சய பலத்தால், தனது ஆசிரயமாகிய பிரமஜதாதான்மியம் நாசமாதலானும், இராகத்துவேஷமில்லாமையாலும், ஜலத்திலுள்ள தாமரையிலையைப்போல் ஞானியை இந்த ஜன்மத்தில் முன்னும்பின்னும் செய்யப்பட்ட ஆகாமியகன்மங்கள் நெருங்கா. ஆனல் ஞானியி

ன் ஆகாமிய (இந்த சென்மத்தில் செய்ய ப்பட்ட) சுபாசுப கன்மங்களைக், கிரமமாக ச்சகாமிகளாகிய பக்தர்களும் துவேஷிக ளாகிய நிந்தகர்களும் கிரகிக்கின்றார்கள்.

ரூ. அஞ்ஞானத்தின் விக்ஷேப சக்தி யை ஆசிரயித்திருக்கும் ஞானியின் பிராப் த (முன்னேதேனுமோர் சென்மத்தில் செ ய்யப்பட்டு, இந்தச் சென்மத்திஞரம்பத்தி ற் கேதுவாயுள்ள) கன்மம், போகத்தால் நிவர்த்தியாகின்றது. அதனுல் ஞானி, சக ல கன்மங்களினின்றும் முக்தனுகின்ருன். இதனுலேயே கன்மத்தாலாகிய ஜன்மமுத லிய சமுசாரத்தினின்றும் முக்தனுகின்ரு ன். இவ்வாறு ஞானிக்கு கன்மநிவர்த்தி யுண்டாகின்றது.

பனிரண்டாம்கலை முற்றிற்று.

---

## பதின்மூன்றாம்கலை.

## ஞானசப்தபூமியின் வர்ணநம்.

வினா :—எல்லா ஞானிகளுக்கும் நிச்சயமொன்றாயிருக்க, ஸ்திதி (நிலை) வேறாயிருப்பானேன் ?

விடை :—சகல ஞானிகளது ஸ்திதியின்பேதமும், ஞானபூமியின் பேதத்தாலாகின்றது.

வினா :—அந்த ஞானபூமி எத்தனைவகையாம் ?

விடை :—க. சுபேச்சை. உ. சுவிசாரணை. ௩. தனுமானசி. ௪. சத்துவாபத்தி. ௫. அசம்சத்தி. ௬. பதார்த்தாபாவினி. எ. துரியம் என்னும் இவ்வேழும் ஞானபூமியாம்.

வினா :—க. சுபேச்சை என்பது யாது ?

விடை :—பூர்வஜன்மத்திலாவது இந்த ஜன்மத்திலாவது செய்யப்பட்ட நிஷ்காம கன்மவுபாசனைகளால் சுத்தியும் ஏகாக்கிரமுமுள்ள சித்தமுடைய புருஷர்களுக்கு விவேகம் வைராக்கியம் ஷட்சம்பத்தி முமுக்ஷுத்துவம் என்னும் நான்கு சாதனங்களுமுண்டாய், ஆன்மாவை அறிய வேண்டுமென்றுண்டாகும் தீவிர இச்சை, சுபேச்சை என்னும் ஞானத்தின் முதற்பூமியாம்.

வினா :—உ. சுவிசாரணை என்பது யாது ?

விடை :—ஆன்மாவை அறியவேண்டுமென்னும் தீவிர இச்சையால் பிரமநிஷ்டராகிய குருவை விதிபூர்வமாகச் சரணமடைந்து, அவர்முகமாக ஜீவப்பிரமங்களின் ஐக்கியத்தையறிவிக்கும் வேதாந்தவாக்கியத்தைச் சிரவணம்செய்து, அந்த அர்த்த

ம் தன் மனத்திற் பதியும்பொருட்டு, அநேக யுக்திகளால் மனன (விசார) ம் செய்தல், சுவிசாரணை என்னும் ஞானத்தின் இரண்டாம் பூமியாம்.

விஞ :— ௩. தனுமானசி யென்பது யாது ?

விடை :—சொரூபசாட்சாத்கார (அபரோட்சானுபவ) த்தின்பொருட்டு, சிரவணமனனவாயிலாக நிச்சயிக்கப்பட்ட பிரமான்ம வைக்கியமாகிய அர்த்தத்தை இடைவிடாமல் சிந்தித்தலாகிய நிதித்தியாசனத்தால் ஸ்தூல(பகிர்முகமாகிய) மனதிற்குச் சூட்சுமத்தன்மை (அந்தர்முகத்துவம்) உண்டாதல், தனுமானசி என்னும் ஞானத்தின் மூன்றும் பூமியாம்.

விஞ :—சத்துவாபத்தியென்பது யாது ?

விடை :—சிரவண மனன நிதித்தியாசனங்களால் சமுசய விபரீதங்களில்லாத

சொரூபசாட்சாத்காரமாகிய நிருவிகற்ப ஸ்திதியுண்டாவதினால் சித்தத்தில் யாதொரு சுத்தசத்துவகுணத்தின் அல்லது சொரூபசத்தையின் அடைவு உண்டாகின்றதோ, அது சத்துவாபத்தி என்னும் ஞானத்தின் நான்காம் பூமியாம்.

வினா :—ரு. அசம்சத்தி என்பது யாது ?

விடை :— நிருவிகற்பசமாதியினது அப்பியாசத்தின் பரிபக்குவத்தால் தேகத்தில் எல்லாவிதத்தாலும் அகந்தை மமதைகள் களைந்து தேகமுதலியவற்றில் எவ்விதத்தாலும் ஆசத்தி (பிரியம்) உண்டாகாதிருத்தல், அசம்சத்தி என்னும் ஞானத்தின் ஐந்தாம் பூமியாம்.

வினா :—சு. பதார்த்தாபாவினி என்பது யாது ?

விடை :— நிருவிகற்பசமாதியின் மி

குந்த அப்பியாசத்தால் தேகமுதலிய சகலபதார்த்தங்களுக்கும், அதிஷ்டானப் பிரமரூபமாகத் தோற்றுதலால், யாதொரு அபாவம் (அப்பிரதீதி) உண்டாகின்றதோ, அது பதார்த்தாபாவினி என்னும் ஞானத்தின் ஆறுவது பூமியாம்.

வினு :—எ. துரியமென்பது யாது?

விடை :—ஞாதிரு ஞான ஞேயமாகிய திரிபுடி, நான்காம் ஐந்தாம்பூமிகளைப் போல பாவரூபமாகவும் ஆறும்பூமியைப்போல அபாவரூபமாகவும் எங்கே தோற்றவில்லையோ, அப்படிப்பட்ட தன்னுலும் பிறராலும் எழுதலில்லாத துரியபதத்திலுள்ள மனதின் நிலே, துரியமென்னும் ஞானத்தின் ஏழாவது பூமியாம்.

வினு :—இந்த எழுபூமிகளும் எதற்குச் சாதனம்?

விடை :—க-வது, உ-வது, ௩-வது பூமி கள் தத்துவஞானத்திற்குச் சாதனமாம். * நான்காவது பூமி தத்துவஞானவடிவமா

---

* கிருதோபாசனன் (ஞானத்திற்குமுன் உபாசனை பூரணமாகச் செய்தவன்) அகிருதோபாசனன் (ஞானத்திற்குமுன் உபாசனைசெய்யாதவன்) என்னும்பேதத்தால் நான்காம்பூமியாகிய ஞானத்திற் கதிகாரிக ளிரண்டுவகையாவர். அவர்களுள் கிருதோபாசனன் நல்லவைராக்கியாதி சாதனங்களோடு கூடியிருப்பன். ஞானத்திற்குப் பிறகு சொற்ப அப்பியாசத்தால் சடுதியாக ஐந்தாவதுமுதலிய பூமிகளிலேறுகின்றான். அகிருதோபாசனனிடத்தில் எல்லாச்சாதனங்களும் வெளிப்படையாகத் தோற்றுகிறதில்லை. ஆனால் ஒன்றிரண்டு வெளிப்படையாகவும், மற்றவை மறைவாகவுமிருக்கும். ஆகையால் அவன் புத்தியுடையவனாயிருந்தால் நான்காம்பூமியாகிய தத்துவஞானத்தை அடைகின்றான். ஆனால் வெகுகால

யிருத்தலால், ஜீவன்முக்தி விதேகமுக்திகளுக்குச் சாதனமாம். ரு-வது, சூ-வது, எ-வது பூமிகள் ஜீவன்முக்தியின் விலட்சண ஆநந்தத்திற்குச் சாதனமாம்.

பதின்மூன்றுங்கலை முற்றிற்று.

---

## பதினான்காங்கலை.

---

ஜீவன்முக்திவிதேகமுக்திவர்ணநம்.

வினா :—க. ஜீவன்முக்தி என்பது யாது?

விடை :— தேகாதிப்பிரபஞ்சம் தோற்றிக்கொண்டிருக்கப் பிரமசொரூபமாக நிலைத்தல், ஜீவன்முக்தியாம்.

---

அப்பியாசத்தால் எப்போதாவது ஐந்தாவது முதலிய ஏதேனுமோர் பூமியில் ஆரூடனாகின்றான்; சீக்கிரத்திலாகிறதில்லை.

வினு :—ஜீவன்முக்தியில் பிரபஞ்சம் தோற்றுதற்குக் காரணம் யாது ?

விடை :—ஆவரணம் விட்சேபமென்னுமிரண்டும் அவித்தையின் சக்திகளாம். அவற்றுள் ஆவரணசக்தி ஞானத்தால் நாசமாகின்றது. அதனுல் ஞானிக்கு வேறு பிறப்பில்லை. ஆனுல் விட்சேப சக்தி (அவித்தியாலேசம்) பிராரத்த பலத்தால் வருத்த விதையைப்போலவிருக்கின்றது. அதனுல் ஜீவன்முக்தியில் பிரபஞ்சத்தோற்றமுண்டாகின்றது.

வினு :—ஜீவன்முக்தியில் பிரபஞ்சத் தோற்றம் எப்படியுண்டாகின்றது.

விடை:— இரச்சுஞானத்தால் சர்ப்பப்பிராந்தி நீங்கிய பின்னும் நடுக்கமுதலியவை தோற்றுவதுபோலும், கண்ணுடியை அறிந்தவனுக்குப் பிரதிபிம்பம் தோற்றுவதுபோலும், மருஸ்தலத்தையறிந்தவ

னுக்குக் கானல்ஜலம் தோற்றுவதுபோ லும் தத்துவஞானிக்கு ஜீவன்முக்திதசையில் பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் தோற்றமுண்டாகின்றது.

வின :— பாதிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் தோற்றத்தில் வேறு திருஷ்டாந்தம் யாது?

விடை :—திருஷ்டாந்தம் :— மகாபாரத யுத்தத்தில் துரோணாசாரியரது மரணத்திற்குப்பின் அசுவத்தாமாவோடு யுத்தமுண்டாயிற்று. அன்றுதினம் சத்தியசங்கற்பராகிய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமா, "இன்று வீட்டுக்குத் திரும்பும் வரையிலும் இந்த இரதமும் குதிரைகளும் அப்படியே இருக்கக்கடவன" வென்று சங்கற்பித்துக்கொண்டு, யுத்தபூமியில் வந்தார். அங்கே அசுவத்தாமா பிரமாஸ்திரம் (அக்கினி அஸ்திரம்) போட்டார். அத

ஞல் அக்க்ஷணத்திலேயே அர்சுனனது இரதமும் குதிரைகளும் பஸ்பமாகியும், கிருஷ்ணபரமாத்துமாவாகிய சாரதியின் சங்கற்பத்தால் அப்படியேயிருந்து,வீட் டிற்கு வந்தவுடனே சாம்பர்க்குவியலாய் விட்டன.

சித்தாந்தம் :—

அதுபோல, ஸ்தூலதேகம் இரதம். அதற்குப் புண்ணியபாவங்களிரண்டுசக்க ரங்கள். முக்குணம் கொடி. பஞ்ச ப்பிராணன் கயிறு. தசேந்திரியங்கள் கு திரைகள். சுபாசுபமாகிய சப்தமுதலி ய பஞ்சவிஷயங்கள் மார்க்கம். மனம் கடிவாளம். புத்தி சாரதி (கிருஷ்ண ன்). பிராரத்தகன்மம் அவரதுசங்கற்ப ம். அகங்காரம் உட்காருமிடம். ஆன்மா இரதிக (அர்ச்சுன) ன். அவனது வைரா க்கியாதி சாதனங்கள் பாணங்கள். அவ

ன் இரதத்தில் ஆரூடனாய் சற்சங்கமாகிய இரணபூமியிற் சென்றான். அவனைக் குருவாகிய அசுவத்தாமா, மகாவாக்கிய உபதேசமாகிய பிரமாஸ்திரத்தாலடித்தார். அதனால் ஞானமாகிய அக்கினியுதயமாக, அந்தக்ஷணத்திலேயே தேகாதிப்பிரபஞ்சமாகிய இரதமுதலிய யாவும் பாதமாயின. என்றாலும் ஸ்ரீகிருஷ்ணனாகிய சாரதிஸ்தானத்திலுள்ள புத்தியின் பிராரப்தகன்மமாகிய சங்கற்ப பலத்தால் தேகமுதலியவை நாசமாகாமல் * பிறகும் தோ

---

* எதனது நாசமுண்டாகின்றதோ, அது நாசத்தின் பிரதியோகியாம். நாசத்தில் அந்தப் பிரதியோகியின் தோற்றமுண்டாகிறது. பாதத்தில் பிரதியோகியின் தோற்றமுண்டாகிறதில்லை. ஆனால் மூன்றுகாலஅபாவம் (மூன்றுகாலத்திலு மில்லாமை) தோற்றுகிறது. இது நாசத்திற்கும் பாதத்திற்குமுள்ள பேதம்.

ற்றிக்கொண்டிருக்கின்றன. இதனையே * பாதிதானுவிருத்தி என்பர். இவ்வாறு இது பாதிதமாகிய பிரபஞ்சத் தோற்றத்தில் திருஷ்டாந்தமாம்.

வினா :—உ. விதேகமுக்தியென்பது யாது?

விடை :—பிரபஞ்சப் பிரதீதியில்லாமல் பிரமரூபமாக நிலைத்திருத்தல், அல்லது பிராரத்தகன்மம் போகத்தினால் நசித்த பிறகு ஸ்தூல சூட்சும சரீராகாரமாகப் பரிணாமத்தையடைந்த அஞ்ஞானம் சேதனத்தில் ஒடுங்குதல், விதேகமுக்தியாம்.

---

* குலாலசக்கிரம், தண்டத்தைச் சுற்றுதலாகிய முயற்சியை விட்டபிறகும் வேகத்தின் வலியாற் சுற்றுதல்போல, பாதமுண்டாகியபிறகும் பிராரத்தகன்மத்தால் தேகாதிப்பிரபஞ்சம் தோற்றுதல், பாதிதானுவிருத்தியாம்.

**வினா** :—பிராரத்தம் முடிந்தகாலத்தில் காரியத்தோடு அஞ்ஞானலேசம் எந்தச் சாதனத்தால் விலயமாகின்றது ?

**விடை** :—பிராரப்தகன்மத்தின் முடிவில் அதிக அல்லது குறைந்த மூர்ச்சை காலத்தில் பிரமாகாரவிருத்தி சம்பவியாது ; வித்துவானுக்கு விதியுமில்லை. என்றும் சுழுத்தியைப்போல அந்த மூர்ச்சை காலத்திலும் பிரமவித்தையின் சம்ஸ்காரமிருத்தலால், அதில் ஆரூடமாகிய சேதனத்தால் காரியத்தோடு அஞ்ஞான லேசம் விலய (நாச) மாகின்றது. காஷ்டத்திலுள்ள அக்கினியினால் இரும்பு முதலியவைகள் எரியத் தானும் எரிதல் போல, அந்தச் சமஸ்காரத்தில் ஆரூட (உள்ள) சேதனத்தால் பிரபஞ்சம் நாசமாகத் தானும் (ஞானத்தின் சம்ஸ்காரமும்) நாசமாகின்றது. பிறகு அசங்க சு

த்த சச்சிதானந்த சொப்பிரகாச தானே தானாகிய பிரமம், மிஞ்சுகின்றது.

பதினான்காம்கலை முற்றிற்று.

---

## பதினைந்தாம்கலை.

---

* வேதாந்தப்பிரமேய (பதார்த்த) வர்ணநம்.

வினா :—க. மோட்சத்தின் சொரூபம் யாது ?

---

* வேதாந்த சாஸ்திரமாகிய பிரமாணத்தாலுண்டாகிய எதார்த்தஞானம், பிரமாவாம். அந்தப் பிரமாவால் அறியத்தக்க பதார்த்தம், பிரமேயமாம். அவைகள் இங்கே கூறப்படுகின்றன. ஆகையால் இந்தப் பதினைந்தாம் கலையை விசாரித்தலால் பிரமேயத்திலுள்ள சமுசயம் நிவர்த்தியாகின்றது. பிரமேயத்திலுள்ள சமுசயத்தைப் பாலபோதம் என்னும் நூலின் ஒன்பதாவது உபதேசத்திற் காண்க.

விடை :—காரியசகித அஞ்ஞானமாகிய அனர்த்த (பந்த) த்தின் நிவர்த்தியும், பரமானந்தமாகிய பிரமத்தின் பிராப்தியும் மோட்சத்தின் சொரூபமாம்.

வினு :—௨. அந்த மோட்சத்திற்குச் சாட்சாத் சாதனம் யாது ?

விடை :—பிரமான்ம ஐக்கியத்தின் அபரோட்சஞானம், மோட்சத்திற்குச் சாட்சாத் சாதனமாம்.

வினு :—௩. மோட்சத்திற்கு அவாந்திர (ஞானவாயிலாகச்) சாதனம் யாது ?

விடை :—நிஷ்காம கன்மம், உபாசனை முதலிய அநேகம், மோட்சத்திற்கு அவாந்திரசாதனமாயிருக்கின்றன.

வினு :—௪. அந்த ஞானத்திற்கு விஷயம் யாது ?

விடை :—ஆன்மப்பிரமவைக்கியம், ஞானத்திற்கு விஷயமாம்.

வினா :—௫. ஆன்மாவின் சொரூபம் யாது?

விடை :—தேக இந்திரிய பிராண மன புத்தி அஞ்ஞான சூனியங்களுக்கு வேறாய் அகர்த்தாவும் அபோக்தாவும் அசங்கமும் வியாபகமுமாகிய சேதனம், ஆன்மாவின் சொரூபமாம்.

3/3

வினா :—௬. பிரமத்தின் சொரூபம் யாது?

விடை :—நிஷ்பிரபஞ்சமும், அசங்கமும் பரிபூரணமுமாகிய சேதனம், பிரமத்தின் சொரூபமாம்.

வினா :—௭. பிரமான்மவைக்கியம் எப்படிப்பட்டது?

313

விடை :—சச்சிதானந்தமாயும் ஐசுவரிய சொரூபமாயும் என்றுமுள்ளது, பிரமான்வைக்கியமாம்.

வினா :—௮. ஞானத்தின் சொரூபம்

யாது ?

விடை :—ஜீவப்பிரமங்களின் அபேத நிச்சயம் ஞானத்தின் சொரூபமாம்.

வினு :—கூ. ஞானத்தின் சாட்சாத் அந்தரங்க (சமீபித்த) சாதனம் யாது ?

விடை :—பிரமநிஷ்டராகிய குருமுகமாக மகாவாக்கியார்த்த சிரவணம் செய்தல், ஞானத்தின் சாட்சாத் அந்தரங்கசாதனமாம்.

வினு :—ம. ஞானத்திற்குப் பரம்பரையாக அந்தரங்கசாதனம் யாது ?

விடை:—விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி (சமம் தமம் உபரதி தீக்ஷை சிரத்தை சமாதானம்), முமுட்சுத்துவம், "தத்" பத "துவம்" பதார்த்தங்களின் சோதனை, சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்னும் இவ்வெட்டும் ஞானத்திற்குப் பரம்பரையாக அந்தரங்கசாதன

மாம்.

வினு :—௰க. ஞானத்தின் பகிரங்க (தூரத்துள்ள) சாதனம் யாது ?

விடை :—நிஷ்காமகன்மம் நிஷ்காம வுபாசனைமுதலியன, ஞானத்தின் பகிரங்க சாதனமாம்.

வினு :—ஞானத்திற்கு எல்லாஞ்சேர்ந்து எத்தனை சாதனங்களாம் ?

விடை :—ஞானத்திற்கு எல்லாஞ்சேர்ந்து பதினெரு (௰க அல்லது கொஞ்சமதிக) சாதனங்களாம்.

பதினைந்தாம்கலை முற்றிற்று.

---

## பதினாறும்கலை.

---

வேதாந்த பதார்த்த சம்ஞாவர்ணநம்

அல்லது

இலகு (சிறிய) வேதாந்தகோசம்.

இருவகைப்பதார்த்தங்கள்.

அத்தியான்மதாபம் :— ஆன்மாவை ஆசிரயித்திருக்கும் ஸ்தூல சூட்சுமசரீரங்கள், அத்தியான்மமாம். அதிலுள்ள தாபம் (துக்கம்), அத்தியான்மதாபமாம்.

க. ஆதி :—மானசதாபம்.

உ. வியாதி :—சரீரதாபம்.

அத்தியாசம் :— பிராந்திஞானத்தின் விஷயமும் பிராந்திஞானமும்.

க. அர்த்தாத்தியாசம் :—பிராந்திஞானத்தின் விஷயமாகிய சர்ப்பமுதலியன அல்லது தேகாதிப்பிரபஞ்சம்.

உ. ஞானத்தியாசம் :—பிராந்திஞானம் (சர்ப்பமுதலியவற்றின் அல்லது தேகாதிப் பிரபஞ்சத்தின் ஞானம்).

அசம்பாவனை :—அசம்பவத்தின் ஞானம்.

க. பிரமாணகதம் :—பிரமாண (வேத) த்திலுள்ள அசம்பவத்தின் ஞானம்.

உ. பிரமேயகதம்:—பிரமேயத்தி (பிரமாணத்தின் விஷயமாகிய மோட்சமுதலியவற்றி) லுள்ள அசம்பவத்தின் ஞானம்.

அகங்காரம் :—

க. சுத்தம்:—சுவசொரூபத்தின் அகங்காரம்.

உ. அசுத்தம் :—தேகமுதலிய அனுன்மாக்களின் அகங்காரம்.

க. சாமானியம் :— தேகாதிதர்மங்களினுத்தேசமில்லாமல் கேவலம் "நான்" என்று எழும்புதல்.

உ. விசேஷம் :—தேகாதிதர்மங்களி (பெயர் ஜாதிமுதலியவற்றி) ன் உத்தேசத்தால் "நான்" என்று எழும்புதல்.

க. முக்கியம் :— தேகமுதலியவற்றோடுகூடிய சிதாபாசனையும் கூடஸ்தனை (சாட்சியை)யும் ஒன்றுபடுத்தி, அறி

யாமையால் சகல சங்காதத்திலும் " நா
ன்" என்னும் சத்தத்தைச் சேர்த்துக்
கொண்டு " நான்" என்று எழும்புதல்,
முக்கிய (சக்திவிருத்தியால் அறியத்தக்க
அகம் சப்தத்தின் அர்த்தத்தை விஷயஞ்
செய்யும்) அகங்காரம்.

உ. அமுக்கியம்: — விவேகியினுல்
(க) விவகாரகாலத்தில் தேகாதிகளோ
டுகூடிய சிதாபாசன்மாத்திரத்திலும்,
(உ) பரமார்த்ததிசையில் கூடஸ்தன்மா
த்திரத்திலும் " நான்" என்னும் சத்த
த்தைச் சேர்த்துக்கொண்டு " நான்" என்
று எழும்புதல், இரண்டுவிதமாகிய அமு
க்கிய (இலட்சணுவிருத்தியால் அறியத்த
க்க அகம் சப்தத்தின் அர்த்தத்தை விஷய
ம் செய்யும்) அகங்காரமாம்.

அஞ்ஞானம் :—

க. சமஷ்டி :—வனத்தைப்போல அ

ல்லது ஜாதியைப்போல அல்லது ஜலாசய (தடாக) த்தைப்போல ஒரு புத்திக்கு விஷயமாவது.

உ. வியஷ்டி :—விருட்சங்களைப்போல அல்லது வியக்திகளைப்போல அல்லது நீர்த்துளிகளைப்போல அநேகம் புத்திகளுக்கு விஷயமாவது.

க. மூலம் :—சுத்த சேதனத்தை மறைக்கு மஞ்ஞானம்.

உ. தூலம் :— குடமுதலியவற்றில் வளைபட்ட சேதனத்தை மறைக்கு மஞ்ஞானம்.

அஞ்ஞானத்தின் சக்தி :—அஞ்ஞானத்தின் சாமர்த்தியம்.

க. ஆவரண எது :—அதிஷ்டானத்தை மறைக்கும் அஞ்ஞானத்திலுள்ள சாமர்த்தியம்.

உ. விட்சேப எது :—பிரபஞ்சமும்

அதனது ஞானமுமாகிய விட்சேபத்தை உண்டாக்கும் அஞ்ஞானத்திலுள்ள சாமர்த்தியம்.

இலக்கணம் :—க. சொரூபவிலக்கணம் :—எப்போதுமிருப்பதாகிய வியாவர்த்தக (வேறுபிரித்தறிவிக்கும்) இலக்கணம்.

உ. தடஸ்தவிலக்கணம் :— ஏதேனும் ஓர் காலத்திருப்பதாகிய வியாவர்த்தக விலக்கணம்.

உபாசனை :—

க. சகுணம் :—காரணப்பிரம (ஈசுவர) காரியப்பிரமங் (இரணியகருப்பமுதலியவை) களின் உபாசனை.

உ. நிர்க்குணம் :—சுத்தப் பிரமத்தினுபாசனை.

கந்தம் :—க. சுகந்தம். உ. துர்க்கந்தம்.

சத்தம் :—க. வருணவடிவம். உ. ஒலிவடிவம்.

சத்தசம்பந்தம் :—க. சக்திவிருத்தி. உ. இலக்ஷணாவிருத்தி.

சமாதி :—சவிகற்பம். உ. நிருவிகற்பம்.

சமுச்சயம் :—க. பிரமாணகதம். உ. பிரமேயகதம்.

சம்பத்து :—க. தெய்வசம்பத்து. உ. அசுரசம்பத்து.

ஜாதி :—அநேக தர்மி (ஆசிரியங்) களிற் கலந்துள்ள ஒரு தர்மம்.

க. பரம் :—“குடமிருக்கிறது” “படமிருக்கிறது” என்றிவ்வாறு எங்கும் கலந்துள்ள சத்தை எதுவோ, அதை நியாயமதத்தில் பர (சிரேஷ்ட) ஜாதி என்பர்.

உ. அபரம் :—சத்தைக்கு வேறாகிய

கடத்துவமுதலிய ஜாதியை நியாயமத த்தில் அபர (சிரேஷ்டமில்லாத) ஜாதி எ ன்பர்.

க. வியாப்பியம் :— வியாபகஜாதிக் குள்ளடங்கிய (அற்பதேசத்திலுள்ள) ஜா தி, வியாப்பியஜாதியாம். மனிதத்தன் மைஜாதிக்குள் ளடங்கிய (ஏகதேசத்தி லுள்ள) பிராமணத்துவம், க்ஷத்திரியத்து வமுதலிய ஜாதிகள், வியாப்பியஜாதிக ளாதல்போல.

உ. வியாபகம் :— வியாப்பியஜாதியி னும் அதிக தேசத்திலுள்ள ஜாதி, வியா பகஜாதியாம். பிராமணத்துவமுதலிய வியாப்பியஜாதியினும் அதிக தேசத்திலு ள்ள மனுஷத்துவஜாதி, வியாபகஜாதியா தல்போல. இந்த வியாப்பிய வியாபக மென்னும் இரண்டுபேதமும் அபரத்து வஜாதிக்காம்.

சூட்சுமசரீரம் :—க. சமஷ்டி. உ. வியஷ்டி.

தூலசரீரம் :—க. சமஷ்டி. உ. வியஷ்டி.

நிக்கிரகம் :—

க. கிரமம் :—இயமநியமாதி எட்டு யோகாங்களால் கிரமமாயுண்டாகும் சித்தநிரோதம், கிரமநிக்கிரகமாம்.

உ. அடம் :— பிராணநிரோதமாகிய அடத்தால் அல்லது சாம்பவிமுதலிய முத்திரைகளின் மத்தியில் ஏதேனும் ஓர் முத்திரையினப்பியாசத்தால் உண்டாகும் சித்தநிரோதம், அடநிக்கிரகமாம்.

பரமாம்ச சன்னியாசம் :—

க. விவிதிஷை :—ஞானவிருப்பத்தால் ஞானத்தை அடையும்பொருட்டுச் செய்துகொள்ளப்பட்ட சன்னியாசம், விவிதிஷாசன்னியாசமாம்.

உ. வித்துவத் :—ஞானத்திற்குப் பிறகு வாசனக்ஷய மனோநாச தத்துவஞானங்களின் அப்பியாசவாயிலாக ஜீவன்முக்தி விலக்ஷண ஆநந்தத்தின்பொருட்டுச் செய்துகொள்ளப்பட்ட சன்னியாசம், வித்துவற்சன்னியாசமாம்.

பிரஞ்ஞை :—க. ஸ்திதப்பிரஞ்ஞை. உ. அஸ்திதபிரஞ்ஞை.

பிரபஞ்சம் :—க. பாகியம். உ. ஆந்தரம்.

மோட்சம் : —க. அனர்த்தநிவர்த்தி. உ பரமானந்தப்பிராப்தி.

வாக்கியம் :— க. அவாந்திரவாக்கியம். உ. மகாவாக்கியம்.

வாதம் :—க. பிரதிபிம்பவாதம். உ. அவச்சேதவாதம்.

விபரீதபாவனை :—க. பிரமாணகதம். உ. பிரமேயகதம்.

மூவகைப்பதார்த்தங்கள்.

அத்தியான்மமுதலியன :— க. இந்திரியம் (அத்தியான்மம்). உ. தேவதை (அதிதெய்வம்). ௩. விஷயம் (அதிபூதம்).

அந்தக்கரணதோஷம் :—

க. மலம் :— ஜன்மஜன்மாந்திரங்களின் பாவம்.

உ. விட்சேபம் :—சித்தத்தின் சஞ்சலத்துவம்.

௩. ஆவரணம் :—சொரூபத்தின் அஞ்ஞானம்.

அர்த்தவாதம் :— நிந்தையையாவது துதியையாவது அறிவிக்கும் வாக்கியம்.

க. அநுவாதம்:—அன்னியப் பிரமாணத்தாற் சித்தித்த அர்த்தத்தை அறிவிக்கும் வாக்கியம். "அக்கினி பனிக்கு மருந்து" என்னும் வாக்கியம்போல.

௨. குணவாதம் :—அன்னியப்பிரமா ண விருத்தமாகிய விதேய அர்த்தத்தை க் குணவாயிலாகத் துதிக்கும் வாக்கியம்.

பிரகாசமாகிய குணத்தின் சமத்தன் மையால் துதிக்கும் " யூபம் (எக்கியகம் பம்) ஆதித்தன்" என்னும் வாக்கியம் போல.

௩. பூதார்த்தவாதம் :—சுவார்த்தத்தி ல் பிரமாணமுள்ளதாய் இலட்சணையினு லே விதேய அர்த்சத்தின் சிலாக்கியத் தை அறிவிக்கும் வாக்கியம் " வஜ்ஜிர ஹஸ்தன் புரந்தரன்" என்னும் வாக்கி யம்போல.

அவதி :—வரம்பு (எல்லை).

க. ஞானத்தினது. ௨. வைராக்கி யத்தினது. ௩. உபராமத்தினது :— சித்தநிரோதமாகிய உபரதியி (உபசாந்தி) னது.

அவஸ்தை :— மூன்று தேகவிவகாரங்களின் காலம்.

க. ஜாக்கிரம். உ. சொப்பனம். ந. சுழுத்தி.

ஆநந்தம் :—

க. பிரமாநந்தம் :— சமாதியில் உண்டாகிய அல்லது சுழுத்தியிலுள்ள பிம்பபூதமாகிய ஆநந்தம்.

உ. விஷயாநந்தம் :—ஜாக்கிர சொப்பனங்களில் விஷயப்பிராப்தியாகிய நிமித்தத்தால் ஏகாக்கிரமாகிய சித்தத்திலுண்டாகும் ஆன்மசொரூபமாகிய ஆநந்தத்தின் க்ஷணிகப்பிரதிபிம்பம். இதனையே இலேசாநந்தமென்றும் மாத்திராநந்தமென்றும் கூறுவர்.

ந. வாசனாநந்தம் :—சுழுத்தியினின்றெழுந்தல்முதலிய உதாசீனதசையில் அநுபவிக்கப்படும் ஆநந்தம்.

ஆன்மா :—

௧. ஞானான்மா :—புத்தி.

௨. மகானான்மா :—மகதத்துவம்.

௩. சாந்தான்மா :—சுத்தப்பிரமம்.

ஆன்மாவின் பேதம் :—

௧. மித்தியான்மா :—ஸ்தூல சூட்சுமசங்காதம்.

௨. கௌணான்மா :—புத்திரன்.

௩. முக்கியான்மா :—சாட்சி (கூடஸ்தர்).

இலட்சணதோஷம் :—

௧. அவ்வியாப்தி :— இலட்சியத்தின் ஏகதேசத்தில் இலட்சணமிருத்தல்.

௨. அதிவியாப்தி :— இலட்சியத்தில் வியாபித்து, இலட்சியமல்லாததிலு மிலட்சணமிருத்தல்.

௩. அசம்பவம் :—இலட்சியத்தில் இலட்சணமில்லாதிருத்தல்.

உத்தேசமுதலியன :—

க. உத்தேசம் :—பெயரைக் கீர்த்தித் (சொல்லு) தல்.

உ. இலட்சணம் :— அசாதாரணதர்மம் (ஒன்றிலிருப்பதாகியதர்மம்).

ஙு. பரீட்சை :—பதக்கிருதி (அதிவியாப்தி முதலிய தோஷங்களை விசாரித்தல்).

உலகம் :—க. சொர்க்கம். உ. மத்தியம். ஙு. பாதாளம்.

ஏஷணை :—இச்சை அல்லது வாசனை. க. புத்திரேஷணை. உ. வித்தேஷணை. ஙு. உலக ஏஷணை :— எல்லாருமென்னைத் துதிக்கவேண்டும் ; ஒருவருமென்னை நிந்திக்கலாகாதென்னு மிச்சை, அல்லது பரலோக இச்சை.

ஏதுமுதலியன :— க. ஏது. உ சொரூபம். ஙு. பலம்.

கரணம் :—கன்மத்தின் சாதனம்.

க. மனம். உ. வாக்கு. ௩. காயம்.

கர்த்தவ்வியமுதலியன :—

க. கர்த்தவ்வியம் :— செய்யத்தக்க ஞானசாதனம்.

உ. ஞாதவ்வியம்:—அறியத்தக்க ஞானத்தின் விஷயம் (பிரமான்ம ஐக்கியம்).

௩. பிராப்தவ்வியம் :— அடையத்தக்க ஞானத்தின் பலமாகிய மோக்ஷம்.

கன்மம் :—

க. புண்ணியம் :— உ. பாவம். ௩. மிசிரம்.

கன்மம் :—

க. சஞ்சிதம் :— ஜன்மாந்திரங்களில் சேர்க்கப்பட்ட கன்மம்.

உ. ஆகாமியம் :—வர்த்தமான (இந்த) ஜென்மத்தில் செய்யப்படும் கன்மம்.

ந. பிராரத்தம் :—வர்த்தமான ஜன்மத்தின் ஆரம்பத்திற்கேதுவாகிய கன்மம்.

கன்மமுதலியன :—

க. கன்மம் :—வேதவிகிதகன்மம்.

உ. விகன்மம் :—வேதத்திற்கு விருத்தமாகிய கன்மம்.

ந. அகன்மம் :— இரண்டுவிதகன்மத்தையும் செய்யாதிருத்தல்.

காரணவாதம் :—

க. ஆரம்பம் :— பாட்டன்முதலியவர்களால் செய்யப்பட்ட பழையவீடு இடிந்துபோக, அதிலுள்ள செங்கல்முதலிய சாமக்கிரிகைகளால் மறுபடியும் புதுவீட்டை ஆரம்பித்தல்போல, காரியமாகிய பிருதிவிமுதலியவற்றின் நாசத்தன்மைக்குக் காரணமாகிய பரமாணுக்கள் கெடாதிருக்கின்றன. அவற்றால் மறுபடியும்

வேறு பிருதிவிமுதலியவற்றின் ஆரம்பம் உண்டாகிறது. இப்படி நியாயமதத்தில் ஆரம்பவாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது. இதில் காரியகாரணங்களுக்குப் பேதமுண்டு.

உ. பரிணாமம் :— பாலின் பரிணாமம் (வேற்றுருவம்) தயிராதல்போலச் சாங்கியமதத்தில் பிரகிருதியின் பரிணாமம், ஜகத்தாம். உபாசகர்களது மதத்தில் பிரமத்தின் பரிணாமம், ஜகத்தும் ஜீவனுமாம். இப்படி அவர்கள் பரிணாமவாதம் ஒப்பியிருக்கின்றார்கள். இதில் காரியகாரணங்களுக்கு அபேதமுண்டு.

ந. விவர்த்தம் :—நிர்விகாரமாகிய இரஜ்ஜுவில், இரஜ்ஜுவாகிய அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய வேற்றுருவமாகிய சர்ப்பமுண்டாகின்றது. அது இரஜ்ஜுவின் விவர்த்த (கற்பிதகாரி

ய) மாம். அதுபோல நிர்விகாரப் பிரம த்தில் அஷ்டானப் பிரமத்தினும் விஷம சத்தையுடைய வேற்றுருவமாகிய ஜக த்துண்டாகின்றது. அது பிரமத்தின் விவர்த்த (கற்பிதகாரிய) மாம். இப்ப டி வேதாந்த சித்தாந்தத்தில் விவர்த்த வாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது.

இதிலும் காரியகாரணங்களுக்குப் பாத த்தினுலாகிய அபேதமுண்டு.

காலம் :—

க. இறப்பு. உ. எதிர்வு. ௩. நி கழ்வு.

குருடுமுதலியன :— குருடுமுதலியன நேத்திரத்தின் தர்மமாம். இங்கே குரு டாகிய நேத்திரத்தின் தர்மமானது செ விடு ஊமைமுதலிய மற்ற இந்திரியங்க ளின் தர்மங்களேயும் குறிப்பிப்பதாயிருக் கின்றது. மந்தத்தன்மையும் தெளிவும்

சகல இந்திரியங்களுக்கும் சமமென்றறிக.

க. குருடு :—நேத்திரத்தால் எவ்விதத்தாலும் தனது விஷயத்தைக் கிரகியாதிருத்தல்.

உ. மந்தத்தன்மை :— இந்திரியத்தால் தனது விஷயத்தைச் சொற்பமாகக் கிரகித்தல்.

ங. தெளிவு :—இந்திரியத்தால் தனது விஷயத்தைத் தெளிவாகக் கிரகித்தல்.

சம்பந்தம் :—க. சையோகம். உ. சமவாயம். ங. தாதான்மியம்.

சரீரம் :—க. ஸ்தூலம். உ. சூட்சுமம். ங. காரணம்.

ஜாக்கிரம் :—

க. ஜாக்கிரஜாக்கிரம் :— வர்த்தமான ஜாக்கிரத்தில் உண்டாகும் சொருப

சாக்ஷாத்காரம்.

உ. ஜாக்கிரசொப்பனம் :— ஜாக்கிரத்தில் உண்டாகும் சென்ற அல்லது இனிவரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராச்சியம்.

ந. ஜாக்கிரசுழுத்தி :— ஜாக்கிரத்தில் பிராந்தியினுல் உண்டாகும் ஜடசொரூபமாகிய விருத்தி.

சிரவணமுதலியவற்றின் பலம் :— க. பிரமாணசமுசயநாசம். உ. பிரமேயசமுசயநாசம். ந. விபரியயநாசம்.

சுழுத்தி :—

க. சுழுத்திஜாக்கிரம் :—சாத்வீக விருத்திபூர்வகமாகிய சுகசுழுத்தி.

உ. சுழுத்திசொப்பனம் :— இராஜசவிருத்தி பூர்வகமாகிய துக்கசுழுத்தி.

ந. சுழுத்திசுழுத்தி :—தாமசவிருத்தி பூர்வகமாகிய காட (ஆழ்ந்த) சுழுத்தி.

சுழுத்திமுதலியன :— க. சுழுத்தி. உ. மூர்ச்சை. ங. சமாதி.

சொப்பனம் :—

க. சொப்பனஜாக்கிரம் :— எதார்த்தமாகிய பொருளைச் சொப்பனத்திற் காணுதல்.

உ. சொப்பனசொப்பனம் :—சொப்பனத்தில் இரச்சுசர்ப்பமுதலிய பிராந்திகளைக் காணுதல்.

ங. சொப்பனசுழுத்தி :— கண்டசொப்பனத்தின் மறதி (நினைவின்மை).

ஜீவன் :—

க. பாரமார்த்திகன் :—சாட்சி (கூடஸ்த) சேதனம்.

உ. வியாவகாரிகன்:—சாபாச அந்தக்கரணரூப ஜீவன்.

ங. பிராதிபாசிகன் :—சாபாச அந்தக்கரணரூப வியாவகாரிக ஜீவனிடத்திற்

சொப்பனத்தில் அத்தியஸ்தமாகும் ஜீவன்.

க. விசுவன்:—ஜாக்கிரத்தில் மூன்று தேகத்திற்கும் அபிமானியாகிய ஜீவன்.

உ. தைஜசன் :—சொப்பனத்தில் ஸ்தூலதேகத்தினபிமானத்தை விட்டுச், சூட்சுமகாரணமென்னும் இரண்டு தேகங்களின் அபிமானியாயுள்ள அதே ஜீவன்.

ஙா. பிராஞ்ஞன்:—சுழுத்தியில் ஸ்தூல சூட்சுமதேகத்தின பிமானத்தை விட்டுக், காரணதேகமொன்றின் அபிமானியாயுள்ள அதே ஜீவன்.

ஞாதாமுதலியன :—க. ஞாதா (காண்பான்). உ. ஞானம் (காட்சி). ஙா. ஞேயம் (காணப்படுபொருள்).

ஞானப்பிரதிபந்தகம் :— சமுசயம். உ. அசம்பாவனை. ஙா. விபரீதபாவனை.

ஞானமுதலியன :—க. ஞானம். உ. வைராக்கியம். ௩. உபரதி.

தாபம் :—துக்கம்.

க. அத்தியான்மம் :—ஸ்தூல சூட்சுமசரீரங்களி லுண்டாகும் ஆதிவியாதியாகிய துக்கம், அத்தியான்மதாபமாம்.

உ. அதிதெய்வம் :—தெய்வத்தினுலுண்டாகும் சீதம் உஷ்ணம் பெருமழை மழையின்மை மின்னல் இடி பூகம்பமுதலிய துக்கம், அதிதெய்வதாபமாம்.

௩. அதிபூதம் :—தனது சரீரத்திற்கு வேறுகிய நேத்திரத்திற்கு விஷயமாகும் பிராணி (சோர வியாக்கிர சத்துருமுதலியவை) களால் உண்டாகும் துக்கம், அதிபூததாபமாம்.

நாதமுதலியன :—

க. நாதம் :—ஓங்காரம் அல்லது சத்தகுணம் அல்லது பணாமுதலிய (௪)

வாக்குகள்.

உ. விந்து :—ஓங்காரத்தின் அலட்சியார்த்தமாகிய துரியபதம்.

ங. கலை :—ஓங்காரத்தின் அகாராதி மாத்திரை. பரைவார்க்காக்கிய அமிசம் (சத்தத்தின் அவயவம்).

நிவர்த்தி (தாதான்மியத்தின்) :—

பிரமஜத்தின் :—ஞானத்தினால் பிராந்தி (அவிவேகம்) நாசமாக, பிரமஜதாதான்மியத்தின் நிவர்த்தியுண்டாகின்றது.

உ. சகஜத்தின் :— சகஜதாதான்மியத்திற்கு ஞானத்தால் பாதமும், ஞானியின் தேகம் விழுந்தபின் நாசமு முண்டாகின்றது.

ங. கர்மஜத்தின் :—ஞானியின் கர்மஜதாதான்மியம் பிராரத்தபோகம் முடிவாகவே நிவர்த்தியாகின்றது.

பாவகன்மம் :—க. உத்கிருஷ்டம். உ.

மத்திமம். ௩. சாமானியம்.

புண்ணியகன்மம் :— ௧. உத்கிருஷ்டம். ௨. மத்திமம். ௩. சாமானியம்.

பிரபஞ்சம் :—௧. ஸ்தூலம். ௨. சூட்சுமம். ௩. காரணம்.

பிரமம் :—௧. விராட்டு. ௨. இரணியகருப்பம். ௩. ஈசுவரன்.

பிராணாயாமம் :—௧. பூரகம். ௨. கும்பகம். ௩. இரேசகம்.

பிராரத்தம் :—௧. இச்சை. ௨. அனிச்சை. ௩. பரவிச்சை.

மிசிரகன்மம் :— ௧. உத்கிருஷ்டம். ௨. மத்திமம். ௩. சாமானியம்.

மூர்த்தி :—௧. பிரமா. ௨. விஷ்ணு. ௩. சிவன்.

வாதமுதலியன :—

௧. வாதம் :—குருசீட சம்வாதம்.

உ. செற்பம் :— யுக்திப்பிரமாணங்களில் வல்ல பண்டிதர்களின் வாதம்.

ரு. விதண்டை :—மூர்க்கர்களது பிரமாண யுக்தியில்லாத வாதம்.

விதிவாக்கியம் :—

க. அபூர்வவிதி :— அபூர்வக்கிரியையை விதிக்கும் வாக்கியம்.

உ. நியமவிதி :—அடையப்பட்ட இரண்டு பட்சங்களில் ஒன்றை விதிக்கும் வாக்கியம்.

ரு. பரிசங்கியாவிதி :—இரண்டு பட்சத்தில் ஒன்றின் நிஷேதத்தை விதிக்கும் வாக்கியம்.

வேதத்தின் காண்டம் :—

க. கன்மம். உ. உபாசனை. ரு. ஞானம்.

நால்வகைப்பதார்த்தங்கள்.

அநுபந்தம் :—தன்னை அறிந்த பிறகு

புருஷனைக் கிரந்தத்தில் பொருத்துவது.

க. அதிகாரி :— மலவிக்ஷேபதோஷங்களில்லாது, அஞ்ஞானதோஷமுள்ளவனாய், விவேகமுதலிய நான்கு சாதனங்களோடுகூடிய புருஷன் வேதாந்தத்திற்கு அதிகாரி.

உ. விஷயம் :—பிரமான்ம ஐக்கியம், வேதாந்தசாஸ்திரத்தின் விஷயமாம்.

ங. பிரயோஜனம் :— சகல துக்கநிவர்த்தியும் பிரமானந்தப் பிராப்தியுமாகிய மோட்சம்.

ச. சம்பந்தம் :—கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாதக பிரதிபாத்தியத்தன்மையாகிய சம்பந்தமாம்.

அந்தக்கரணம் :—க. மனம் :—சங்கற்ப விகற்பமாகிய விருத்தி.

உ. புத்தி :—நிச்சயமாகிய விருத்தி.

ங. சித்தம் :—சிந்தி (ஸ்மரி) த்தலா

கிய விருத்தி.

ச. அகங்காரம் :— அகந்தையாகிய விருத்தி.

ஆர்த்தன்முதலிய பக்தர் :—

க. ஆர்த்தன் :—அத்தியான்மமுதலிய துக்கங்களால் வியாகூலமுள்ளவன்.

உ. ஜிஞ்ஞாசு :—பகவானது உண்மையை அறியுமிச்சையுடையவன்.

ங. அர்த்தார்த்தி :—இகலோக பரலோகபோகங்களில் இச்சையுடையவன்.

ச. ஞானி :—ஜீவன்முக்தனாகிய வித்துவான்.

ஆசிரமம் :—க. பிரமசரியம். உ. கிரகஸ்தம். ங. வானப்பிரஸ்தம். ச. சன்னியாசம்.

உற்பத்திமுதலிய கிரியைகள் :—இங்கே கிரியை என்னும் சத்தத்தால் கிரியையாகிய கன்மத்தின் பலம் சொல்லப்படு

கின்றது.

க. உற்பத்தி :—முதற்கணம் (ஜன்மம்). குலாலனது கிரியைக்குப் பயனாகிய குடத்தின் உற்பத்திபோல.

உ. பிராப்தி :—நடத்தலென்னும் கிரியையின் இச்சித்த இடத்தை அடைதலாகிய பலம்.

ந. விகாரம் :—அன்னியவுருவத்தை யடைதல். சமையற்கிரியை (தொழிலு) க்குப் பலமாகிய அன்னத்தின் விகாரம் (திரிபு) போல.

ச. சம்ஸ்காரம் :—(க). மலத்தின் நிவர்த்தி. (உ). குணத்தின் பிராப்தி என்னும் பேதத்தால் சம்ஸ்காரம் இரண்டுவகையாம். (க). வஸ்திரத்தைக் கழுவுதலாகிய கிரியைக்குப் பலமாகிய மல நிவர்த்திபோலும். (உ). குசும்பாவில் வஸ்திரத்தை நனைத்தலாகிய கிரியை

க்குப் பலமாகிய இரத்தகுணத்தின் உற்ப த்திபோலும்.

சத்தப்பிரவிருத்தியின் நிமித்தம் :— க. ஜாதி. உ. குணம். ௩. கிரி யை. ௪. சம்பந்தம்.

சமாதிவிக்கினம் :—க. இலயம். உ. விட்சேபம். ௩. கஷாயம். ௪. இர சாஸ்வாதம்.

சன்னியாசம் :—க. குடீசகம். உ. பகூதகம். ௩. அமிசம். ௪. பரமா மிசம்.

சித்தநிரோதயுக்தி :—க. அத்தியான் மவித்தை. உ. சாதுசங்கம். ௩. வா சனுத்தியாகம். ௪. பிராணுயாமம்.

தர்மமுதலியன :—நான்கு புருஷார் த்தம்.

க. தருமம் :—சகாம அல்லது நிஷ் காம புண்ணியம்.

உ. அர்த்தம் :— இந்தவுலகத்திலும் பரலோகத்திலுமுள்ள போகத்திற்குச் சாதனங்களாகிய திரவியமுதலியன.

ரு. காமம் :—இகலோக பரலோகங்களின் போகம்.

சு. மோட்சம் :— அனர்த்தநிவர்த்தி ஆனந்தப்பிராப்தி.

பரிசம் :—க. சீதம். உ. உஷ்ணம். ரு. மிருது. சு. கடினம்.

பிரமவித்துமுதலியோர் :—

க. பிரமவித்து :—நான்காவது பூமியிலுள்ள ஞானி.

உ. பிரமவித்துவரன் :—ஐந்தாம் பூமியிலுள்ள ஞானி.

ரு. பிரமவித்துவரியான் :— ஆறும்பூமியிலுள்ள ஞானி.

சு. பிரமவித்துவரிஷ்டன் :— ஏழாம் பூமியிலுள்ள ஞானி.

பிரமாணம் :—பிரமாஞானத்திற்குக் க ரணம், பிரமாணம். இங்கே நான்கு பிர மாணங்களைக் கூறுதல் நியாயசாஸ்திர த்தின்படியாம்.

க. பிரத்தியட்சம். உ. அனுமான ம். ௩. உவமானம். ௪. சத்தம்.

புருஷார்த்தம் :—க. தருமம். ௨. அர்த்தம். ௩. காமம். ௪. மோ ட்சம்.

பூஜாபாத்திரம் :—க. பிரமநிஷ்டர். உ. முமூட்சு. ௩. சிவபக்தன். ௪. சுவதர்மநிஷ்டன்.

பூதக்கிராமம் :—யோனி.

க. ஜராயுஜம் :— கருப்பையினின்று தோன்றும் மனிதர் மிருகமுதலியன.

உ. அண்டஜம் :— முட்டையினின்று தோன்றும் பறவை பாம்புமுதலியன.

௩. உற்பிஜம் :—வித்து வேர் கிழங்கு

கொம்பு கொடி முதலியவற்றினின்று ண்டாகும் விருட்சமுதலியன.

ச. சுவேதஜம் :— வேர்வைமுதலிய வற்றினின்று தோன்றும் பேன் மூட்டு ப்பூச்சிமுதலியன.

மைத்திரிமுதலியன :—

க. மைத்திரி :— பணமுள்ளவனிட த்திலாவது, குணத்திற் சமானமான வனிடத்திலாவது, ஈசுரபக்தனிடத்திலா வது, விஷயிகாமி உபாசகர்களிடத்திலா வது "இவர்கள் என்னுடையவர்கள்" எ ன்றுண்டாகும் புத்தி.

உ. கருணை :—துக்கமுடையவன், கு ணத்தில் தாழ்ந்தோன், அஞ்ஞானி, ஜிஞ்ஞாசு என்னுமிவர்களிடத்திலுள்ள விரக்கம்.

ங. முதிதை :— புண்ணியவான், கு ணத்தில் மேற்பட்டவன், ஈசுவரன், மு

க்தன் என்னுமிவர்களிடத்திலுள்ள பிரியம்.

௪. உபேட்சை:—பாவி, அவகுணன், துவேஷி, பாமரன் என்னுமிவர்களிடத்திலுள்ள இராகத்துவேஷமில்லாமையாகிய உதாசீனத்தன்மை.

மோட்சத்துவாரபாலகர் :—

௧. சமம். ௨. சந்தோஷம். ௩. விசாரம் (விவேகம்). ௪. சாதுசங்கம்.

யோகபூமி :—௧. வாக்குலயம். ௨. மனோலயம். ௩. புத்திலயம். ௪. அகங்காரலயம்.

வருணம் :—௧. பிராமணன். ௨. க்ஷத்திரியன். ௩. வைசியன். ௪. சூத்திரன்.

வர்த்தமானஞானப்பிரதிபந்தம் :—

௧. விஷயாசக்தி. ௨. புத்திமந்தம். ௩. குதர்க்கம். ௪. விபரீததுராக்கிரகம்.

வர்த்தமானஞானப்பிரதிபந்தநிவர்த்தியி ன்எது :—

க. சமமுதலியன :—இது விஷயாசக் தியை நிவர்த்திப்பது.

உ. சிரவணம் :—இது புத்தியின் ம ந்தத்தன்மையை நிவர்த்திப்பது.

ங. மனனம் :—இது குதர்க்கத்தை நிவர்த்திப்பது.

ச. நிதித்தியாசனம் :— விபரியயத்தி (விபரீதபாவனையி) லுண்டாகும் தூராக் கிரகஅகந்தையை நிவர்த்திப்பது.

விவேகமுதலியன :—க. விவேகம். உ. வைராக்கியம். ங. ஷட்சம்பத்தி. ச. முமுட்சுத்துவம்.

வேதம் :—க. இருக்கு. உ. எசுர். ங. சாமம். ச. அதர்வணம்.

ஐவகைப்பதார்த்தங்கள்.

அஞ்ஞானத்தின்பேதம் :— அஞ்ஞான

த்தில் வேதாந்தாசாரியர்களின் மதபேதம்.

க. மாயைஅவித்தைவடிவம் :— சிலர் (வித்தியாரண்ணியசுவாமிகள்) அஞ்ஞானத்தை மாயை (சமஷ்டி அஞ்ஞானமய ஈசுவரவுபாதி) அவித்தை (வியஷ்டி அஞ்ஞானமய ஜீவவுபாதி) வடிவமாக ஒப்பியிருக்கின்றனர்.

உ. ஞானக்கிரியாசக்திவடிவம் :— சிலர் அஞ்ஞானத்தை ஞானசக்திக் கிரியாசக்தியாகக் கொள்ளுகின்றார்கள்.

ந. விட்சேபஆவரணவடிவம் :—சிலர் அஞ்ஞானத்தை ஆவரணவடிவமென்றும் விட்சேப (த்திற்கு ஏதுவாகிய சக்தி) வடிவமென்றும் கொள்ளுகின்றனர்.

ச. சமஷ்டிவியஷ்டிவடிவம் :—சிலர் அஞ்ஞானத்தைச் சமஷ்டி (ஈசுவரவுபாதி) வியஷ்டி (ஜீவவுபாதி) வடிவமெ

ன்று கொள்ளுகின்றனர்.

ரு. காரணவடிவம் :—சிலர் அஞ்ஞா த்தை ஜகத்திற்கு உபாதானகாரணமாகிய மூலப்பிரகிருதிமய ஈசுவரவுபாதி வடிவ மாகக் கொள்ளுகின்றனர். அந்தப்பட் சத்தில் ஜீவன் காரிய (அந்தக்கரண) உபா திவுடையவனுகக் கொள்ளப்பட்டிருக்கி ன்றனன்.

அபாவம் :—இல்லையென்னும் தோற்ற த்திற்கு விஷயம்.

க. பிராகபாவம் :—காரியத்தின் உற் பத்திக்கு முன்னுள்ள காரியத்தின் அ பாவம் (இன்மை).

உ. பிரத்துவம்சாபாவம் :— நாசத்தி ற்குப்பின் உண்டாகும் அபாவம்.

ங. அன்னியோன்னியாபாவம் :— ஒன்றிலொன்றின்மை. அது உருவபே தம்போலும், கடபடங்களின் பேதம்போ

லுமாம்.

ச. அத்தியந்தாபாவம் :—மூன்றுகா லத்திலுமில்லாமை. அது வாயுவில் உ ருவமில்லாமைபோலும்.

ரு. சாமயிகாபாவம் :—ஓர் (எடுத்து க்கொள்ளும்) சமயத்தில் பூமிமுதலியவ ற்றில் உண்டாகும் குடத்தின் அபாவம்.

இயமம் :—க. அஹிம்சை. உ. ச த்தியம். ந. பிரமசரியம். ச. அப ரிக்கிரகம் :—நிருவாகத்திற்கு அதிகமா கத் தனத்தைக் கொள்ளாதிருத்தல். ரு அஸ்தேயம் :—கள்ளாமை (திருடாதிரு த்தல்).

உபவாயு :—

க. நாகன் :— வாந்திக்கேதுவாகிய வாயு.

உ. கூர்மன் :— கண்ணிமைத்தற்கே துவாகிய வாயு.

ஈ. கிரிகரன் :— தும்மலுக்கேதுவாகி
ய வாயு.

௬. தேவதத்தன் :—கொட்டாவி வி
டுவதற்கேதுவாகிய வாயு.

௫. தனஞ்சயன் :— வீங்குதற்கேது
வாகிய வாயு.

ஏதுப்போலி :—ஏதுவின் இலக்கண
(சாத்தியத்தின் சாதகத்துவ) மில்லாததா
ய், ஏதுவைப்போல தோற்றும் துஷ்ட
ஏது, அல்லது ஏதுவின் ஆபாசம் (தோ
ஷம்), ஏதுப்போலியாம்.

௧. சவ்வியபிசாரம் :— துணிபொரு
ளாகிய சாத்தியத்தின் (அக்கினியின்) ஆசிர
ய (பர்வத) த்திலும், அதன் அபாவத்தி
ன் ஆசிரயத்தி (மடுவி) லும் (சபக்கவிப
க்கங்களெல்லாவற்றிலும்) இருக்கும் ஏ
து, சவ்வியபிசாரமாம். அது பர்வதம்
அக்கினியுடையது ; பிரமேயமா (அள

வையால் அளக்கத்தக்கதா) கலின்' என்பதாம். இதனையே அநைகாந்திக (பிறழ்ச்சியுடைய) ஏதுவென்றும் கூறுவர்.

உ. விருத்தம் :—சாத்தியமல்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏது, விருத்தமா (மாறுகொள்வதா) ம். அது 'சத்தம் நித்தியம் ; கிரியாஜன்னியமாயிருத்தலால்' என்னும் ஏது, சாத்திய (நித்திய) மல்லா அநித்தியத்தில் வியாபித்திருக்கின்றது; ஏனெனின், ஏது கிரியாஜன்னியமோ, அது அநித்தியமாம் ; கடம் போல என்னும் நியமமிருத்தலால் என வரும்.

ந. சற்பிரதிபக்கம் :— சாத்தியத்தின் அபாவத்தைச் சாதிக்கும் அன்னிய ஏது எதற்கிருக்கின்றதோ, அது சற்பிரதிபக்கமா (மறுதலையுடையதா) ம். அது' சத்தம் நித்தியமாம் ; செவிக்கு வி

ஷயமாதலால்' என்னும் ஏதுவினது சாத்திய (நித்தியத்துவ) த்தின் அபாவத்தைச் சாதிக்கும், 'சத்தமநித்தியமாம் ; காரியமாகையால், கடத்தைப்போல' என்னும் ஏதுப்போல, யாது காரியமோ, அது அநித்தியமேயாம்.

ச. அசித்தம் :—'சத்தம் குணமாம் ; நேத்திரத்திற்கு விஷயமாதலால் ; உருவத்தைப்போல'. இங்கே கண்ணிற்கு விஷயமாதலாகிய ஏதுவின் சொரூபம் சத்தமாகிய பட்சத்தில்லை. ஏனெனின், சத்தம் சிரவண ஜந்நியஞானத்திற்கு விஷயமாதலால்.

ரு. பாதிதம் :— எதனது சாத்தியத்தின் அபாவம் வேறொரு பிரமாணத்தால் நிச்சயிக்கப்படுகின்றதோ, அது பாதிதம். அது 'அக்கினிசூடில்லாதது திரவியமாயிருத்தலால்' என்னும் ஏதுவின

து சாத்தியத்தி (உஷ்ணமின்மையி) ன் அபாவம் (சூடு) தொக்கிந்திரியத்தால் கிரகிக்கப்படுகின்றது என்பதுபோல.

கன்மம் :—க. நித்தியம் :—எப்போதும் செய்யவேண்டியகன்மம் (ஸ்நான சந்திமுதலியன).

உ. நைமித்திகம் :— ஏதேனுமோர் நிமித்தத்தை முன்னிட்டுச் செய்யவேண்டிய கன்மம் (கிரகணசிராத்தமுதலியன).

ங. காமியம் :—காமத்தின்பொருட்டு விதிக்கப்பட்ட கன்மம் (யாகாதிகள்).

ச. பிராயச்சித்தம் :— பாவநிவர்த்தியின்பொருட்டு விதிக்கப்பட்ட கன்மம்.

ரு. நிஷித்தம் :— செய்யாமலிருக்கும்பொருட்டு சொல்லப்பட்ட கன்மம் (பிரமகத்திமுதலியன)

எ. கன்மேந்திரியம் :—க. வாக்கு. உ. பாணி. ங. பாதம். ச. உப

ஸ்தம். ௫. குதம்.

கியாதி :—தோற்றுதலும் சொல்லுத லுமாகிய விவகாரம்.

௧. அசத்கியாதி :— சூனியவாதிகள். அசத்தாகிய (சொரூபமில்லாத) சர்ப்பத்தி ன் தோற்றமும் சொல்லுதலும் இரச்சு தேசத்தில் ஒப்புகின்றார்கள்.

௨. ஆன்மக்கியாதி :— க்ஷணிகவிஞ் ஞான வாதிகள் ஒப்பியிருக்கும் க்ஷணிக புத்தியாகிய ஆன்மாவின் சர்ப்பரூபத் தோற்றமும் சொல்லுதலுமாம்.

௩. அன்னியதாக்கியாதி :—நையாயி கர் புற்றுமுதலிய தூரதேசத்திலுள்ள சர் ப்பத்தின் பிரதீதியும் (தோற்றமும்) சொ ல்லுதலும் தோஷபலத்தினுலே இரச்சு தேசத்திலொப்புகிறார்கள்; அது அன் னியதாக்கியாதியாம். அல்லது இரச்சு வாகிய ஞேயத்திற்குச் சர்ப்பரூபமாகிய

ஞானம் ஒப்பியிருக்கின்றார்கள் ; அது அன்னியதாக்கியாதியாம்.

ச. அக்கியாதி :—சாங்கியப்பிரபாகர மதானுசாரிகள், "இது சர்ப்பம்" என்னுமிடத்து, "இது" எனும் அமிசம் இரச்சுவின் இதுவென்னுந்தன்மையின் பிரத்தியட்சஞானமாம் ; "சர்ப்பம்" என்பது முன்கண்ட சர்ப்பத்தின் ஸ்மிருதிஞானமாம் ; தோஷ பலத்தால் இவ்விரண்டு ஞானங்களது அக்கியாதி அதாவது அவிவேகம் (பேதத்தோற்றமின்மை) உண்டாகின்றதென்று ஒப்புகிறார்கள். அது அக்கியாதியாம்.

ரு. அநிர்வசனீயக்கியாதி :— வேதாந்தசித்தாந்தத்தில் :—இரச்சுவில் அதனது அவித்தையால் அநிர்வசனீய (சத்தசத்விலட்சண) சர்ப்பமும் அதன் ஞானமும் உண்டாகின்றன. அதனது கியாதி

என்னும் தோற்றமும் சொல்லுதலுமா
கியவிவகாரம், அநிர்வசனீயக்கியாதியாம்.

கிலேசம் :—

க. அவித்தை :—(க). துக்கத்தில் சுகபுத்தி. (உ). அநான்மாவில் ஆன்மபுத்தி. (ங). அநித்தியத்தில் நித்தியபுத்தி. (ச). அசுத்தத்தில் சுத்தபுத்தி என்பனவாம். இது நான்குவிதமாகிய காரிய அவித்தையாம்.

உ. அஸ்மிதை :—சாட்சி புத்திகளின் ஐக்கிய (ஆன்மாவும் புத்தியும் ஒன்று என்னும்) ஞானம் (சாமானிய அகங்காரம்).

ங. இராகம் :—திடஆசை (பேராசை).

ச. துவேஷம் :—குரோதம்.

ரு. அபினிவேசம் :—மரணபயம்.

கோசம் :—க. அன்னமயம். உ.

பிராணமயம். ௩. மனோமயம். ௪. விஞ்ஞானமயம். ௫. ஆனந்தமயம்.

சத்தமுதலியன :—

௧. சத்தம். ௨. பரிசம். ௩. உருவம். ௪. இரசம். ௫. கந்தம்.

ஜீவன்முக்திப்பிரயோசனம் :—ஜீவன்முக்தி ஞானிக்குச் சித்தித்திருந்தபோதிலும், இங்கே ஜீவன்முக்தியென்னும் சத்தத்தால் ஜீவன்முக்தியின் விலட்சண ஆனந்தத்தின் அவஸ்தை (ஐந்தாவது முதலிய பூமி) கள் கொள்ளப்படுகின்றன. அதன் பிரயோஜனம் ஐந்துவகையாம்.

௧. ஞானரட்சை :—ஒரு முறை உண்டாகிய திடஞானம் நாசமாகாமையால், ஞானரட்சைதானே சித்திக்கின்றது. என்றாலும் இங்கே நிரந்தரப் பிரமாகார விருத்தியின் ஸ்திதி, ஞானரட்சை என்னும் சத்தத்திற்கு அர்த்தமாம்.

௨. தவம் :—மன இந்திரியங்களின் ஏகாக்கிரத்தன்மை அல்லது மனம்வாக்குக்காயங்களின் சம்யமம் (அடக்கம்).

௩. விசம்வாதமில்லாமை :—செற்பம் விதண்டையென்னும் வாதங்களில்லாமை.

௪. துக்கநிவர்த்தி :—திருஷ்ட (பிரத்தியட்ச) துக்கத்தின் நிவர்த்தி.

௫. சுகப்பிராப்தி: — நிராவரணமும் பரிபூரணமும் விருத்தியோடுகூடியதுமாகிய ஜீவன்முக்தி விலட்சண ஆனந்தத்தின் பிராப்தி.

ஞானேந்திரியம் :—௧. சுரோத்திரம். ௨. துவக்கு. ௩. சட்சு. ௪. சிங்ஙுவை. ௫. ஆக்கிராணம்.

திருஷ்டாந்தம் :—ஜகத்தின் மித்தியாத்துவத்தில் திருஷ்டாந்தம் ஐந்துவிதமாம்.

௧. சுத்தியிலிரசதம். ௨. இரச்சுவி

ல் சர்ப்பம். ௩. தாணுவிற்புருடன். ௪. ஆகாயத்திற்கருமை.

௫. மரீசிகையில்ஜலம். மத்தியான காலத்தில் மருஸ்தலத்தில்(ஊஷரபூமியில்) பிரதிபிம்பித்த சூரியனது கிரணம், மரீசி என்று சொல்லப்படும். அதில் தோற்றும் ஜலத்தை, மிருகஜலமென்றும் கானற் சலமென்றும் பேய்த்தேரென்றும் கூறு வர்.

ஸ்தூலபூதம் :—க. ஆகாசம். உ. வாயுவு. ௩. அக்கினி. ௪. அப்பு. ௫. பிருதிவி.

நியமம் :—க. சௌசம். உ. சந் தோஷம். ௩. தவம். ௪. சுவாத்தியாய ம். தனது சாகையின் வேதபாகத்தை யாவது கீதைமுதலியவற்றையாவது நித் தியம் ஓதுதல்.

௫. ஈசுவரப்பிரணிதானம் :—ஓங்கார

முதலிய ஈசுரனது உபாசனை.

பிரளயம் :—

க. நித்தியப்பிரளயம் :— க்ஷணத்திற்கு க்ஷணம் சகலகாரியங்களும் தீபச்சுடரைப்போல நாசமாதல் அல்லது சுழுத்தி.

உ. நைமித்திகப்பிரளயம் :— பிரமாவின் இராத்திரியாகிய நிமித்தத்தாலுண்டாகும் பூமுதலிய கீழ்மூன்றுலங்களின் நாசம்.

ரு. தினப்பிரளயம் :—பிரமாவின் தினத்தில் பதினன்கு மனுவந்திரங்களுண்டாகின்றன. அவை ஒவ்வொன்றின் நாசம், தினப்பிரளயமாம். இதனையே அவாந்திரப்பிரளயமென்றும் மனுவந்திரப்பிரளயமென்றும் கூறுவர். சிலர் இதனையே நைமித்திகப்பிரளயமென்றும் கூறுவர்

சு. மகாப்பிரளயம் :— பிரமாவின் நூறுவருஷத்திற்குப் பிறகு பிரமதேவருடன் ஆகாயமுதல் சர்வபூதங்களும் நாசமாகுதல்.

ரு. ஆத்தியந்திகப்பிரளயம்:—காரணத்தோடு சகத்திற்கும் ஞானத்தினுல் உண்டாகும் பாதம் (அத்தியந்த நிவர்த்தி).

பிராணன்முதலியன :—

க. பிராணன். உ. அபானன். ந. வியானன். சு. உதானன். ரு. சமானன்.

பிராந்தி :—(சு-வதுகலையைப் பார்க்க).

க. பேதப்பிராந்தி. உ. கர்த்திருத்துவப்பிராந்தி. ந. சங்கப்பிராந்தி. சு. விகாரப்பிராந்தி. ரு. சத்தியத்துவப்பிராந்தி.

பிராந்திநிவர்த்தி திருஷ்டாந்தம்:—(சு-வதுகலையைப்பார்க்க). க. பிம்பப்பிரதிபிம்பம். உ. சிவப்புஸ்படிகம். ந.

கடாகாசம். ச. இரஜ்ஜுசர்ப்பம். ரு. கனககுண்டலம்.

பேதம் :—க. ஜீவேசுவரபேதம். ஜீவஜீவ பேதம். ந. ஜீவஜடபேதம். ச. ஈசஜடபேதம். ரு. ஜடஜடபேதம்.

மகாயஞ்ஞம் :—க. தேவயஞ்ஞம். உ. இருஷியஞ்ஞம். ந. பிதிர்யஞ்ஞம். ச. மானுஷயஞ்ஞம். ரு. பூதயஞ்ஞம்.

யோகபூமி :—

க. க்ஷேபம் :—இராகத்துவேஷாதிகளால் சித்தம் சலித்தல்.

உ. விட்சேபம் :—பகிர்முகமாகிய சித்தம் ஒவ்வொருக்கால் தியானத்தோடு கூடியிருத்தல். அது க்ஷேபத்தினும் விசேஷமாகிய விட்சேபமாம்.

ந. மூடம் :—நித்திரை தந்திரை (தூக்கத்தின் ஆதியில் உண்டாகும் சோம்ப

ல்) முதலியவற்ருேடுகூடியதன்மை.

ச. ஏகாக்கிரம் :—ரு. நிரோதம்.

வசனமுதலியன :—

௧. வசனம். ௨. ஆதானம் (ஏற்றல்). ௩. கமனம். ச. இரதிபோகம். ரு. மலநீக்கம்.

அறுவகைப்பதார்த்தங்கள்.

அசிங்குவத்தன்மைமுதலியன :— சன்னியாசியின் தர்மவிசேஷம்.

௧. அசிங்குவத்தன்மை :—சுவைவிஷயத்தில் விருப்பமில்லாமை.

௨. நபும்ஸகத்துவம் :— குமரி தருணி (பதினறு வயசுள்ளவள்) விருத்தை என்னு ஸ்திரீகளிடத்தில் சமத்துவம் (விகாரமில்லாமை).

௩. பங்குத்துவம் (முடம்) :—ஒரு தினத்தில் ஒருயோசனை தூரத்திற்கு அதிகமாய் நடவாதிருத்தல்.

ச. அந்தத்துவம் (குருடு) :— ஒரு தனுசு அளவிற்கு அதிகமாகப் பார்வையை விடாதிருத்தல்.

ரு. பதிரத்துவம் (செவிடு) :—வீண் வார்த்தைகளைக் கேளாதிருத்தல்.

சா. மூக்தத்துவம் (அறியாமை) :— வியவகாரமில்லாதிருத்தல்.

அநாதிபதார்த்தம் :—உற்பத்தியில்லாத பதார்த்தம்.

க. ஜீவன். உ. ஈசன். ந. சுத்தசேதனம். ச. அவித்தை. ரு. சேதனுவித்தைகளின் சம்பந்தம். சா. அவற்றின்பேதம்.

அரிவர்க்கம் :—பரலோகத்திற்கு விரோதமுடைய ஆந்தர (உள்ளிருக்கும்) சத்துருக்களின் சமூகம்.

க. காமம் :—கிடைத்த வஸ்துவை அனுபவிக்கும் இச்சை.

௨. குரோதம் :— துவேஷம்.

௩. உலோபம் :— கிடையாதவஸ்துவை அடையவேண்டுமென்னுமிச்சை.

௪. மோகம் :—ஆன்மானன்மாக்களின் அல்லது காரியாகாரியங் (நன்மை தீமை) களின் அவிவேகம்.

௫. மதம் :—கருவம் (அகங்காரம்).

௬. மச்சரம் :—அன்னியரது மேன்மையைச் சகியாமை.

அவஸ்தை :—

௧. சிசு :—தேகத்தின் ஒருவருஷகாலம்.

௨. கௌமாரம் :— தேகத்தினைந்து வருஷகாலம்.

௩. பௌகண்டம் :—தேகத்தின் ஆறுமுதல் பத்துவருஷம்.

௪. கிசோரம் :— பதினொன்றுமுதல் பதினைந்து வருஷம்.

ரு. யௌவனம் :— பதினாறுமுதல் நாற்பது வருஷம்.

சா. ஜரை (மூப்பு) :— நாற்பதிற்கு மேற்பட்ட காலம்.

இரசம் :—க. தித்திப்பு. உ. புளிப்பு. ங. உவர்ப்பு. ச. கைப்பு. ரு. துவர்ப்பு. சா. கார்ப்பு.

இலிங்கம் :—வேதவாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயிக்கும் இலிங்கம்.

க. உபக்கிரமம் உபசம்மாரம் :—ஆதி அந்தங்களின் ஏகரூபத்துவம்.

உ. அப்பியாசம் :— அடிக்கடி படித்தல்.

ங. அபூர்வதை :— அலௌகிகத்தன்மை.

ச. பலம் :—மோட்சம்.

ரு. அர்த்தவாதம் :—துதி.

சா. உபபத்தி :— அநுகூல திருஷ்

டாந்தம்.

ஈசுவரனதுபகம் (ஐசுவரியம்) :—க. சமக்கிரஐசுவரியம். உ. சமக்கிரதர்மம். ங. சமக்கிரகீர்த்தி. ச. சமக்கிரஇலட்சுமி. ரு. சமக்கிரஞானம். சா. சமக்கிரவைராக்கியம்.

ஈசுவரனது ஞானம் :—க. உற்பத்தி உ. பிரளயம். ங. கதி. ச. ஆகதி :—இந்தவுலகத்தில் ஜீவனது வரவாகிய ஆகதி யாதோ, அதன் ஞானம். ரு. வித்தை. சா. அவித்தை.

ஊர்மி:—சம்சாரசாகரத்தின் அலைகள். க. ஜனனம். உ. மரணம். ங. பசி. ச. தாகம். ரு. சந்தோஷம். சா. சோகம்.

கன்மம் :—நித்தியகன்மம்.

க. ஸ்நாநம். உ. ஜபம். ங. ஓமம். ச. அர்ச்சனம் :— தேவபூஜை.

ரு. ஆதித்தியம் :—போஜன சமயத்தி
ல் வந்த அப்பியாகதர்களின்பொருட்டுச்
செய்யும் அன்னதானம். சூ. வைசு
வதேவம் :—அக்கினியில் எறியப்பட்ட
திரவியத்தின் ஓமம்.

கௌசிகம் :—அன்னமயகோச (தேக)
த்திலுண்டாகும் பதார்த்தங்கள்.

க. தோல். உ. மாமிசம். ந. இ
ரத்தம். ச. மேதை. ரு. மச்சை.
சூ. எலும்பு.

சமமுதலியன :—க. சமம். உ. த
மம். ந. உபாதி. ச. திதிக்ஷை.
ரு. சிரத்தை. சூ. சமாதானம்.

சமாதி :— க. பாகியதிருசியானுவி
த்தம். உ. ஆந்தரதிருசியானுவித்தம்.
ந. பாகியசத்தானுவித்தம். ச. ஆந்
தரசத்தானுவித்தம். ரு. பாகியநிருவி
கற்பம். சூ. ஆந்தரநிருவிகற்பம்.

சாஸ்திரம் :—க. சாங்கியம். உ. யோகம், ங. நியாயம். ச. வைசேஷிகம். ரு. பூர்வமீமாஞ்சை. சு. உத்தரமீமாஞ்சை.

சூத்திரம் :—க. ஜைமினீயம். உ. ஆசுவலாயனம். ங. ஆபஸ்தம்பம். ச. போதாயனம். ரு. காத்தியாயனம். சு. வைகானசீயம்.

பிரமாணம் :—

க. பிரத்தியட்சம் :— பிரத்தியட்சப்பிரமாவின் கரணம், பிரத்தியட்சப்பிரமாணமாம். அப்படிப்பட்டவை சுரோத்திரமுதலிய ஞானேந்திரியம் ஐந்தாம்.

உ. அனுமானம் :— அனுமிதிப்பிரமாவின் கரணமாகிய இலிங்கத்தின் ஞானம், அனுமானப்பிரமாணமாம். அது பருவதத்தில் அக்கினியை அறிதற்கேதுவாகிய புகைவடிவாகிய இலிங்கத்தி

ன் ஞானம்போல.

௩. உவமானம் :—உவமிதிப்பிரமாவி ன் கரணமாகிய சாதிருசிய ஞானம், உவ மானப்பிரமாணமாம். ஆமா (காட்டுப்ப சு) விலுள்ள பசுவினது சாதிருசிய ஞா னம்போல.

௪. சத்தம் :—சாப்திப்பிரமாவின் கர ணமாகிய இலௌகீக வைதீக சப்தங்கள், சத்தப்பிரமாணமாம்.

௫. அருத்தாபத்தி :—அருத்தாபத்தி ப் பிரமாவின் கரணமாகிய உபபாத்திய த்தின் ஞானம், அருத்தாபத்திப்பிரமாண மாம். பகலிலுண்ணாத பருத்தபுருஷன து இராத்திரி போஜனத்தை அறிவிக்கும் அருத்தாபத்திப்பிரமாவிற் கேதுவாகிய ப ருமனி (உபபாத்தியத்தி) ன் ஞானம் போல.

௬. அநுபலப்தி :—அபாவப்பிரமாவி

ன் காரணமாகிய பதார்த்தத்தின் அப்பிர தீதி (தோற்றரவின்மை) அநுபலப்திப் பிரமாணமாம். வீட்டில் குடத்தின் அ பாவஞானத்திற்கேதுவாகிய குடத்தின் அப்பிரதீதிபோல.

பிராந்தி :—க. குலம். உ. கோ த்திரம். ௩. ஜாதி. ச. வருணம். ரு. ஆசிரமம். சு. பெயர்.

விகாரம் :—க. பிறப்பு. உ. இரு ப்பு :— முன்னில்லாததின் இருக்கை. ௩. விருத்தி. ச. பரிணமம். ரு. க்ஷயம். சு. நாசம்.

வேதாங்கம் :—க. சிக்ஷை. உ. க ற்பம். ௩. வியாகரணம். ச. நிரு த்தம். ரு. சந்தசு. சு. ஜோதிஷம்.

எழுவகைப்பதார்த்தங்கள்.

அதலமுதலியன :—க. அதலம். உ. விதலம். ௩. சுதலம். ச. தலாதல

ம். ௫. இரசாதலம். ௬. மகாதலம்
௭. பாதாளம்.

அவஸ்தை:—சிதாபாசனுக்குக் கிரமமாக (௩) பந்தத்திற்கும் (௪) மோட்சத்திற்கும் ஏதுவாகும் தசை.

௧. அஞ்ஞானம்:—“ எனக்குத்தெரியவில்லை” என்னும் விவகாரத்திற்கு ஏதுவாகும் ஆவரண விட்சேப ஏதுவாகிய சக்திகளையுடைய அநாதி அநிர்வசனீய பாவரூபமாகிய பதார்த்தம்.

௨. ஆவரணம் :—“ இல்லை, தோற்றவில்லை” என்னும் விவகாரத்திற்கு ஏதுவாகிய அஞ்ஞானத்தின் காரியம்.

௩. விட்சேபம் :—தர்மத்தோடு கூடிய பிரபஞ்சமும் அதனது ஞானமும்.

௪. பரோட்சஞானம்.

௫. அபரோட்சஞானம்.

௬. சோகநிவர்த்தி:—விட்சேபநாசம்

(பிராந்திநிவர்த்தி).

எ. திருப்தி :—ஞானத்தாலுண்டாகும் சந்தோஷம்.

சைதன்னியம் :—

க. ஈசுவரன் :—மாயாவிசிஷ்ட சேதனம்.

உ. ஜீவன் :—அவித்தியாவிசிஷ்டசேதனம்.

ங. சுத்தம் :—நிருபாதிக சேதனம்.

ச. பிரமாதா :—பிரமாதாவாகிய அந்தக்கரணத்தால் அவச்சின்ன சேதனம்.

ரு. பிரமாணம் :—இந்திரியவாயிலாக சரீரத்தினின்றும் வெளியே புறப்பட்டு, கடமுதலிய விஷயம்வரையிலும் பொருந்தும் விருத்தி, பிரமாணமாம். அதனால் அவச்சின்ன (வரைப்பட்ட) சேதனம், பிரமாண சேதனமாம்.

சு. பிரமேயம் :—பிரமேயமாகிய க

டமுதலிய விஷயத்தால் அவச்சின்ன (ம
ற்றவற்றினின்றும் வேறுபிரிக்கப்பட்ட)
சேதனம்.

எ. பிரமா :— கடமுதலிய விஷயாகா
ரமாகிய விருத்தி, பிரமாவாம். அதனால்
அவச்சின்னசேதனம், அல்லது அதில் பி
ரதிபிம்பித்த சேதனம், பிரமாசேதனமா
ம். இதனையே பிரமிதிசேதனமென்று
ம், பல்சேதனமென்றும் கூறுவர்.

ஞானபூமி :—(இதன் பதின்மூன்றாவ
து கலையிற் காண்க). க. சுபேச்சை.
உ. விசாரணை. ௩. தனுமானசி. ௪.
சத்துவாபத்தி. ௫. அசம்சத்தி. ௬.
பதார்த்தாபாவினி. எ. துரியம்.

தாது :—

க. இரசம்:—புசிக்கப்பட்ட அன்னம்
சூட்சுமம் (புண்ணியபாவம்), மத்திமம்
(அன்னத்தின் சாரம்), தூலம்(மலம்) எ .

ன்று மூன்றுவிதமாக விபாகமாகின்றது. அவற்றிலுள்ள மத்திமவிபாகம் இரசமாம்.

௨. இரத்தம். ௩. மாமிசம். ௪. மேதை :—கொழுப்பு. ௫. மச்சை:—எலும்பிலுள்ளமூளை. ௬. எலும்பு. ௭. வீரியம்.

திரவியமுதலியபதார்த்தங்கள் :— நியாயமதத்தில் திரவியமுதலிய ஏழுபதார்த்தங்கள் ஒப்பப்பட்டிருக்கின்றன.

க. திரவியம் :—அதாவது நியாயமதத்தில் ஒப்பியிருக்கும் (க) பிருதிவி. (௨) ஜலம். (௩). அக்கினி. (௪). வாயு. (௫). ஆகாசம். (௬). காலம். ௭. திக்கு. (அ). ஆன்மா. (௯). மனம் என்னும் ஒன்பது திரவிய (குணத்திற்கு ஆசிரயமாகிய பதார்த்த) ங்கள்.

௨. குணம் :—நியாயமதத்தில் ஒப்பி

யிருக்கும். (க). உருவம். (உ). இரசம். (ங). கந்தம். (ச). பரிசம். (ரு). சங்கை. (சு). பரிமாணம் (எ). வேற்றுமை. (அ). சையோகம். (கூ). விபாகம். (௰). பரத்துவம். (௰க). அபரத்துவம், (௰உ). குருத்துவம். (௰ங). திரவத்துவம். (௰ச). சிநேகம். (௰ரு). சத்தம். (௰சு). புத்தி. (௰எ). சுகம். (௰அ). துக்கம். (௰கூ). இச்சை. (உ௰). வெறுப்பு. (உ௰க). முயற்சி. (உ௰உ). தர்மம். (உ௰ங). அதர்மம். (உ௰ச). வாசனை என்னும் இருபத்துநான்கு குணங்கள்.

ங. கன்மம் :—நியாயமதத்தில் ஒப்பப்பட்டிருக்கும். (க). உட்சேபணம் (எழும்பல்). (உ). அபக்ஷேபணம் (வீழ்தல்). (ங). ஆகுஞ்சனம் (வளைதல்). (ச). பிரசாரணம் (நிமிர்தல்). (ரு):

கமனம் (நடத்தல்) என்னுமைந்துவித கன்மங்கள்.

ச. சாமானியம் :— நியாயமதத்தில் ஒப்பப்பட்டிருக்கும் பரம் (சத்தை) அபரம் (கடத்துவமுதலியன) என்னும் இருவகை ஜாதி.

ரு. சமவாயம் :— வேதாந்தமதத்தில் எங்கெங்கே தாதான்மியசம்பந்தம் ஒப்பியிருக்கின்றார்களோ, அங்கங்கே நியாயமதத்தில் ஒப்பியிருக்கும் சம்பந்தவிசேஷம் (நித்தியசம்பந்தம்), சமவாயமாம்.

சு. அபாவம் :—(க). பிராகபாவம். (உ). பிரத்துவம்சாபாவம். (ரு). அன்னியோன்னியாபாவம். (ச). அத்தியந்தாபாவம். (ரு). சாமயிகாபாவம் என்னும் ஐந்துவிதமாகிய இல்லை என்னும் ஞானத்திற்கு விஷயமாகும் பதார்த்தங்கள்.

எ. விசேஷம் :—நியாயமதத்தில் பரமாணுக்களின் மத்தியில் அநேக அவசாசரூப பதார்த்தங்கள் ஒப்பியிருக்கின்றூர்கள். அவை விசேஷமாம்.

பூலோகமுதலியன :—

க. பூலோகம். உ. புவர்லோகம். ந. சுவர்லோகம். ச. மகாலோகம். ரு. ஜனலோகம். சா. தபோலோகம். எ. சத்தியலோகம்.

மௌனமுதலியன :—க. மௌனம். உ. யோகாசனம். ந. யோகம். ச. திதீட்சை. ரு. ஏகாந்தசீலத்துவம். சா. ஆசையின்மை. எ. சமத்துவம்.

உருவம் :—க. வெண்மை. உ. கருமை. ந. பொன்மை. ச. செம்மை. ரு. பசுமை. சா. புகைமை. எ. சித்திரம்.

விசனம்; —

சு. சரீரம். உ. மனம். ௩. கு ரோதம். ௪, விஷயம். ரு. தனம். ௬. இராச்சியம். எ. சேவகவிசனம்.

எண்வகைப்பதார்த்தங்கள்.

சப்தசக்திக்கிரகண ஏது :—க. வியா கரணம். உ. உபமானம். ௩. கோ சம். ௪. ஆப்தவாக்கியம். ரு. விரு த்தவிவகாரம். ௬. வாக்கியசேஷம். எ. விவரணம். அ. நிச்சயிக்கப்ப ட்டபதத்தின் சந்நிதி (அண்மை).

சமாதியினங்கம் :—க. இயமம். உ. நியமம். ௩. ஆசனம். ௪. பிராணா யாமம். ரு. பிரத்தியாகாரம். ௬. தா ரணை. எ. தியானம். அ. சவிகற்ப சமாதி.

பாசம் :—க. தயை. உ. சங்கை. ௩. பயம். ௪. வெட்கம். ரு. நிந் தை. ௬. குலம். எ. சீலம். அ.

தனம்.

பிரகிருதி :—க. பிருதிவி. உ. ஜலம். ங. அக்கினி. ச. வாயு. ரு. ஆகாசம்.

சு. மனம் :—இங்கே மனமென்றதனுல் சமஷ்டிமனமாகிய அகங்காரம் கொள்ளப்படும்.

எ. புத்தி :—இங்கே புத்தி என்றதனுல் சமஷ்டிபுத்தியாகிய மகதத்துவம் கொள்ளப்படும்.

அ. அகங்காரம் :—இங்கே அகங்காரமென்றதனுல் மகதத்துவத்திற்குமுன் சுத்த அகங்காரத்திற்குக் காரணமாயுள்ள அஞ்ஞானமாகிய மூலப்பிரகிருதி கொள்ளப்படும்.

பிரமசரியத்தினங்கம் :—

க. ஸ்திரீயின்தரிசனம். உ. பரிசனம். ங. கேளி :—விளையாட்டு. ச.

கீர்த்தனம். ரு. குய்யபாஷணம் (இரகசியமாகப் பேசுதல்). சா. சங்கற்பம் :—சிந்தனம் (ஸ்மரணம்). எ. நிச்சயம். அ. கிரியாஜன்னியசுகம் என்னும் அஷ்டமைதுனத்தினும் விபரீதம். அதாவது இவற்றின் இன்மை.

புரி :—க. ஞானேந்திரியபஞ்சகம். உ. கன்மேந்திரியபஞ்சகம். ங. அந்தக்கரணசதுஷ்டயம். ச. பிராணாதிபஞ்சகம். ரு. பூதபஞ்சகம். சா. காமம். எ. மூவிதகன்மம். அ. வாசனை.

மதம் :—க. குலம். உ. சீலம். ங. தனம். ச. அழகு. ரு. யௌவனம். சா. வித்தை. எ. தவம். அ. இராச்சியம்.

மூர்த்திமதம் :—

க. பிருதிவிமதம் :—அஸ்திமாமிசமு

தலிய பிருதிவியினது தத்துவங்களினபி மானம்.

உ. ஜலமதம் :—சுக்கில சுரோணித முதலிய ஜலத்தினது தத்துவங்களின பிமானம்.

ங. தேயுமதம் :—பசிமுதலிய தேயு வினது தத்துவங்களின்மிகுதி.

ச. வாயுமதம் :—நடத்தல் ஓடுதல் முதலிய வாயுவின் தத்துவங்களோடுகூ டியதன்மை.

ரு. ஆகாயமதம் :— காமக்குரோத முதலிய ஆகாயத்தின் தத்துவங்களோடு கூடியதன்மை.

சா. சந்திரமதம் :— குளிர்ச்சியாகிய சந்திரனது குணத்தோடுகூடியிருத்தல்.

எ. சூரியமதம் :— சந்தாப (குரோ தாதிரூப) மாகிய சூரியனது குணத்தோ டுகூடியிருத்தல்.

அ. ஆன்மமதம் :—வித்தை தனம் குலமுதலிய ஆன்மாவினது சம்பந்திகளி னபிமானம்.

ஒன்பதுவகைப்பதார்த்தங்கள்.

சம்சாரம் :—க. ஞாதா. உ. ஞா னம். ௩. சட்சு. ௪. போக்தா. ரு. போக்கியம். சா. போகம். எ. கர்த் தா. அ. கரணம். கூ. கிரியை.

தத்துவம் :—ஓர்மகாத்துமாவினது ம தத்தில் ஒப்பியிருக்கும் இலிங்கதேகத்தி ன் ஒன்பது தத்துவங்கள்.

க. சுரோத்திரம். உ. துவக்கு. ௩. சட்சு. ௪. சிங்ருவை. ரு. கி ராணம். சா. மனம். எ. புத்தி. அ. சித்தம். கூ. அகங்காரம்.

பத்துவகைப்பதார்த்தங்கள்.

சிங்காரம்முதலிய ரசம் :—க. சிங்கா ரம். உ. வீரம். ௩. கருணை. ௪

அற்புதம். ௫. ஆசியம் (சிரிப்பு). ௬. பயங்கரம். ௭. விபற்சம் (அருவருப்பு). ௮. இரௌத்திரம். ௯. சாந்தம். ௰. பிரியபக்தி அல்லது ஞானம்.

நாடியும் தேவதையும் :—

௧. இடை (சந்திரன்) இடதுமூக்கிலுள்ள சந்திரநாடி. விஷ்ணுதேவதை.

௨. பிங்கலை (சூரியன்) வலதுமூக்கிலுள்ள சூரியநாடி. பிரமா தேவதை.

௩. சுழுமுனை (மத்திமை) நாசியின் மத்தியிலுள்ள நாடி. உருத்திரன் தேவதை.

௪. காந்தாரி (வலது நேத்திரம்). இந்திரன்.

௫. அத்திசிங்குவை (இடது நேத்திரம்). வருணன்.

௬. பூஷை (வலது காது). ஈசுவரன்.

௭. யசஸ்விநி (இடது காது). பிரமா.

அ. குகு (குதம்). பிருதிவி.
கூ. அலம்புடை. சூரியன்.
௰. சங்கினி (நாபி). சந்திரன்.

பதினொருவகைப்பதார்த்தங்கள்.

ஞானசாதனம் :—க. விவேகம். உ. வைராக்கியம். ௩. ஷட்சம்பத்தி. ௪. முமூட்சுத்துவம். ரு. ஆசிரியர்வழிபாடு (விதிபூர்வமாக குருவைச் சரணமடைதல்). ௬. சிரவணம். எ. தத்துவ ஞானுப்பியாசம். அ. மனனம். கூ. நிதித்தியாசனம். ௰. மனோநாசம் :—இங்கே இரஜோதமோகுணங்களால் சத்துவகுணம் திரஸ்கரிக்கப்படுதலாகிய மனதின் ஸ்தூலத்தன்மை, மனமெனப்பட்டது. பிரமாப்பியாசத்தின் மிகுதிப்பாட்டால் இரஜோதமோகுணங்கள் திரஸ்கரிக்கப்பட்டுச்சத்துவகுணம் ஆவிற்பவித்தல், மனோநாசமாம். ௰க. வாசனுட்சயம்.

## பன்னிரண்டுவகைப்பதார்த்தங்கள்

அஞான்மாவின் தர்மம் :— க. அநி த்தியம். உ. விநாசி. ௩. அசுத்தம். ௪. நாநா. ரு. க்ஷேத்திரம். ௬. ஆசிரிதம். எ. விகாரி. அ. பரப்பிர காசியம் :— (மற்றொன்றால் பிரகாசிக்க ப்படுவது). ௯. ஏதுவுடையது. ௰. வியாப்பியம் :—பரிச்சின்னம் (தேசகால வஸ்துவினாலாகிய பரிச்சேதமுடையது). ௰க. சங்கமுடையது. ௰உ. மறை ப்புள்ளது.

ஆன்மாவின் தர்மம் :— க நித்திய ம் :—உற்பத்திநாசமில்லாமை. உ. அ வ்வியயம் :—குறைதலு நிறைதலுமில் லாதது. ௩. சுத்தம் :—மாயை அவி த்தையாகிய மலமில்லாதது. ௪. ஏக ம் :— சஜாதீய பேதமில்லாதது. ரு. க்ஷேத்திரஞ்ஞன் :— சரீரமாகிய க்ஷே

த்திரத்தின் ஞாதா. சு. ஆசிரயம் :—அதிஷ்டானம். எ. அவிகாரி. அ. சொப்பிரகாசம் :—தனது பிரகாசத்தில் அன்னியப் பிரகாசங்களின் அபேட்சையில்லாததாய், எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பது. கூ. ஏது :—விலைக்குக் காரணமாகிய சிலந்தியைப்போலவும், நகத்து ற்குக் காரணமாகிய புருஷனைப்போலவும், ஜகத்திற்கு அபின்னநிமித்த[விவர்த்த] உபாதானகாரணமாம். ய. வியாபகம் :—அபரிச்சின்ன (பரிபூரண) ம். யக. சங்கமில்லாதது :—சஜாதீய விஜாதீய சுகதசம்பந்தமில்லாதது. யஉ. அநாவிருதம் :—எவ்விதத்தாலு மறைப்பில்லாதது.

பிராமணனது வாதம் :—க. ஞானம், உ. சத்தியம். ந. சமம். ச. தமம். ரு. சுருதம் :— சாஸ்திராப்பியாச

ம். ௬. மாச்சரியமின்மை :—அன்னி யரது மேன்மையைச் சகியாமையாகிய மச்சரமில்லாதிருத்தல். ௭. நாணம். ௮. திதீட்சை. ௯. அசூயையில்லா மை :—குணத்தில் தோஷத்தை ஆரோ பித்தலாகிய அசூயையில்லாதிருத்தல். ௰ யஞ்ஞம். ௧௧. தானம். ௰௨. தைரியம் :—காமக்குரோதங்களின் வே கத்தைத் தடுத்தல்.

மகத்துவஎதுவாகியதர்மம் :—௧. செ ல்வம். ௨. அபிஜனம் :— குடும்பம். ௩ அழகு. ௪. தவம். ௫. சுருத ம் :—சாஸ்திராப்பியாசம். ௬. ஓஜ ம் :—இந்திரியங்களின் தேஜசு. ௭. தே ஜசு. ௮. பிரபாவம். ௯. பலம். ௰. பௌருஷம். ௰௧. புத்தி. ௰௨. யோ கம்.

பதின்மூன்றுவகைப்பதார்த்தங்கள்.

பாகவததர்மம் :—பகவத்பக்தர்களது தர்மம்.

க. சகாமகன்மபலத்தின் விபரீததரிசனம்.

உ. திரவியம் கிரகம் புத்திரன்முதலியவற்றைத் துக்கமென்றும் சலமென்றும் அறிதல்.

ங. பரலோகம் நிலையில்லாதது என்று அறிதல்.

ச. சத்தப்பிரமத்திலும் பரப்பிரமத்திலும் குசல (சாமர்த்திய) முள்ள குருவை நோக்கிச் செல்லல்.

ரு. குருவினிடத்தில் ஈசுவர புத்தியும் நிஷ்கபடசேவையும்.

சா. பரமேசுவரனிடத்தில் சகல கருமங்களையும் சமர்ப்பித்தல்.

எ. பக்தி வைராக்கியத்தோடு கூடிய சொரூபானுபவமும், சாதுசங்கமும்.

௯௬. வேதாந்தபதார்த்தசம்ஞாவர்- 365

அ. சௌசம், தவம், திதிக்ஷை, மௌனம்.

கூ. சுவாத்தியாயம், ஆர்ஜவம் (சரளசுபாவம்), பிரமசரியம், அஹிம்ஸை, துவந்துவசமத்துவம் (சீதோஷ்ணமுதலிய இருமைத் தர்மங்களைச் சகிக்கும் சுபாவம்).

௰. எங்கும் ஆன்மவடிவமாக ஈசுவரனைத் தரிசித்தல்.

௰க. கைவல்லியம் (தனிமையாயிருத்தல்), அனிகேதத்துவம் (வீடுகட்டாதிருத்தல்), ஏகாந்தம் (தனியிடம்), கந்தைவஸ்திரம், சந்தோஷம்.

௰உ. சருவபூதங்களிலும் ஆன்மாவின் ஐசுவரியமுடைமையைத் தரிசித்தலும், பகவத்வடிவமாகிய ஆன்மாவில் சகல பூதங்களையும் தரிசித்தலும்.

௰௩. ஜன்மம் கன்மம் வருணம் ஆசிர

மமுதலியவற்றால் தேகத்தில் நிரபிமானமும், தான் பிறனென்னும் புத்தியில்லாமையும்.

பதினான்குவகைப்பதார்த்தங்கள்.

ஞானேந்திரியங்களின் திரிபுடி.

| இந்திரியம். அத்தியான்மம். | தேவதை. அதிதெய்வம். | விஷயம். அதிபூதம். |
| --- | --- | --- |
| க. சுரோத்திரம். | திக்கு. | சத்தம். |
| உ. துவக்கு. | வாயு. | பரிசம். |
| ௩. சட்சு. | சூரியன். | உருவம். |
| ௪. சிங்குவை. | வருணன். | இரசம். |
| ௫. கிராணம். | அசுவினிகுமாரர். | கந்தம். |

கன்மேந்திரியங்களின் திரிபுடி.

| | | (கிரியை) |
| --- | --- | --- |
| ௬. வாக்கு. | அக்கினி. | வசனம். |
| ௭. பாணி. | இந்திரன். | ஏற்றலிடுதல். |
| ௮. பாதம். | வாமனர். | கமனம். |
| ௯. உபஸ்தம். | பிரஜாபதி. | இரதிபோகம் |

௰. குதம். இயமன். மலத்தியாகம்.

அந்தக்கரணம் நான்கின் திரிபுடி.

௰க. மனம். சந்திரன். சங்கற்பவிகற்பம்.

௰உ. புத்தி. பிரமன். நிச்சயம்.

௰௩. சித்தம். வாசுதேவன். சிந்தித்தல்

௰௪. அகங்காரம். உருத்திரன். அகந்தை.

பதினைந்துவகைப்பதார்த்தங்கள்.

மாயையின் பெயர் :—க. மாயை. உ. அவித்தை. ௩. பிரகிருதி. ௪. சக்தி. ௫. சத்யை. ௬. மூலை. ௭. தூலை. ௮. யோனி. ௯. அவ்வியக்தம். ௰. அவ்வியாகிருதம். ௰க. அஜை. ௰உ. அஞ்ஞானம். ௰௩. தமம் ௰௪. துச்சை. ௰௫. அநிர்வசனீயை.

பதினாறுவகைப்பதார்த்தங்கள்.

கலை: — க. இரணியகருப்பம். உ. சிரத்தை. ௩. ஆகாசம். ௪. வாயு

ரு. தேயு. சூ. ஜலம். எ. பிருதி
வி. அ. தசேந்திரியம். கூ. மனம்.
ய. அன்னம். யக. பலம். ய௨. த
வம். யங. மந்திரம். யச. கன்மம்.
யரு. உலகம். யசூ. பெயர்.

பதினாறும்கலை முற்றிற்று.

ஸ்ரீவிசாரசந்திரோதயம்

முற்றிற்று.